# கொங்கு வட்டாரச் சொல்லகராதி



தொகுப்பும் பதிப்பும்:

பெருமாள் முருகன்

**கொங்கு வட்டாரச் சொல்லகராதி**

தொகுப்பும் பதிப்பும்:
**பெருமாள்முருகன்**

உரிமை:
ஆசிரியருக்கு

முதற்பதிப்பு:
மே. 2000

பக்கங்கள்:
160

படங்கள்:
**உலகநாதன்**

அட்டை:
**பி.ர.சண்முகசுந்தரம்**

ஒளிஅச்சுக்கோவை:
**ஃபைன்லைன்,**
சென்னை-14

வெளியீடு:
**குருத்து**
தாய்த்தமிழ் பள்ளி வளாகம்,
கோபிசெட்டிபாளையம்,
ஈரோடு மாவட்டம்,
638 476.

*விலை:*
*ரூ. 60*

நூல் கிடைக்குமிடம்:

1. ***பெருமாள் முருகன்***
   *அய்யக்கவுண்டம்பாளையம், ஆண்டிபாளையம் (அஞ்சல்)*
   *கூட்டப்பள்ளி (வழி), திருச்செங்கோடு - 637 214, ✆ 04288 - 59337*

2. **தமிழோசை பதிப்பகம்**
   *797-ஈ, சிறீராம் மோகன் வணிக வளாகம்,*
   *சத்தி சாலை, காந்திபுரம், கோவை - 641 012.*



‘குப்பையில கெடந்தாலும் குண்டுமணி
மந்தையில கெடந்தாலும் மாணிக்கம்
என் பேரன்’
என்று பீற்றிக்கொண்ட
**பாட்டி பாவாயிக்கும்**
**பாட்டன் இராமசாமிக்கும்.**

# ‘அகராதி பிடிச்ச வேலை’

**‘கொ**ங்கு வட்டாரச் சொல்லகராதி’க்கு இப்படி ஒரு முன்னுரை எழுதி வெளியிட வேண்டும் என்பது பதினைந்து ஆண்டுக் கனவு. ஈரோட்டில் இருக்கும் சிக்கய்ய நாயக்கர் கல்லூரி (சி.என்.சி)யில் இளங்கலைத் தமிழிலக்கியம் படிக்க 1983 ஆம் ஆண்டு சேர்ந்தேன். அக்கல்லூரித் தமிழ்த்துறை ஆசிரியர்களின் புலமையும் கல்லூரி நூலகமும் என் ஆர்வத்தை ‘ஆனைத் தீ’யாகப் பெருக்கின. அப்போது நெஞ்சில் விழுந்த வித்து இந்த அகராதி. ‘நாட்டுப் புறவியல்’ என்னும் தாளை முனைவர் கி.நாகராசன் அவர்கள் நடத்தினார். ‘தமிழ் மொழி வரலாறு’ என்னும் தாள் அறிமுகப்படுத்தப்பட்டு ஓரிரு ஆண்டுகளே ஆகியிருந்தன. புதிய பாடம் என்பதற்கு அஞ்சாமல், மொழியியலைத் தாம் கற்றுக்கொண்டு அப்பாடத்தைச் செம்மையாகக் கற்றுத் தந்தார் திரு.க.ரா. பழநிசாமி அவர்கள். இவ்விரு பாடங்களும் ‘வட்டார வழக்கு’ பற்றிய உணர்வை எனக்கு உண்டாக்கின. அதே காலத்தில் *அன்னம் விடு தூது* என்னும் சிற்றிதழ் எனக்கு அறிமுகமாகியது. அதில் கி.ராஜநாராயணனின் ‘வட்டார வழக்குச் சொல்லகராதி’ பற்றிய அறிமுக உரையைப் படித்தேன். இவையெல்லாம் ஏற்படுத்திய தூண்டலினால் எனது குறிப்பேட்டின் பக்கமொன்றில் ‘சேலம் மாவட்டப் பேச்சு வழக்குச் சொற்கள்’ என்று தலைப்பிட்டுச் சொற்களைச் சேகரிக்கத் தொடங்கினேன். பேசுபவர்களின் வாயையே பார்த்துக் கொண்டிருப்பதும், புதிய சொற்களோ பழமொழிகளோ அவர்கள் பேச்சில் வெளிவரும்போது உடனேஓடிக் குறித்து வைத்துக்கொள்வதும் என என் சேகரம் நடைமுறை சார்ந்து நடந்தது. ‘இவனொருத்தன்... எதப்பாரு எழுதி எழுதி வெச்சிக்குவான்’ என்று பாட்டிகள் செய்யும் கிண்டல் இன்றுவரை தொடர்கிறது.

சேகரம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறிப்பேட்டின் பக்கங்களில் வளர்ந்து நிறைந்து கொண்டிருந்தது. என் முதுகலைப் படிப்பின் பொருட்டு கோவை, பூசாகோ கலை அறிவியல் கல்லூரி (PSG College of Arts and Science)க்கு வந்து சேர்ந்தேன். அங்குதான் ‘கொங்கு நாடு’ என்னும் பிரிவைப் பற்றிய அறிவு எனக்குக் கிடைத்தது. என் சேகரத்தின் தலைப்பு ‘கொங்குத் தமிழ்ச் சொல்லகராதி’ என்று

மாறிற்று. அக்கல்லூரியில் சேர்ந்ததால் எனக்குக் கிடைத்த பெரும் பயன்களில் ஒன்று, கோட்டூர் மலையாண்டி பட்டணத்தைச் (பொள்ளாச்சி) சேர்ந்த தி.சிவக்குமார் எனக்கு நண்பராகக் கிடைத்ததாகும். அவர் அப்போது முதுகலைப் பொருளியல் படித்துக் கொண்டிருந்தார். அவரிடம் எனது அகராதி முயற்சியைக் குறித்துப் பலமுறை பேசியிருக்கிறேன். அப்பேச்சில் ஒருமுறை, 'உங்கள் பக்கத்தில் வழங்கும் சொற்களைச் சேர்த்துக் கொடுங்களேன்' என்று வேண்டுகோள் விடுத்தேன். அதன் பயன், நான் படிப்பை முடித்துவிட்டு அங்கிருந்து வந்தபின் சந்திக்க வாய்த்த நாள் ஒன்றில் இருநூறு பக்கக் குறிப்பேடு ஒன்றை என்னிடம் நீட்டினார். அவ்வளவும் சொற்கள்.

ஆய்வின் பொருட்டு சென்னை வந்தேன். அப்போதுதான் கி.ரா.வின் 'வட்டார வழக்குச் சொல்லகராதி'யைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. அத்தோடு அகராதியியல் பற்றியும் பலவகையான அகராதிகள் குறித்தும் அறிந்து கொண்டேன். அட்டைகளில் சொற்களை எழுதி வைத்து வரிசைப்படுத்தும் முறைகளை எல்லாமும் தெரிந்துகொண்டேன். தொடர்ச்சியாக இல்லை என்றாலும் அவ்வப்போது இதற்கான வேலைகளைச் செய்துகொண்டேயிருந்தேன். கொங்கு வட்டார நாவல்கள், கொங்கு நாடு தொடர்பான நூல்கள் ஆகியவற்றை ஆய்வின் பொருட்டுச் சேகரிக்கவும் படிக்கவும் தேவை ஏற்பட்டிருந்தது. அந்நூல்களில் பயின்று வந்த வழக்குச் சொற்களை அடிக்கோடிட்டு எடுத்து எழுதிக் கொண்டேன். அவ்வகையில் எழுத்துப்பூர்வமான ஆதாரங்களும் இவ்வகராதிக்கு உருவாயின. அறைகளும் இடமும் மாறும் போதெல்லாம் அகராதிக்கான அட்டைக் கட்டுகளையும் சுமந்து சென்றேன். இதற்கிடையே தோழர் வளர்மதி, அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பித் தவித்திருந்த மனநிலை ஒன்றின்போது, இந்த அகராதியைப் படி எடுத்துத் தருகிறேன் என்று வாங்கிச் சென்றார். உயிரெழுத்து வரிசை வரை படி எடுத்துக் கொடுத்தார். அது பலவிதமான திருத்தங்களைச் செய்து கொள்வதற்கு வசதியாக இருந்தது.

இலக்கணத்தில் மிகுந்த புலமை கொண்டவரும் நான் மிகவும் மதிக்கும் பேராசிரியருமான திரு.பொற்கோ அவர்களிடம் இந்த அகராதியைப் பற்றிச் சொல்லி ஆலோசனை கேட்க ஒருமுறை சென்றேன். கைப்பிரதியை வரிசையாக வாசிக்கச் சொன்னார். ஓரிரு பக்கங்கள் வாசித்தேன். 'அடைப்பீ' என்றொரு சொல் வந்தது. அது அவருக்குப் பிடிக்கவில்லை. 'இடக்கரடக்கல்' பற்றி எனக்கு விளக்கிச்

சொல்லிவிட்டு, இதுபோன்ற சொற்களைத் தவிர்க்கும்படி கூறினார். நவீனச் சிந்தனைகளின்பால் ஈடுபாடு கொண்டுள்ளவர் என்றாலும் இலக்கணம் மீறாத பழைய மனோபாவம் கூடிய அவருடைய கருத்தோடு எனக்கு உடன்பாடில்லை. ஆனால் சொல்பதிவைப் பற்றியும் எழுத்து வழக்கு, பேச்சு வழக்கு குறித்தும் அவர் கூறிய சில யோசனைகள் ஆக்கப்பூர்வமாக எனக்குப் பயன்பட்டன.

இந்த அகராதியைப் பற்றிய பேச்சொன்றின்போது நண்பர் மாரிமுத்து (யூமா வாசுகி)விடம் இதற்கு ஓவியங்கள் வரைந்தால் நன்றாக இருக்கும் என்றேன். அவரும் மெனக்கெட்டு கேமரா ஒன்றோடு எங்கள் ஊருக்கு வந்தார். பல படங்களும் எடுத்தார். 'தோழமை இருள்' என்றொரு கவிதையும் எழுதினார். ஆனால் என்னுடைய இடமாற்றத்தின் காரணமாகவோ மாரிமுத்துவிடம் ஓவியத்தைக் கறக்க இயலாமை காரணமாகவோ அதனால் பயனில்லாமல் போய்விட்டது.

இடையில், எனக்கு வாசகராய் அறிமுகமாகி நண்பரான கோபி செட்டிபாளையத்திற்கு அருகிலுள்ள பிச்சாண்டாம்பாளையத்தைச் சேர்ந்த சண்முகசுந்தரம் இந்த அகராதியின் பொருட்டு சென்னை வந்து ஒரு வாரம் தங்கினார். சொல் பதிவுகளைப் பார்வையிட்டு ஆலோசனைகள் கூறியதோடு சில புதிய சொற்களின் சேர்க்கைக்கு உதவினார். சில பகுதிகளைப் படியெடுத்தும் கொடுத்தார்.

சென்னையை விட்டு வரும் தருவாயில் அகராதியை அட்டை வடிவிலேயே சுமந்து கொண்டுவரப் பிரியமில்லாமல், தாளில் ஏற்றிவிட முனைந்தேன். என்னுடைய அன்பு மாணவர்களும் நண்பர்களுமாகிய பொன் வீர. கண்ணன், குமார் ஆகிய இருவரும் என்னுடன் ஒரு வாரம் வந்து தங்கி இரவும் பகலுமாய்ப் படி எடுத்தனர். அவர்களோடு அவ்வப்போது இணைந்துகொண்டவர் வே.வேலு.

ஆத்தூர் (சேலம்)தான்இதற்கொரு விடிவுகாலத்தை ஏற்படுத்தும் இடமாக அமைந்தது. வெளியீட்டு வாய்ப்பு கனிந்து வந்ததால், விரைவில் படியெடுக்க வேண்டி இருந்தது. என்னுடைய மாணவ நண்பர்கள் ஆ.சின்னதுரையும் இரா.மணிகண்டனும் சளைக்காமலும் ஆர்வத்தோடும் பத்து நாட்கள் இடைவிடாது எழுதிப் படி எடுத்துக் கொடுத்தனர்.

இந்த அகராதி வேலையைப் பற்றிக் காணும் போதெல்லாம் விசாரித்து விரைந்து முடிக்க உந்துதல் கொடுத்தவர் எனது ஆசிரியர் திரு.கே.எஸ்.கமலேசுவரன் அவர்கள்.

இவ்வாறு ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு வகையில் உதவிய அனைவர்க்கும் நன்றி.



நூலென்றை வெளியிடுவது என்பது தமிழ்ச் சூழலில் அவ்வளவு சுலபமானதில்லை. அகராதி வேலையில் சலிப்பும் சோர்வும்கொண்டு அவ்வப்போது 'கெடக்கட்டும்' என்று போட்டு வைத்ததற்கு முக்கிய காரணம், வெளியீட்டு வாய்ப்பு இன்மையே. இந்த ஆண்டு இறுதி, இந்த நிகழ்ச்சி நடப்பதற்குள் என்றெல்லாம் கெடு வைத்துக்கொண்டு மும்முரமாக வேலை தொடங்குவேன். சில நாட்களில் 'இப்போது செய்து என்ன, வெளியிடவா முடியும்' என்ற எண்ணம் மேலோங்கி வேலைகளை முடக்கிவிடும்.

என்னுடைய நூல்கள் அனைத்தும் தனிப்பட்ட முயற்சியால் வெளியிடப்பட்டன. தோழர் ந.திருஞானம் (திருஞி) செய்த அடிப்படை உதவிதான் முக்கியமாகப் பயன்பட்டது. அகராதி வெளியீட்டுக்கும் அவரைச் சிரமப்படுத்த நான் விரும்பவில்லை.

ஏதாவது பதிப்பகத்தாரிடம் கொடுத்துவிடலாம் என்ற எண்ணம். கி.ரா.வின் அகராதியை வெளியிட்ட அன்னம் பதிப்பகத்தை அணுகலாம் என்னும் யோசனையில் நண்பர் கதிரிடம் கேட்டபோது, அவருடைய பதில் சிறிதும் உற்சாகம் தரவில்லை. கி.ரா.வின் அகராதி விற்பனை ஆகவில்லை என்றும் அதில்போட்ட பணத்தை எடுப்பது பெரும் சிரமமாகிவிட்டது என்றும் கூறினார். அவருடைய பதில் கொடுத்த பயம் இப்போதும் இருக்கத்தான் செய்கிறது. சுயமாகப் பணம் திரட்டி வெளியிடும் எண்ணம் முடங்கியதற்கும் இந்த அச்சம்தான் காரணம்.

இப்போது இந்த வெளியீடு சாத்தியமாகி இருப்பதற்குக் காரணம் மூவர். முதலாமவர், விடியல் பதிப்பகத் தோழர் பெ.சிவஞானம் அவர்கள். என்னுடைய 'ஏறுவெயில்' நாவலின் இரண்டாம், மூன்றாம் பதிப்புகளை மிகுந்த முயற்சி எடுத்து விற்பனை செய்துள்ள அவர், கணிசமான தொகையை எனக்குக் கொடுத்தார். அந்தத் தொகை இப்போது இந்த அகராதிக்குக் 'கடைகாலாக'ப் பயன்படுகிறது.

இரண்டாமவர், கொங்கணாபுரம், ஆட்டுக்காரன் தோட்டத்தில் செயல்படும் 'கொடைமாட்சி அறக்கட்டளை'யைச் சேர்ந்த திரு. ஆயிக்கவுண்டன் அவர்கள். அகராதியைப் பற்றிய செய்திகளை அறிந்தவுடன் மிகுந்த ஆர்வம்கொண்டு 'இப்படிப்பட்ட நூல் விரைவில் வரவேண்டும்' என்று கூறியதோடு, தம்

அறக்கட்டளையின் சார்பில் பெரும்தொகையைக் கடனாகக் கொடுத்து உதவினார்.

மூன்றாமவர், நான் ஓய்ந்த போதெல்லாம் 'தார்க்குச்சி'போட்டு எழுப்பி, இந்த அகராதியை நூலாகக் காண்பதற்கு வழி செய்திருக்கும் 'குருத்து' சண்முகசுந்தரம் அவர்கள். கொடைமாட்சி அறக்கட்டளை யின் கடனைப் பெறுவதற்கும் 'குருத்து' வெளியீடாகக் கொண்டு வருவதற்கும் அவர் செய்த முயற்சிகள் பல.

இம்மூவருக்கும் நன்றிகள்.

இவ்வகராதி படங்கள் இல்லாமல்தான் வெளியாகும் என்று முடிவு செய்துவிட்ட நேரத்தில், கை கொடுத்தவர் பெருந்துறையைச் சேர்ந்த ஓவியர் உலகநாதன் அவர்கள். மிகுந்த ஈடுபாட்டோடும் விரைவிலும் படங்களை வரைந்து கொடுத்தார். அவருக்கும் நன்றி.

நூலாக்கத்தின் இறுதிக் கட்டத்தில் அணில் உதவிகளைச் செய்த நண்பர்கள் மா.வெங்கடேசன், பி.எஸ்.ஆனந்தன் ஆகியோருக்கும் நன்றி.

பெண்களின் உதவி அருவமானதாகவே மறைந்துவிடுவது வழக்கம். அத்தகைய அருவமான உதவிகளோடு எழுத்து, திருத்தம், உணவு எனப் பருண்மையான உதவிகளையும் செய்தளித்த என் துணைவி பி.எழிலரசிக்கும் நன்றி.

சொற்சேகரத்தில் சிறு உதவிகள் செய்த தோழர் இளந்தென்றல் அவர்களுக்கு நன்றி.

இவ்வகராதி வெளியீட்டில் ஆர்வம் கொண்டது மட்டுமல்லாமல், விரைந்த வெளியிடக் கிரியாஊக்கியாகச் செயல்பட்ட தோழர் குறிஞ்சி, அழகிய வடிவமைப்புக்கும் அச்சாக்கத்திற்கும் காரணமான திரு.வசந்தகுமார், அச்சகப் பணியாளர்கள் ஆகியோருக்கும் நன்றிகள்.





நீண்ட காலத்தையும் பலரின் கூட்டுழைப்பையும் வேண்டி நிற்கும் இத்தகைய வேலைகளைப் பல்கலைக்கழகம் போன்ற அரசு நிறுவனங்களோ பணவசதிகொண்ட தன்னார்வக் குழுக்களோ செய்வதுதான் இயல்கிற செயலாக இருக்கும். ஆனால் பல்கலைக்கழ வளாகம் அதிகார அரசியலாலும் பொறாமைகளாலும் அறிவுச் சுரண்டாலும் பணம் வரும் வழிகளைக் கண்டுபிடிக்கும் ஆய்வுகளாலும் நிரம்பிக் கிடக்கிறது. எட்டு ஆண்டுகள் பல்கலைக் கழக வளாகத்தில் இருந்தவன் நான். ஆனால் கல்விப் புலங்கள் குறித்த

பெருமை எதுவும் எனக்கில்லை. பல்கலைக்கழகம் பற்றி என்னுள் அருவெறுப்பே மண்டிக்கிடக்கிறது. தமிழின் வளத்திற்குத் தனிமனித முயற்சிகளே காரணமாக அமைந்திருக்கின்றன. இதை இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய வரலாறு தெளிவிக்கும். தனிமனித முயற்சி பெரும் சிரமங்களைத் தாங்கித்தான் மேற்செல்ல வேண்டியிருக்கும். அகராதி தயாரிப்புக்கான அடிப்படைத் தளவாடப் பொருட் களிலிருந்த அனைத்துச் செலவுகளும் என் கைப்பணத்திலிருந்தே செய்ய நேர்ந்தது. இதற்கெனக் கிடைத்த சிறு உதவி, சொற்சேகரத்தில் உதவிய நண்பர் தி.சிவக்குமார் ஐநூறு ரூபாய் கொடுத்தது மட்டும்தான்.

இதற்கெனத் தங்கள் நேரங்களைச் செலவிட்ட நண்பர்களுக்கும் என் மாணவர்களுக்கும் ஒன்றும் செய்ய இயலவில்லை. படி எடுக்கும் வேலைகள் நடைபெற்ற போதெல்லாம் 'கொங்குச் சமையல்' என்று நண்பர்களால் கிண்டல் செய்யப்படும் எளிய உணவையும் கைச்செலவுக்கெனச் சிறு தொகையையும் கொடுக்க முடிந்தது தவிர, வேறெதும் செய்யக்கூடவில்லை. என்மேல் கொண்ட அன்பினாலும் அகராதி வேலையைப் பற்றிய புரிதலினாலும் மாணவர்கள் இந்த வேலைகளைச் செய்து கொடுத்தனர். அவர்களுக்கெல்லாம் குறைந்தபட்ச ஊதியம் கொடுக்க மனம் இருந்தும் மார்க்கம் இல்லை.



கஷ்டங்களும் ஆதங்கங்களும் ஒருபுறம் இருக்கட்டும். மன எழுச்சி தரக்கூடிய படைப்பிலக்கியம் போன்றில்லாத, முழுக்கவும் அறிவு சார்ந்த இந்த அகராதி வேலையில் எந்த அளவு வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை வாசகர்கள் தாம் சொல்ல வேண்டும்.

*பெருமாள்முருகன்*

## வட்டார வழக்கு அகராதி வரலாறு

வட்டார வழக்குச் சொற்களுக்கான அகராதிகள் தமிழில் அதிகம் இல்லை. பதினெட்டாம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் 'வட்டார வழக்குத் தமிழ் அகராதி' ஒன்றைத் தொகுத்திருப்பதாகத் தெரிய வருகிறது. (காண்க: சுந்தர சண்முகனார், தமிழ் அகராதிக் கலை, கழக வெளியீடு, 1971, சென்னை, ப. 308) அவ்வகராதி கிடைக்கப் பெறவில்லை. 'வட்டார வழக்குத் தமிழ்' என்னும் சொல்லை அவர் கையாண்டாரா, எந்த வட்டாரத்திற்கான அகராதியாக அது இருந்தது என்பன போன்ற விபரங்கள் எதையும் அறிய இயலவில்லை.

பின் நீண்ட இடைவெளியில் இத்தகைய அகராதிகள் எதுவும் வந்ததாகத் தெரியவில்லை. எண்பதுகளில் தான் மூன்று அகராதிகள் வெளிவந்து இருக்கின்றன. கி.ராஜநாராயணனின் 'வட்டார வழக்குச் சொல்லகராதி' (அன்னம் வெளியீடு, சிவகங்கை, 1982), இரா.இளங்குமரனின் 'வழக்குச் சொல் அகராதி' (கழக வெளியீடு, சென்னை, 1989), சுப.சண்முகத்தின் 'செட்டி நாட்டில் செந்தமிழ் வழக்கு' (8, காவேரி தெரு, சென்னை, 1990) ஆகியன அவை. இவற்றில், 'வழக்குச் சொல் அகராதி' என்பது குறிப்பிட்ட வட்டார வழக்குக்கான அகராதி இல்லை. அதன் தலைப்பு தரும் குழப்பத்தின் காரணமாக வட்டார வழக்கு அகராதியோ என்று மயங்க நேர்கிறது. மற்றபடி, அது மரபுத் தொடர்களுக்கான அகராதிதான். 'செட்டி நாட்டில் தமிழ் வழக்கு' செட்டி நாட்டுப் பகுதிக்கான குறைந்த சொற்களைத் தொகுத்துத் தரும் மிகச் சிறிய அகராதி ஆகும். கி.ராஜநாராயணனின் அகராதியே 'வட்டார வழக்கு' என்பதற்கு மிகவும் பொருத்தமானதாக அமைந்துள்ளது. பொதுவாக 'வட்டார வழக்குச் சொல்லகராதி' எனத் தலைப்பு வைக்கப்பட்டிருந்தாலும் இது நெல்லை கரிசல் வட்டாரத்தில் வழங்கும் சொற்களைத் தொகுத்துள்ள அகராதியாகும்.

இவை தவிர, பெரிய அகராதிகள் பலவற்றில் (தமிழ் லெக்சிகன், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி போன்றவை) வட்டார வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

நாஞ்சில் வட்டாரத்திற்கான சொல் தொகுப்பை நாஞ்சில் நாடன் அவர்கள் சேகரித்து வைத்துள்ளார். அகர வரிசைப்படுத்திப் படியெடுக்க உதவுகிறோம் என்று அவருக்கு நானும் நண்பன் சிபிச் செல்வனும் ஒருமுறை வாக்குக் கொடுத்தோம். ஆனால் அந்தத் திட்டம் இன்னும் நிறைவேறவில்லை.

வட்டார வழக்கு அகராதிகள் பற்றி நான் அறிந்த செய்திகள் இவைதாம்.

●●●

## *'கொங்கு நாடு' - எல்லை வரையறை:*

கொங்கு நாட்டுப் படத்தை எழுதிப் பார்த்தால் நான்கு பக்கங்களிலும் மலைகளால் சூழப்பட்ட ஒரு சமநிலமாகக் காணலாம். அந்நிலத்தின் மத்தியில் நாட்டை இரண்டு பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டும் இரு பகுதிகளிலிருந்தும் ஓடிவரும்படியான பல கிளை நதிகளைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டும் காவேரி நதியானது தென்கிழக்காக ஓடிச் சோழ நாட்டில் புகுகின்றது. கொங்கு நாட்டின் பரப்பானது தற்காலம் கோவை ஜில்லா முழுவதும் சேலம் ஜில்லாவில் ஓமலூர், திருச்செங்கோடு, சேலம், நாமக்கல் என்ற தாலுக்காக்களும், திருச்சி ஜில்லாவில் கரூர், குளித்தலை என்ற இரண்டு தாலுக்காக்களும், மதுரை ஜில்லாவில் பழநி, திண்டுக்கல் என்ற இரண்டு தாலுக்காக்களும் கொண்டதாக இருக்கின்றது.

கோவைகிழார்
கோ.ம.இராமச்சந்திரன் செட்டியார்,
'கொங்குநாட்டு வரலாறு'
நூற்றாண்டுவிழா பதிப்பு 28-11-1987
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி,
பேரூர், கோவை - 641 010.

# அறிமுகக் குறிப்புகள்

'**வ**ட்டார வழக்குச் சொல்'என்பதற்கான வரையறை என்ன? மொழியியல் சார்ந்த விளக்கங்களை விவரிக்கப் புகவில்லை. நான் புரிந்துகொண்டவிதத்தைக் கூறுகிறேன். இயற்கை அமைப்புகளால் நாடு பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அப்பிரிவுகள் அரசாட்சியாலும் அமைவதுண்டு அல்லது அரசாட்சியால் நிலைப்படுத்தப்படுவதுண்டு. ஆனால் இயற்கை அமைப்பே பிரதானம். நிலத்தின் தன்மை, நீர்நிலைகள், வாழிடங்கள் ஆகியவற்றைப் பொறுத்து வேளாண்மை, தொழில்கள், வாழ்நிலைகள் அமைகின்றன. இப்படிப்பட்ட பகுதியையே 'வட்டாரம்' என்கிறோம். வட்டாரம் என்னும் சொல் பொதுத்தன்மைகொண்ட சிறுபகுதியைக் குறித்து இன்று சற்றே விரிந்த பொருளில், குறிப்பிட்ட நிலப்பரப்பு சார்ந்த பகுதியைக் குறிப்பதாக வழங்குகிறது. பொதுமொழியின் பெரும்பாலான தன்மைகளை உட்கொண்டும், வழங்கும் நிலப்பரப்பு சார்ந்த சிறப்புக் கூறுகளுக்கு ஏற்றவாறும் அவ்வட்டார மொழி அமைகிறது. சிறப்புக்கூறுகள் பெரும்பான்மை சொற்கள், உச்சரிப்பு ஆகியவற்றால் உண்டாகின்றன. பொதுமொழியிலிருந்து பொருள் அளவில் வேறுபட்டு நிற்கும் சொற்களையே வட்டாரச் சொல் என்கிறோம். கருதத்தக்க அளவில் உச்சரிப்புவேறுபாடு இருப்பினும் அதையும் வட்டாரச் சொல் என்றே கொள்ளலாம். வட்டாரச் சொல் என்பதைப் பொது வழக்கில் இருக்கும் ஒரு சொல், பொதுப் பொருளிலிருந்து வேறுபட்ட பொருளில் வழங்குதல்; ஒரு சொல் குறிப்பிட்ட வட்டாரத்தில் மட்டுமே வழங்க, புரிந்து கொள்ளப்படுதல்; பொது வழக்குச் சொல்லாக இருப்பினும் திரிந்து, உச்சரிப்பில் வேறு சொல் போலத் தோற்றம் தருதல் என மூன்று நிலைகளில் புரிந்து கொள்ள முடியும். இந்த அடிப்படையிலேயே இவ்வகராதிக்கான சொல் தேர்வும் பதிவும் செய்யப்பட்டுள்ளன.

'கொங்கு வட்டாரச் சொல்லகராதி' என்று தலைப்பிடப்பட்டிருக்கும் இவ்வகராதி தமிழக வரலாற்றில் 'கொங்கு நாடு' எனவும் தற்கால இலக்கிய மொழி நிலைகளில் கொங்கு, கொங்கு

வட்டாரம் எனவும் வழங்கும் கோவை, ஈரோடு, நாமக்கல் மாவட்டங்களை முழுமையாகவும் அண்டை மாவட்டங்களில் குறிப்பிட்ட இடங்களையும் சேர்த்த பகுதியில் வழங்கும் வட்டாரச் சொற்களுக்கான அகராதியாகும். (கொங்கு வட்டாரம் - விளக்கம் இந்நூலில் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது) இந்த அகராதியின் தேவை அல்லது பயன்பாட்டுக்கான காரணங்களாகச் சிலவற்றைக் கூறலாம். வாழ்நிலைகளில் பல மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருப்பதால் புழக்கத்திலிருந்து மறையும் சொற்களைத் தொகுத்துப் பதிவு செய்தல்; (உதாரணமாக: குழந்தைகளின் விளையாட்டுப் பொருள்களில் ஒன்றான 'முச்சி', ஏற்றம், ஏர் பற்றிய பல சொற்கள்) பொருள் நிலையிலும் உச்சரிப்பு நிலையிலும் மொழி ஆய்வுக்குப் பயன்படுதல் (சான்றாக, 'மூடு' என்னும் சொல் தொல்காப்பியத்தில் இளமைப் பெயர்களில் ஒன்றாகக் குறிப்பிடப்படுகிறது; அச்சொல் இன்றும் கொங்கு வட்டாரத்தில் வழங்கப்படுகிறது. ஒவுத்திரியம், விருமித்தி போன்ற சொற்கள் உபத்திரவம், பிரம்மஹத்தி முதலிய வடமொழிச் சொற்களின் திரிபாக இருக்கலாம்.) புதுப்புதுத் துறைகளுக்கான கலைச்சொற்களும் நிகழ்ச்சிகள், உணர்வு நிலைகளுக்கான சொற்களும் உருவாக்கப்பட்டுக்கொண்டிருக்கும் சூழலில் அத்தேவைகளுக்குக் குறைந்த அளவிலேனும் உதவுதல் (மாட்டு வண்டி, தொடர்பான சொற்களை மோட்டார் வாகனங்களின் பாகங்களுக்குப் பயன்படுத்துவது பற்றி யோசிக்கலாம். 'முசுவு' என்னும் சொல்லை busy என்பதற்கு நிகராகப் பயன்படுத்தலாம். இதுபோல.), இவற்றோடு கொங்குப் பகுதியை மையமாகக்கொண்டு எழுதப்பட்டிருக்கும், எழுதப்படும் இலக்கியங்களைப் படிப்போருக்கு உதவுதல், (இந்த இலக்கியங்களைப் புரிந்துகொள்ள வட்டாரச் சொற்கள் பெரிய தடையில்லை. எனினும் வெகுஜன இலக்கியங்களுக்கே பழக்கப்பட்டிருக்கும் வாசிப்பு மனம் இதைப் பெரிய தடையாகக் கருதுகிறது. அத்தகையோரின் கருத்துக்களைப் பலமுறை கேட்டிருக்கிறேன். அவர்களின் தடையை ஓரளவுக்கேனும் போக்க இந்த அகராதியால் இயலும். இத்தகைய தடை இல்லாதவர்களுக்கும் குறிப்பான சொல்லுக்குப் பொருள் அறிய விரும்பினால் உதவும்.), மேலும் இதை ஒரு 'தமிழ்ப்பணி' அல்லது 'தொண்டு' என்று கொண்டால் தமிழின் சொல்வளத்தைப் பெருக்கப் பயன்படுதல் - எனப் பட்டியலிடலாம்.

சொல் சேகரம் இரண்டு முறைகளில் மேற்கொள்ளப்பட்டது. மக்கள் பேசும் போது கவனித்தல், அவர்களிடம் வினவுதல், சேகரித்தோர் நினைவிலிருந்து எடுத்தல் ஆகிய நடை முறை சார்ந்தது ஒன்று. கொங்குப் பகுதியை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட

இலக்கியங்கள் (கொங்கு மண்டல சதகம் போன்ற செய்யுள் நூல்கள், அண்ணன்மார் சுவாமி கதை உள்ளிட்ட நாட்டுப்புறக்கதை, பாடல் தொகுப்புகள், கொங்கு வட்டார நாவல்கள் சிறுகதைகள் முதலியவை), பிற நூல்கள் (கட்டுரை, வரலாறு போன்றவை) ஆகியவற்றிலிருந்து எடுத்தல் மற்றொன்று. மூல ஆதாரங்கள் இவையே யாகும்.

சொல் பதிவின் போது ஏற்பட்ட சில ஐயங்களை, எழுப்பப்பட்ட கேள்விகளை இங்கு முன்வைப்பதும் தேவை என்று கருதுகிறேன். கொங்கு வட்டாரத்தின் எல்லாச் சொற்களுக்குமான முழுமையான அகராதியாக இது இருக்குமா? அப்படிச் சொல்ல இயலாது. வட்டாரச் சொல் சேகரம் என்பது கனிமப்பொருள் சுரங்கத்திலிருந்து தோண்டுவதுபோல. எவ்வளவு இருக்கிறது? தெரியாது. எப்போதேனும் தோண்டி முடிக்க முடியுமா என்பதும் தெரியாது. அகராதி அச்சுக்குப் போய்விட்ட நிலையிலும் கூடச் சில சொற்கள் கிடைக்கின்றன. ஆகவே கிடைக்கக் கிடைக்கச் சேகரித்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். அடுத்தடுத்த பதிப்புகளில் சேர்த்துக் கொண்டிருக்கவும் வேண்டியதுதான். இந்த அகராதியைக் கண்ணுறும், பயன்படுத்தும் நண்பர்கள் விடுபட்டவற்றைச் சேகரித்துக் கொடுத்தாலோ, இதிலுள்ள வேறு சிக்கல்கள் குறித்து எழுதினாலோ நன்றியோடு ஏற்றுக் கொள்வேன். இவ்வட்டாரத்தில் வழங்கும் ஒலிக்குறிப்புச் சொற்கள், இணைச்சொற்கள், மரபுத் தொடர்கள் ஆகியவற்றை எல்லாம் தொகுத்து இன்னொரு தொகுதி வெளியிடும் எண்ணம் எனக்கு உள்ளது.

கொங்கு வட்டாரம் முழுமையும் ஒரே மாதிரிதான் பேசப்படுகிறதா? உச்சரிப்பு, பொருள் வேறுபாடுகள் இல்லையா? இருக்கிறது தான். கோவைக்கும் நாமக்கல்லுக்கும் கோபிக்கும் நுட்பமான வேறுபாடுகள் உள்ளன. ஒரே சொல் வெவ்வேறு பொருட்களில் வழங்கவும் படுகின்றன. ஆனால் பொதுத்தன்மைகளே மிகுதி. மிகச்சிறு வேறுபாடுகளையும் கருத்தில் கொண்டு, தேவையானவை எனக் கருதியவற்றின் உச்சரிப்பு, பொருள் வேறுபாடுகளைக் கொடுத்திருக்கிறேன். ஆனால் கோவை வழக்கு, நாமக்கல் வழக்கு எனப் பிரிக்கும் அளவு இந்த வேறுபாடு இல்லை.

இந்த அகராதியில் சாதி அடையாளம் உண்டா? உணர்வுப்பூர்வமாக அதைத் தவிர்க்க முயன்றிருக்கிறேன். குறிப்பிட்ட சாதியின் சடங்குகள் சார்ந்த சொற்களை எல்லாம் பதிவுக்கு எடுத்துக் கொள்ளவில்லை. எல்லாத் தொழில் சார்ந்த சொற்களையும் சேகரிக்கவும் பதிவு செய்யவும் ஆன முயற்சிகள்

செய்யப்பட்டுள்ளன. இவற்றிற்குப் பின்னும் கூட நுட்பமாகச் சாதி அடையாளம் பொதிந்திருக்கலாம்.

அகராதியில் 'கெட்ட' வார்த்தைகளைச் சேர்ப்பது சரியா? சொற்களில் நல்லது கெட்டது என்று எதுவுமில்லை. 'எல்லாச் சொற்களும் பொருள் குறித்தனவே'. அத்தகைய பிரிப்புகளெல்லாம் சமூக மதிப்புகள் (Values) சார்ந்து உருவாகுபவை. அகராதி ஆசிரியனுக்குச் சொல்தான் முக்கியமே தவிர மாறிக்கொண்டே இருக்கும் மதிப்புகள் அல்ல. ஆகவே திட்டுச் சொற்கள், 'கெட்ட' வார்த்தைகள் ஆகியவற்றில் வட்டாரத்திற்கு உரியவை என நான் கருதுபவற்றைத் தயங்காமல் பதிவு செய்திருக்கிறேன்.

அகராதியில் பழமொழிகளைச் சேர்க்கலாமா? இதைப் பற்றித் தெளிவான கருத்து என்னிடம் இல்லை. பல அகராதிகளில் பழமொழிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. அதைப் பின்பற்றியும் சேகரித்து வைத்தவை பதிவாகட்டும் என்னும் எண்ணத்திலும் பழமொழிகளைச் சேர்த்திருக்கிறேன். திருமதி மீனாட்சி சுந்தரம் அவர்களால் தொகுக்கப்பட்டு 'Kongu Proverbs' என்னும் நூலொன்று வெளிவந்துள்ளது. ஆங்கில மொழிபெயர்ப்போடு கூடிய அந்நூலில் இல்லாதவற்றையும் அதில் இருக்கும் அதே சமயம் வேறுபட்ட வழக்கில் எனக்குக் கிடைத்தவற்றையும் மட்டுமே இவ்வகராதியின் பின்னிணைப்பாகக் கொடுத்துள்ளேன்.

சொல் பதிவின் போது ஏற்பட்ட சிக்கலொன்று. ண-ந-ன, ற-ர, ல-ள-ழ. இவற்றுக்கிடையே உள்ள வேறுபாட்டை எப்படிக் கையாள்வது? ஏனெனில் குறிப்பான ஒலிவேறுபாடு காட்டும் உச்சரிப்பு இவ்வட்டாரத்தில் இல்லை. இத்தகைய சிக்கல் வருமிடங்களில் என் சொல் அறிவைக் கொண்டு நானாகவே தீர்மானித்துக் கொடுத்துள்ளேன். அதே போன்று சில சொற்களுக்குப் பேச்சு வழக்குப் பதிவு, சில சொற்களுக்கு எழுத்து வழக்குப் பதிவு, சிலவற்றிற்கு இரண்டு வகையான பதிவுகள் எனக் கொடுக்கப்பட்டுள்ளன. இவையும் என் தீர்மானம் சார்ந்த முடிவே. எனக்கு ஏற்பட்ட குழப்பங்கள், ஐயங்களின் அடிப்படையில் முடிவெடுத்து இவ்விதம் கொடுத்துள்ளேன். இது குறித்த சிக்கல்களை, அறிந்தோர் விவாதிக்க வேண்டுகிறேன்.

தலைச்சொல், ஒத்த வடிவச் சொல்லுக்கான தலை எண், இலக்கணக்குறியீடு, பொருள் விளக்கம், எடுத்துக்காட்டுத்தொடர் என்னும் வரிசையில் அகராதிப் பதிவு அமைக்கப்பட்டுள்ளது. தலைச்சொல் தனிச்சொல்லாகவோ அதிகபட்சம் மூன்று சொற்கள் வரை இணைந்த கூட்டுச் சொல்லாகவோ இருக்கும்.

ஒத்த வடிவம் கொண்ட சொற்களில் வினைச்சொல் 1 என எண்ணிட்டு முதலாவதாகவும் பெயர்ச்சொல், வினையடை, பெயரடை ஆகியவை 2 என எண்ணிட்டு இரண்டாவதாகவும் கொடுக்கப்பட்டுள்ளது. இலக்கணக் குறியீடு, வினைச்சொல். பெயர்ச்சொல், வினையடை, பெயரடை ஆகிய நான்கு வகைகளில் கொடுக்கப்பட்டுள்ளது. இதற்கு மேல் இலக்கணம் சார்ந்த தகவல்களைக் கொடுக்க என்னால் இயலவில்லை. வினைத்திரிபு, ஒட்டுக்கள், ஒலிக்குறியீடு முதலியவற்றைக் கொடுக்க விருப்பம் இருந்தும் ஆழ்ந்த ஆய்வின் மூலமே அவை சாத்தியமாகும் என்பதால் இயலாமல் போய்விட்டது.

பொருள் விளக்கம், ஒத்த பொருளுடைய பொது வழக்குச் சொல்லைக் கொண்டோ, பொருளை விவரித்தோ கொடுக்கப்பட்டுள்ளது. வட்டாரச்சொல்லையே பொருளில் பயன்படுத்த நேர்ந்தால் அச்சொல் அகராதிப் பதிவில் இடம் பெறுமாறு பார்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. எடுத்தக்காட்டு வாக்கியம் பேச்சு வழக்கிலிருந்து இயன்ற அளவு அதே உச்சரிப்போடு கொடுக்கப்பட்டுள்ளது.

அகராதி முறைப்படி தயாரிக்கப்பட்ட வட்டார வழக்கு அகராதிகள் எதுவும் இல்லையாதலால் பயன்படுத்தும்போது பல சிக்கல்கள் ஏற்படும். அவற்றை அறிந்துகொள்ள ஆவலாக உள்ளேன். அகராதியியல் வல்லுநர்களும் நண்பர்களும் எழுத வேண்டும்.

*பெருமாள் முருகன்*

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| இ.சொ. | - | இடைச்சொல் |
| பெ. | - | பெயர்ச்சொல் |
| பெ.அ. | - | பெயரடை |
| வி. | - | வினைச்சொல் |
| வி.அ. | - | வினையடை |

## அ

**அக்கட்ட** - வி.அ. *1. அந்தப்பக்கம்.* 'அக்கட்ட பாரு கெடக்கும்' 'அக்கட்டால என்ன பார்வ?' *2. வேறிடம்.* 'அத்தெ மகனெவுட்டு - என்னை அக் (ெ)கட்டையா மாலையிட' (நாட்டுப்புறப்பாடல்)

**அக்கட்டால** - *காண்க: அக்கட்ட.*

**அக்கரகண்டி** - பெ.*வாயாடி.* 'அக்கரகண்டிகிட்ட வாய் குடுத்தா ஆவுமா.'

**அக்கியானம்** - பெ. *தொந்தரவு; தொல்லை; துன்பம்.* 'இந்த அக்கியானத்த எங்க போய்ச் சொல்றது.'

**அக்கியானம் பிடித்தவன்** - பெ. *தொந்தரவு, தொல்லைகள் தருபவன்.* 'அவன் ஒரு அக்கியானம் புடிச்சவன்.'

**அக்குப்பொறுக்கி** - பெ.*திட்டுச்சொல்.* 'அக்குப்பொறுக்கிப் பயகூட ஆரு சேருவா.'

**அக்கெட்டை** - *காண்க: அக்கட்ட.*

**அகராதி** - பெ. *குழப்பம்; முரணாகப் பேசுதல்; குழப்பம் ஏற்படுத்துபவள் / ன்.* 'நேத்துலருந்து அவளோட ஒரே அகராதியா இருக்குது.' 'அவன் சுத்த அகராதிடா.'

**அகராதி பிடிச்ச வேலை** - பெ. *குழப்பம் மிகுந்த, விரைவில் முடியாத வேலை.* 'இந்த அகராதி பிடிச்ச வேலக்கி என்னய எதுக்குடா கூப்பட்டீங்க.'

**அகிலாட்டி** - பெ. *தன் வேலைக்காக மட்டும் பிறரை அணுகும் வாயாடிப்பெண்.* 'அகிலாட்டி வர்றா. அந்தாண்ட போயிரலாம் வா.'

**அகினி** - பெ.*பனம்பட்டையிலிருந்து உரித்து எடுக்கும் (கட்டுவதற்குப் பயன்படும்) நார்.* 'நூறு அகினி உரிச்சுக் கொடுத்தாப் போதும்' 'அகினி இருந்தாப் போட்டுக்கட்டீரலாம்.'



அகினி

**அகினிப்புறம்** - பெ.*பனை நாரின் வெளிப்புறம்.* 'அகினிப்புறம் நெருநெருன்னு இருக்குது பாரு.'

**அங்கத்த** - பெ.அ.*அந்தப் பக்கத்து; அந்த ஊர்.* 'அங்கத்த சனம் வருமா?'

**அங்கம் பொறி (த்தல்)** - வி.*சாவுச் சடங்கின் (காரியத்தின்) போது சுடுகாட்டிற்குச் சென்று வேகாமல் மிஞ்சியிருக்கும் எலும்பை நொறுக்குதல்.* 'கருப்புல அங்கம் பொறிக்கப் போனவுங்க வந்துட்டாங்களா.'

**அங்கராக்கு** - பெ. *சட்டை.* 'அங்கராக்குப் போட்டுக்கிட்டு வாடா போலாம்.'

**அங்காணி** - பெ.*துளை.* 'கட்டையில அங்காணி பெருத்துப்போச்சு.'

**அச்சாங்கல்** - பெ. *அஞ்சாங்கல். 'ஐந்து சிறு கற்களைக் கொண்டு பெண்களும் சிறுவர்களும் ஆடும் விளையாட்டு'* 'அச்சாங்கல்லு ஆடிக்கிட்டு ஆடுகளப் பாக்காத உட்டுட்டா.'

**அச்சானியம்** - பெ. *அபசகுனம்.* 'அச்சானியமாப் பேசாதீடா.'

**அச்சுக் கடைதிரட்டு (தல்)** - வி. *பழுதடைந்த வண்டி அச்சைப் பழுது பார்(த்தல்).* 'வண்டிய அச்சுக் கடதெரட்டப் பட்டறயில உட்டிருக்கறம்.'

**அச்சுப்பலகை** - பெ. ***பனைவெல்லப் பாகை வார்க்கும் மரத்தாலான குழிகள் கொண்ட பலகை.*** 'அச்சுப்பலகயத் தொடச்சு எடுத்து வெய்யி.'



அச்சுப்பலகை

**அசரிக்கை** - பெ. *1.**தூக்க மயக்கம்.*** 'அசரிக்கையா இருக்குது. அப்படியே படுக்கறன்.' *2.* ***அசதி.*** 'காலெல்லாம் ஒரே அசரிக்கயா இருக்குது.'

**அஞ்சாங்கல்** - **காண்க: அச்சாங்கல்.**

**அட்டாலி** - பெ. ***வீட்டுப்பரண்.*** 'அளந்த வள்ளம் அட்டாலியிலே.' (பழமொழி)



அட்டாலி

**அட்டி** - பெ. *1.* ***கழுத்தில் அணியும் அட்டிகை எனும் நகை.*** 'கழுத்துக்கு ஒரு அட்டி போட்டா நல்லாத்தான் இருக்கும்.' *2.* ***மூட்டைகளை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கும் முறை.*** 'மூட்டய எல்லாம் அட்டி போட்டுவெச்சிருங்க.'

**அட்டுக்குஞ்சு** - பெ. *1.* ***பிறந்து ஓரிரு நாட்களே ஆன பறவைக் குஞ்சு.*** 'அட்டுக்குஞ்சப் புடிச்சாந்து எதுக்காவுது.' *2.***அடை ஓட்டிலிருந்து கீழே இறக்கிவிடப்படாத கோழிக்குஞ்சு.*** 'இன்னும் அட்டுக்குஞ்சா இருக்குது. அடை ஓட்டுலேயே எர போடு.'

**அட்டுப்பால்** - பெ. ***குழந்தைகளுக்கோ ஆட்டுக் குட்டிகளுக்கோ தாய்ப்பால் தவிர்த்துக் கொடுக்கப்படும் வேறுபால்.*** 'அட்டுப்பால் குடிச்சுக் கொழந்த எப்பிடி வளரும்?', 'அது அட்டுப்பாலே குடுத்து வளத்துன குட்டி.'

**அட்டூரு** - *பெ.* ***ஓட்டடை.*** 'இன்னிக்கித் தான் அட்டூரு அடிச்சு, ஊடு வழிச்சன்.'

**அடசல்** - பெ.***பாத்திரத்தில் ஒரு தடவை வேக வைத்து எடுக்கும் இட்லி அளவு.*** 'இட்டிலி எத்தனை அடச எடுத்திருக்கிற?'

**அடப்பம்** - பெ. ***அடைப்பம். நாவிதர் கருவிப்பெட்டி அல்லது பை.*** 'நாசுவன் அடப்பத்தோட போறாப்பல...'

**அடப்பு** - பெ. ***அடைப்பு.*** *1.****எலி தனது பாதுகாப்புக்காக வளைக்குள் ஆங்காங்கே ஏற்படுத்தியிருக்கும் சிறு அடைப்பு.*** 'இவ்வளவு தூரம் வெட்டனதுக்கு அப்புறம் அடப்பு உழுந்திடுச்சு.' *2.* ***ஒருவர் கெட்ட நேரத்தில் செத்துப் போனால் குறிப்பிட்ட நாட்கள் வரை குடும்பத்தினருக்கும் பங்காளிகளுக்கும் நல்ல காரியங்களில் ஈடுபட ஏற்படும் தடை.*** 'இப்பக் கலியாண காரியத்த பேசாத. அடப்புல இருக்குறம்.'

**அடப்பு நீக்கு (தல்)** - வி.அடப்பு ***(காண்க:அடப்பு: பொருள் 2) நீக்கப் பரிகாரம் செய்(தல்).*** 'பாட்டி செத்ததுக்கு அடப்பு நீக்கியாச்சா?'

**அடம்பு** - பெ. *அடர்த்தி. நெருக்கம். (நிலத்தில் பயிர்கள் அளவுக்கு மேல் முளைத்திருத்தல்)*. 'பயிரு அடம்பாப் போச்சு.'

**அடமுட்டுப்பலகை** - பெ. *பனை, தென்னை மரமேறுபவர்கள் இடுப்பின் பின்பக்கம் கட்டிக்கொண்டிருக்கும் பெட்டிக்குள் பாளை சீவும் கத்தியைப் பாதுகாக்க வைத்திருக்கும் சிறுபலகை*. 'அடமுட்டுப்பலகயச் செருவி பாளக்கத்திய வெய்யி.'



அடமுட்டுப் பலகை

**அடல்** - *ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி இருக்கும் சிறு சிறு (அடை, ரொட்டி, இதழ்) துண்டுகள்*. 'பூவப்பாரு அடலடலா இருக்குது.'

**அடவாதம்** - பெ. *அடம்; பிடிவாதம்*. 'கொழந்தைன்னா அடவாதம் இருக்குந்தான்.'

**அடி அரட்டை** - பெ. *மாட்டுவண்டியின் மேற்பகுதியில் பொருள்கள் கீழே கொட்டாமல் இருக்கப் போடப்படும் தடுப்பு*. 'அடி அரட்ட செரியாப் போட்டிருக்குதானு பாரு.'

**அடி ஓலை** - பெ. *பனை மரத்தில் அடிப்புறமாக இருக்கும் முற்றிய ஓலை*. 'அடி ஓலயப் பாத்துக் குருத்தோல சிரிச்சுதாம்.' (பழமொழி)

**அடிக்கால்** - பெ. *அடிப்பகுதி*. 'அடிக்கால்ல நல்லா நில்லு.'

**அடிகரை** - பெ. *ஆறு, குளக்கரைகளை ஒட்டியுள்ள நிலப்பகுதி*. 'அவுங்க தோட்டம் அடிகரயிலயே இருக்குது.'

**அடிச்சோறு** - பெ. *பாத்திரத்தின் அடியில் தீய்ந்தோ கற்களுடனோ இருக்கும் சோறு*. 'அடிச்சோத்த எனக்குப் போடாத.'

**அடித்தட்டு(தல்)** - வி. *1. தீர்ந்து போதல்*. 'கெணத்துல தண்ணி அடித்தட்டிப் போச்சு.' *2. அரிதாகி விடுதல்*. 'இப்ப கம்பே அடித்தட்டிப் போச்சு.'

**அடிப்பட்டரை** - பெ. *தீவனப் போர் வைக்கும்போது கரையான் அரிக்காமல் பாதுகாக்கக் கற்களையும் மரக்கட்டைகளையும் கொண்டு மண்ணிலிருந்து சற்று உயர்ந்திருக்கும்படி செய்யும் ஏற்பாடு*. 'அடிப்பட்டர கூட்டியாச்சா?'

**அடிப்பிடி(த்தல்)** - வி. *பாத்திரத்தின் அடியில் சோறு தீய்ந்து பிடித்துக் கொள்ளுதல்*. 'சோறு அடிப்பிடிச்சிருச்சு.'

**அடிப்போர்** - பெ. *தானியத்தட்டைப்போரின் அடிப்பகுதி*. 'அடிப்போர்ல தட்டு உருவாதே.'

**அடிமடி** - பெ. *சேலையின் உள்ளே மறைவாகக் கட்டி வைத்திருக்கும் மடிப்பகுதி; பிறர் அறியாத மறைவுப் பகுதி*. 'அடிமடியில வெச்சிருப்பா பாரு.' 'அடி மடியிலயே கையவச்சிட்டயேடா.'

**அடிமரம்** - பெ. *மரத்தின் வேருக்கும் கிளைகளுக்கும் இடையில் இருக்கும் பகுதி*. 'அடிமரத்தயே வெட்டிட்டான்.'

**அடிவாரி** - பெ. *ஏற்றம் இறைக்கும் போது மாடுகள் இழுத்துக் கொண்டோடும் பகுதியான வாரியின் கடைப்பகுதி*. 'அடிவாரியில போயி நிக்காதடா.'

**அடிவிழுந்து கும்பிடு(தல்)** - வி. *வேண்டுதலுக்காகக் கோவிலைச் சுற்றி ஈர உடையோடு மண்ணில் விழுந்து கும்பிட்டு*

***வருதல்.*** 'அடிஉழுந்து கும்படறமுன்னு வேண்டிக்கிட்டயா?'

**அடிவெட்டு** - பெ. ***ஓர் அடிக்கு (அளவு) இவ்வளவு என்று பேசிக்கொள்ளும் கிணறு வெட்டு.*** 'அடிவெட்டுக்குப் பேசிக்கிட்டாத்தான் நல்லது.'

**அடுக்குச்சந்து** - பெ. ***மிடா வரிசைகளுக்கிடையே இருக்கும் சிறு இடைவெளி.*** 'அடுக்குச் சந்துல நெருப்பொட்டி உழுந்திருச்சு. எடுக்க முடியில.'

**அடுக்கு மொடா** - பெ. ***ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்படும் பெரும்பானை (மிடா) வரிசை. (ஏழு, ஒன்பது வரிசை கொண்ட மிடாக்களை திருமணப் பெண்ணுக்குச் சீராகக் கொடுத்துவிடும் வழக்கம் முன்பிருந்தது.)*** 'அந்தக் காலத்துல அடுக்கு மொடாவுலதான் கம்பெல்லாம் கொட்டி வெப்பாங்க.'

**அடுத்துக்கிடு(தல்)** - வி. ***சாவு நெருங்கி விடுதல்.*** 'அவருக்கு அடுத்துகிச்சு.'

**அடுப்பங்கரை** - பெ. ***சமைக்கும் இடம்.*** 'அடுப்பங்கரைலதான் எப்பப் பார்த்தாலும் வேல.'

**அடுப்புக்கல்** - பெ. ***திருவிழாச் சமயங்களில் பொங்கல் வைக்க அடுப்பை உருவாக்கும் கல்.*** 'அடுப்புக்கல்லப் பெரிசாப் போடு.'

**அடுப்புக்குட்டு** - பெ. ***குயவர் செய்யும் மண் அடுப்பில் பாத்திரம் வைப்பதற்காகப் பொருத்தப்பட்டிருக்கும் குமிழ்.*** 'அடுப்புக்குட்டு ஒடஞ்சு போச்சு. சட்டி ஒரு பக்கமாச் சாயுது.'

**அடுப்புத் திட்டு** - பெ. ***அடுப்புகளைப் புதைத்துச் சுற்றிலும் மண்ணாலோ காரையாலோ கட்டப்பட்ட பகுதி.*** 'நெருப்பொட்டி அடுப்புத்திட்டுல இருக்கும் பாரு.'

**அடுவு** - பெ. ***விதைத்த அதே நாளில் மழைபெய்து மண் இறுகிவிடுதல். (அதனால் பயிர் முளைவிட்டு வெளிவரச் சில நாட்கள் அதிகமாகும்.)*** 'பயிரு அடுவுசிக்கிப் போச்சு.'

**அடையோடு** - பெ. ***கோழி அடைகாக்க வசதியாக மணல் பரப்பி முட்டைகளை வைக்கும் (குடம், பானை ஆகியவற்றின் அடி) ஓடு.*** 'அடையோட்டுக்குள்ளயே கோழி பேண்டு வெச்சிருக்குது.'



அடையோடு

**அடைப்பீ** - பெ. ***அடை காக்கும் கோழி இரண்டு மூன்று நாட்களுக்கு ஒருமுறை எழுந்து வெளியே வரும்போது கழிக்கும் கடும் நாற்றம் வீசும் பெரும் மலம்.*** 'அடப்பீ இந்த நாத்தம் நாறுது.'

**அடைமூக்கு** - பெ. ***சளியினால் அடை கட்டிக்கிடக்கும் மூக்கு.*** 'அது அடமூக்குப் புடிச்ச புள்ள.'

**அண்டநாற்றம்** - பெ. ***பக்கத்தில் போக (அண்ட) முடியாத அளவுக்கு வீசும் பெரும் நாற்றம்.*** 'சாக்கடப்பக்கம் போகமுடியல. அண்ட நாத்தமடிக்குதப்பா.'

**அண்டை** - பெ. ***தயிர், பால், உப்பு போன்றவற்றைப் போட்டு வைத்துக் கொள்ளும் மூங்கிலால் ஆன பாத்திரம்.*** 'அண்டையில பாரு தயிரு இருக்கும்.'

**அண்ணம்** - இ.சொ. ***எண்ணிக்கை கூறும்போது எண்களுடன் சேர்த்துக் கூறப்படும் பின்னொட்டுச் சொல்.*** 'அங்க ரண்டண்ணம் நிக்கிது.'

**அண்ணன்** - பெ. ***தந்தை.*** 'எங்கண்ணங்கிட்டயே சொல்லிப்புடுவம்! பாரு.'

**அண்ணாக்கவுறு** - பெ. ***அரைஞாண் கயிறு; இடுப்பில் கட்டிக் கொள்ளும் கயிறு.*** 'அண்ணாக்கவுறு இல்லாம கோமணம் எப்படிக் கட்டறது.'

**அண்ணாங்கால்** - பெ. ***ஆடு, மாடுகளை மேய்ச்சலுக்கு அவிழ்த்து விடும்போது அவை ஓடி விடாமல் மெதுவாக மேய்ந்து செல்வதற்காகக் கழுத்துக் கயிற்றை ஒரு காலிலோ இரண்டு கால்களிலுமோ சேர்த்துக் (குனித்துக் கொண்டே நடக்கும் வகையில்) குறுகலாகக் கட்டி விடுதல்.*** 'வெள்ளாட்டுக்கு அண்ணாங்கால் போட்டு. அப்பத்தான் ஒரு பக்கமா மேயும்.'



அண்ணாங்கால்

**அணைகயிறு** - பெ. ***பால் கறக்கும்போது காலைத் தூக்கி உதைத்து விடாமல் இருக்க மாட்டின் பின்னங்கால்களைச் சேர்த்துக் கட்டும் கயிறு.*** 'அந்த மாடு அணகவுறு போட்டாத்தான் பாலுக்கு நிக்கும்.'



அணைகயிறு

**அணப்பு** - பெ. ***உழவு நிலத்தின் சிறு பிரிவு. உழவுக்கு வசதியாகக் கரைகட்டிப் பிரிக்கப்பட்டிருக்கும் பகுதி.*** 'ஒழவு அந்த அணப்புல முடிஞ்சிருச்சா.'

**அணலு** - பெ. ***அணில்.*** 'அணலுப் புடிக்கப் போலாமா.'

**அணைதல்** - வி. ***1.ஒதுங்குதல்.*** 'கோழி முட்டையிட அணையுது.' ***2. ஓரிடத்தில் சேர்தல்.*** 'வெய்யத் தாங்காம ஆடெல்லாம் நெவுல்ல அணஞ்சுகிருச்சு.'

**அத்துபடி** - பெ. ***முழுத்தெளிவு.*** 'கணக்கு அத்துபடி ஆயிருச்சா.'

**அத்துவானம்**[1] - வி.அ. ***உறுதியற்ற.*** 'கவுறு அத்துவானமா இருக்குது.'

**அத்துவானம்**[2] - பெ. ***அந்தரம்; பிடியற்ற நிலை.*** 'நானே அத்துவானத்துல நிக்கறேன்.'

**அத்துவானக்காடு** - பெ. ***ஆளற்ற இடம்.*** 'அத்துவானக் காட்டுல அம்மாயி கொடப்புடிக்கிறா' (காளான்) - விடுகதை.

**அதட்டி** - பெ. ***அதிர்ச்சி.*** 'அந்த அதட்டில தான் ஆளு எளச்சுப்போயிட்டான்.'

**அதம்** - பெ. ***(குழந்தைகள் செய்யும்) மிகு குறும்பு.*** 'அவன் கொஞ்சம் அதமா பண்றான்.'

**அதிக்களம்** - பெ. ***ஆணவம்; தலைக்கனம்.*** 'அதிக்களத்துல நிக்கறவன் உருப்படி ஆவானா.'

**அதுக்கோசரம்** - *பெ.அ.* **அதற்காக.** 'அதுக்கோசரம் நான் என்ன பண்ண முடியும்.'

**அந்தர சாதி** - பெ. ***திட்டுச்சொல்; சாதி கெட்டவன் (ள்).*** 'அவ கெடக்கறா அந்தர சாதி.'

**அந்தவாட்டி** - *வி.அ.* ***அந்தமுறை, அந்தத் தடவை.*** 'அந்த வாட்டி வித்துப்புட்டான். இப்பப் பாக்கலாம்.'

**அந்தாண்ட** - *வி.அ.* ***அந்தப் பக்கம்.*** 'அந்தாண்ட பாருடா கெடக்கும்.'

**அந்தாணி** - பெ. ***சாமான்கள் வைப்பதற்காக மரத்தால் செய்யப்படும் அடுக்குப் பலகை.*** 'அந்தாணியில தான் வெச்சன். இருக்கும் பாரு.'

**அந்திக்கள்** - பெ. ***மாலையில் இறக்கும் கள்.*** 'அந்திக் கள்ளு குடிச்சா ஆளு ஊதிப்போயிடுவான்.'

**அந்துசு** - பெ. *1.* ***ஒழுங்கு.*** 'நல்லா அந்துசா அடுக்கி வெய்யி.' *2.* ***அழகு.*** 'பிள்ள அந்துசாத்தான் இருக்குது.' *3.* ***கௌரவம்; அந்தஸ்து.*** 'அவன் நல்ல அந்துசுல இருக்கறான்.'

**அந்துருளி** - பெ. ***எப்போதும் சுறுசுறுப்பாக எதையாவது செய்து கொண்டிருக்கும் குழந்தை.*** 'அது ஒரு நிமிசம் சும்மா இருக்காது. அந்துருளி.'

**அப்பச்சி** - *பெ.* ***தாயின் தந்தை.*** 'நேத்துத்தான் எங்க அப்பச்சி வந்திருந்தது.'

**அப்பத்தா** - பெ. ***அப்பாவின் அம்மா.*** 'எங்க அப்பத்தா குடுத்தது.'

**அப்பாரு** - பெ. ***அப்பாவின் அப்பா.*** 'அப்பாரூட்டுக்குப் போயிட்டு வர்றன்.'

**அப்பு** - *பெ.* ***குழந்தைகளைச் செல்லமாக அழைக்கும் சொல்.*** 'அப்பு... இங்க வாடா கண்ணு.'

**அப்புச்சி** - **காண்க: *அப்பச்சி.***

**அப்புனு** - *பெ.* ***பெரியவர்கள் சிறியவர்களை மரியாதையோடு அழைக்கும் விளிச்சொல்.*** 'அப்புனு.....எந்தப்பக்கம் போற.'

**அப்பேசம்** - பெ. ***ஒன்று வெகு நாட்கள் கிடைக்காததால் ஆசை மீறிய வெறி.*** 'கறிமேலதான் பாட்டிக்கு அப்பேசம்.'

**அம்பிலி** - பெ. ***சோளக்கூழ்.*** 'கொஞ்சம் அம்பிலி இருக்குது குடிச்சிட்டுப்போ.'

**அம்மணி** - பெ. ***சகோதரிகளையும் பிற பெண்களையும் மரியாதையோடோ, செல்லமாகவோ விளிக்கும் சொல்.*** 'அம்மணி.....ஊட்டுல ஐயன் இருக்காங்களா.'

**அம்மாயி** - *பெ.* ***அம்மாவின் அம்மா.*** 'நேத்து எங்க அம்மாயி வந்தது.'

**அமட்டு** - *வி.அ.* ***அவ்வளவு.*** 'அமட்டுக்குடு போதும்.'

**அமத்தா** - **காண்க: 'அம்மாயி.'**

**அமுக்கான்** - பெ. ***இரவில் தூங்கும்போது திடீரென்று ஏதோ அமுத்துவது போலத் தோன்றும்; எழவும் முடியாது; கத்தவும் முடியாது; அவ்விதம் அமுத்தும் பிசாசு.*** 'ராத்திரி அமுக்கான் போட்டு அமுக்கீட்டது.'

**அமுக்குப் பிசாசு** - **காண்க: அமுக்கான்.**

**அய்யன்** - பெ. ***பெரியவர்களைக் குறிக்கும் மரியாதை விளிச்சொல்.*** 'அய்யனவுங்க எங்க போயிருக்கறாங்க.'

**அரக்கு** - *வி. 1.* ***நீட்டிக் கொண்டிருக்கும் கோல்களையும் கிளைகளையும் வெட்டி மரத்தைச் சீர்படுத்துதல்.*** 'அரக்கி உட்டா மரம் நல்லாத் தழஞ்சு வந்திரும்.' *2.* ***மும்மரமாக வேலை செய்தல்.*** 'இதப் பார்க்கக்கூட நேரமில்லாத அப்படி என்ன அரக்கறான்?'

**அரட்டை** - *பெ.* ***மூங்கிலால் செய்யப்படும் தடுப்பு.*** 'அரட்ட சாஞ்சு போச்சு பாரு.'

**அரணா** - *பெ.* ***வெள்ளியால் செய்யப்பட்ட அரைஞாண்.*** 'பேரனுக்கு ஒரு அரணா எடுத்துப் போடறதுதான.'

**அரப்பு** - *பெ.* ***தலைக்குத் தேய்த்துக் குளிக்கப் பயன்படும் துரிஞ்ச மரத்தழைப்பொடி.*** 'அரப்புத் தேச்சுத் தலைக்கு ஊத்திக்கிட்டேன்.'

**அரப்புத்தழை** - *பெ.* ***அரப்புக்குப் பயன்படும் துரிஞ்ச மரத்தின் இலைக்கொத்து.*** 'அரப்புத்தழ பொறிச்சாரப் போறம்.'

**அரம்** - பெ. ***மாடுகளின் பெண்குறி.*** 'அரத்தத் தொட்டா அப்பிடியே நிக்குது. காளக்கிப் போடோனும்.'

**அரி**[1] - *வி.* ***புல், பயிர்களைப் பிடுங்கிச் சேகரி.*** 'இன்னும் கொஞ்சம் பில்லு அரீடா.'

**அரி**[2] - *பெ.* ***இரண்டு கைகளையும் சேர்த்து அள்ளும் அளவு.*** 'கன்னுக்குட்டிக்கு ஒரு அரிப் பில்லுப் போதாதா.'

**அரிக்கி** - *பெ.* ***வாணலி எண்ணெயிலிருந்து பலகாரங்களைச் சேர்த்து (அரித்து) எடுக்கும் கரண்டி.*** 'அரிக்கிய இன்னம் புடி எண்ண வடியட்டும்.'



அரிக்கி

**அரிக்குஞ்சு** - *பெ.* ***மிகச் சிறிய மீன் குஞ்சு.*** 'அரிக்குஞ்சாப் புடிச்சாந்து கெணத்துல உட்ருக்கறன்.'

**அரிக்குஞ்சுக் கருவாடு** - *பெ.* ***மிகச் சிறிய மீன் குஞ்சுக் கருவாடு.*** 'அரிக்குஞ்சுக் கருவாடாப் பாத்து வாங்கியா.'

**அரிகரண்டி** - **காண்க: அரிக்கி.**

**அரிசிப்பூடு** - *பெ.* ***சிறு இலைகளை உடைய ஒருவகைப் பூண்டு.*** 'அரிசிப்பூடுன்னா வெள்ளாடு நல்லாக் கடிக்கும்.'

**அரிசீம் பருப்புச் சோறு** - *பெ.* ***(அரிசியும் பருப்பும் கலந்து செய்யும்) கூட்டாஞ்சோறு.*** 'வர நேரமாயிடுச்சா அதான் அரிசீம் பருப்பு ஆக்கிட்டன்.'

**அரிமனசு** - *பெ.* ***உடன்பாடில்லாத (உறுத்தலோடு கூடிய) மனம்.*** 'அவங்க ஊட்டுக்குப் போறதுக்குக் கொஞ்சம் அரிமனசாத்தான் இருக்குது.'

**அரிக்கெடை** - *பெ.* ***நெல் அறுத்துச் சிறுசிறு கத்தைகளாகக் கட்டி ஒரு நாள் முழுக்கக் குவியலாகப் போட்டு வைத்திருக்கும் கிடப்பு.*** 'அறுத்து அரிக்கெட போட்டிருக்கறம்.'

**அரை** - **காண்க: அரம்.**

**அல்லக்கயிறு** - *பெ.* ***பனை மரங்களில் தெளுவிறக்க ஏறும்போது மரத்தோடு சேர்த்து இடையில் கட்டிக் கொள்ளும் பிரம்பிணை போன்று பின்னப்படும் தோல் கயிறு.*** 'அல்லக்கவுறு பிரி உட்டுப் போச்சு.'



அல்லக்கயிறு

**அல்லக்கன்னு** - *பெ.* **வாழையின் பக்கவாட்டில் புடைத்து வரும் கன்று.** 'அல்லக்கன்ன வெட்டி உடு.'

**அல்லக்கொண்டை** - *பெ.* **பெண்கள் மயிரை ஒரு புறமாகச் சேர்த்துப் போட்டுக்கொள்ளும் கொண்டை.** 'அல்லக்கொண்ட போட்டுக்கிட்டுப் போறாபாரு.'

**அல்லகட்டிக் கிட(த்தல்)** - *வி.* **போதுமான உணவு இல்லாமல் உடல் ஒடுங்கிக் கிடத்தல்.** 'அல்லக்கட்டி கெடக்குறானே..... சீக்கிரம் செத்துப் போயிருவானாட்டம் இருக்குது.'

**அல்லச்செவுரு** - *பெ.* **அல்லைச்சுவர்; பக்கச்சுவர்.** 'அல்லச் செவுத்து மேல காசிருக்குது எடுத்தா.'

**அல்லு** - *பெ.* **(வசதியிருப்பவர் அதை மறைத்து வாங்கும்) இரவல்.** 'அவனுக்கென்ன கேடு. அல்லெடுத்துக்கிட்டுத் திரியறான்.'

**அல்லெடு(த்தல்)** - **காண்க: அல்லு**

**அல்லை** - *பெ.* **1. ஓரப்பகுதி; பக்கம்.** 'கொட்டாய்க்கு அல்லையில சட்டி கமுத்தீருக்குது.' **2. அக்குளிலிருந்து இடைவரைக்குமான உடலின் விளிம்புப் பகுதி.** 'அல்லையில என்னடா தழும்பு.'

**அல்லை இடி(த்தல்)** - *வி.* **கரும்பின் கட்டைப்பயிர் தழைவதற்காகப் பக்கவாட்டுப் பார் அழித்து விடுதல்.** 'கரும்புக் காடு அல்ல இடிச்சாச்சா.'

**அல்லை வெட்டு(தல்)** - **காண்க: அல்லை இடித்தல்.**

**அலகு கருது** - *பெ.* **அலகு கதிர்; திருவிழா நாளில் வைக்கோல் பிரியில் நெற்கதிர்களைக் கட்டி வட்டமாக வீட்டிலோ கோயிலிலோ தொங்கவிடும் அலங்காரம்.** 'அலகு கருது பாரு. அழகா இருக்குது.'

**அலவ நாத்திக் குருவி** - *பெ.* **மைனாக் குருவி.** 'அலவநாத்திக் குருவீவ கள்ளக்குடிச்சிப்புட்டு கத்தறதப் பாரு.'

**அலாக்கா** - *வி.அ.* **(எதிர்பார்க்காத அளவு) மிகுந்த உயரமாக.** 'அப்பிடியே அலாக்காத் தூக்கீட்டான்.'

**அழும்பு** - *பெ.* **வீணாக்கம் செயல்களில் ஈடுபவதைக் குறிக்கும் திட்டுச்சொல்.** 'அவம் பண்ற அழும்பு தாங்க முடியலீடா.'

**அவசநாத்தம்** - பெ. **ஈரத்தோடு துணிகளை மடித்தோ குவித்தோ வைத்துவிட்டால் பின்னர் அதிலிருந்து வரும் அழுகல் நாற்றம்.** 'துணி அவசநாத்தம் ஏறிப்போயிரும். இன்னும் கொஞ்சம் காயட்டும்.'

**அவடத்த** - *வி.அ.* **அங்கே; அவ்விடத்தில்.** 'அவடத்த என்னத்தத் தேடற.'

**அவுசியம்** - *பெ.* **அபிஷேகம்; தனிப்பட்ட ஒருவர் செலவில் கடவுளுக்குச் செய்யும் பூசை.** 'இன்னக்கி அவுசியம் எங்களது தான்.'

**அவுதி** - *பெ.* **அவசரம்.** 'அவுதியா எங்க போற.'

**அவுசேரி** - *பெ.* **வேசி; விபச்சாரம்.** 'உன்னாட்டம் ஆருடி அவுசேரி.' 'அத்தக்கிப் புத்தி சொல்லி அண்ணன் மக அவுசேரி போனாளாம்' - பழமொழி.

**அவுனி** - **காண்க: அகினி.**

**அழிகாடு** - *பெ.* **அறுவடை செய்தபின் மிச்சம் மீதியுள்ள செடிகொடிகளைக் காத்து, பின் அவற்றையும் ஆடு மாடுகளுக்கு மேய விட்டுவிடுவதால் அழியும் நிலையில் உள்ள விளைச்சல் நிலம்.** 'அழிகாட்டுல தான் ஆடு மேயுது.'

**அழியவிடு (தல்)** - *வி.* **அறுவடை செய்தபின் மிஞ்சியிருக்கும் செடிகொடிகளில் ஆடு மாடுகளை மேயவிடுதல்.** 'அந்தக் காட்டுல இன்னம் என்ன இருக்குது அழிய உட்றதுதான.'

**அழுக்குத் தொம்பை** - *பெ.* **அழுக்குத் துணிகள் போட்டு வைக்கும் கூம்பு**



அழுக்குத் தொம்பை

வடிவிலான கூடை. 'துணிவள எடுத்து அழுக்குத்தொம்பைல போட்டு வைய்யேன்.'

**அழுக்குப் போழை** - *காண்க:* **அழுக்குத்தொம்பை.**

**அழுகாச்சு** - *பெ.* **அழுகை.** 'அடேங்கப்பா...இந்த அழுகாச்சு ஆவாதப்பா.'

**அழுந்த** - *வி.அ.* **ஒட்டி; ஓரமாக.** 'செவரழுந்தப் பாரு.....கெடக்கும்.'

**அறியாப்பிள்ளை** - *பெ.* **விவரம் தெரியாத வயதில் உள்ள பெண்.** 'அறியாப்பிள்ளக்கு என்ன தெரியும்.'

**அறியாப்பையன்** - *பெ.* **விவரம் தெரியாத வயதில் உள்ள பையன்.** 'அறியாப் பையனோட எதுக்குச் சண்ட.'

**அறுதி** - *பெ.* 1. **வரப்பின் கடைப்பகுதி.** 'அறுதிய நல்லா வெட்டி உடு.' 2. **அதிகம் செலவு செய்யாதவள் / ன்.** 'அறுதிக்கு அரைப்படி, ஊதாரிக்கு ஒருபடி' - பழமொழி.

**அறுதியா** - *வி.அ.* **அறுதியாக; துளியும் மிச்சமில்லாமல்.** 'அறுதியாத் தீந்து போச்சு.'

**அன்னக்கரண்டி** - *பெ.* **சோற்றைத் தோண்டி எடுக்கும் கரண்டி.** 'அன்னக்கரண்டில தோண்டிப் போடு.'

**அன்னக்கை** - **காண்க: அன்னக்கரண்டி.**

**அன்னம்** - *பெ.* **சரியாக வேகாத சோறு.** 'சோறு அன்ன அன்னமா இருக்குது.'

**அன்னாடம்** - *பெ.* **அன்றாடம், தினந்தோறும்.** 'அன்னாடம் இதே வழக்கமாகப் போச்சு.'

**அன்னாப்பு** - *பெ.* **திமிர்; கர்வம்.** 'அவனுக்கு அன்னாப்பு ஏறிப் போச்சு.'

**அனத்தம்** - *பெ.* **அழியும் வாய்ப்பு; கேடு.** 'அதுல காசுக்குத்தான் அனத்தம் போ.'

**அனத்து (தல்)** - *வி.* **நோயின் காரணமாக இயலாமையால் மனிதரோ வீட்டுவிலங்கோ 'ம் ம்' என்று வாய்விட்டுச் சத்தமிடுதல்.** 'இப்பிடி அனத்திக்கிட்டுக் கெடக்கறான். மருந்து வாங்கிக் குடுக்கறது தான.'

**அனாமத்து** - *பெ.* **ஆதரவற்ற நிலை.** 'நானே அனாமத்தாக் கெடக்கறன்.'

**அனாமத்துச் சொத்து** - *பெ.* **வாரிசற்ற உடைமை.** 'அவனுக்குப் பிள்ளையா குட்டியா... அனாமத்துச் சொத்துதான்.'

**அனுசு** - *பெ.* **தாலியில் இணைக்கப்பட்டிருக்கும் ஆறு சதுரம் கொண்ட நகை.** 'அனுசத் சுத்தி அழுக்கேறிப் போச்சு.'



அனுசு

## ஆ

**ஆக்காட்டி** - *பெ.* **ஆளைக் கண்டதும் கத்தும் ஒரு வகைப் பறவை.** 'ஆக்காட்டி கத்துது பாரு.'

**ஆக்குப்பூட்டு** - *பெ.* **1. மாடு கட்டும் ஒரு வகைக் கயிற்று முடிச்சு.** 'நல்லா ஆக்குப் பூட்டுப் போட்டுக் கட்டு.' **2. ஓலைக் கொட்டகையின் மையச் சட்டத்தைத் தாங்கி நிற்கும் குத்துக்கால்களுக்கு ஆதரவாக, உள்புறத்தில் இரு பனந்தப்பைகளைப் பெருக்கல் குறிபோல் அமைத்தல்.** 'குத்துக்கால் அவ்வளவு வலுவு இல்ல. ஆக்குப்பூட்டுப் போட்ட உட்ரலாம்.'

**ஆகாசக் கிழங்கு** - *பெ.* **தோண்டி எடுத்துக் கயிற்றில் கட்டித் தொங்கவிட்டால் துளிர்விட்டு வளரும் ஒருவகை மூலிகைக் கிழங்கு.** 'ஆகாசக் கெழங்கு புடுங்கியாந்தன். கட்டித் தொங்க உடு.'

**ஆகிடியம்** - *பெ.* **தற்காலிகம்.** 'அவனுக்கு வேல ஆகிடியந்தான்.'

**ஆசாரம்** - *பெ.* **வீட்டு முற்றம்; வரவேற்ப றை.** 'ஆசாரத்துல உக்கோர வெக்கறதுதானே.'

**ஆசு** - *பெ.* **செருப்பின் அடியில் குதிகால் பகுதியில் வைத்துத் தைக்கும் தோல்.** 'இந்தச் செருப்புக்கு நல்ல ஆசா வெச்சுக் கொடு.'



ஆசு

**ஆசுவம்** - *பெ.* **பிச்சை.** 'என்னமோ ஆசுவமாக் கொடுத்தாப்பல நெனச்சுக்கிட்டா.'

**ஆட்டாளி** - *பெ.* **ஆட்டத்தைக் கற்றுக் கொடுப்பவர்; தலைவர்; காரியத்திற்குக் காரணமானவர்.** 'அவன் என்ன ஆட்டாளி.'

**ஆட்டுப்பட்டி** - *பெ.* **ஆடுகளைக் காக்கும் தடுப்புகளால் ஆன அடைப்பு.** 'ஆட்டுப்பட்டி வேற காட்டுக்கு மாத்தோனும்.'

**ஆடிவெட்டை** - *பெ.* **ஆடி மாதத்தில் விதைப்பு நடக்கும். வரவு இருக்காது. கையிலிருந்தே காசு செலவழிக்க வேண்டியிருக்கும். அப்படிப்பட்ட ஆடி மாதத்தில் ஏற்படும் பொருளாதார நெருக்கடி.** 'ஆடிவெட்டையில ஆருகிட்டக் காசிருக்கும்.'

**ஆத்தா** - *பெ.* **1. அப்பாவின் அம்மா.** 'ஆத்தா கூப்பிட்டுச்சு.' **2. பெண்களை மரியாதையாக அழைக்கும் விளிச்சொல்.** 'என்னங்காத்தா, எப்ப வந்தீங்க.'

**ஆத்துக்கிச்சு** - *வி.* **மூப்பினால் ஓய்ந்து போதல்.** 'இனியென்ன கட்ட ஆத்துக்கிச்சு.'

**ஆதண்டை** - *பெ.* **ஒருவகை மூலிகைச் செடி.** 'ஆதண்ட எங்கயாச்சும் இருந்தாப் பாரு.'

**ஆந்துப்போச்சு** - **காண்க: ஆத்துக்கிச்சு.**

**ஆப்பச்சாறு** - *பெ.* **ஒரு கரண்டி அளவுக்கான குழம்பு.** 'ஆன வந்தாலும் ஆப்பச்சாறுதான்' - பழமொழி.

**ஆப்பு** - *பெ.* **குழந்தைகள் உண்ணும் சோறு.** 'ஆப்பு ஊட்டுட்டுமா கண்ணு.'

**ஆம்பாடு** - *பெ.* **தொடைக்கும் குறிக்கும் இடைப்பட்ட (உடலின்) பகுதி.** 'ஆம்பாட்டுல நெறி கட்டியிருக்குது.'

**ஆமரம்** - *பெ.* **ஆண் (பனை) மரம்.** 'அந்த ஆமரத்துல பாளை வந்திருக்குது.'

**ஆரக்கால்** - *பெ.* **மாட்டு வண்டிச் சக்கரத்தில் சுற்று வட்டத்தையும்**

*மையத்தையும் இணைக்கும் கட்டை.* 'ஆரக்கால்ல ஒன்னு புடுங்கீடுச்சு.'

**ஆராட்டம்** - பெ. *பசியினால் ஏற்படும் கிறுகிறுப்பு.* 'ஒரே ஆராட்டமா இருக்குது. ரண்டு வா சோறு குடிக்கோனும்.'

**ஆரியக்கல்** - பெ. *கேழ்வரகு அரைக்கும் எந்திரம்.* 'ஆரியக்கல்லுல இப்ப ஆரு நெரிக்கறாங்க.'



ஆரியக்கல்

**ஆரியத்தாள்** - பெ. *கேழ்வரகுத் தட்டை.* 'ஆரியத்தாளு அறுத்துப் போட்டிருக்குது.'

**ஆரியப்பயிர்** - பெ. *கேழ்வரகுப் பயிர்.* 'ஆரியப்பயிரு நடவு இருக்குது.'

**ஆரியம்** - பெ. *கேழ்வரகு.* 'இந்த வருசம் ஆரியம் எவ்வளவாச்சு.'

**ஆரியரட்டு** - பெ. *கேழ்வரகுத் தவிடு.* 'இந்த எருமை ஆரியரட்டை நல்லாத் திங்கும்.'

**ஆலச்சட்டி** - பெ. *பனை வெல்லப் பாகை எடுத்து ஊற்றி ஆற்றவும் அடுக்குமிடாவின் மேல் பகுதியில் வைத்து மாவு, தானியம் போன்றவற்றைப் போட்டு வைத்துக் கொள்ளவுமான பெரிய மண் பாத்திரம்.* 'ஆலச்சட்டியில கம்ம மாவு இருக்குது. எடுத்துக்க.'

**ஆலக்குழி** - பெ. *ஆலைக்குழி. பனை வெல்லப் பாகு காய்ச்ச, வீட்டு விசேஷங்களுக்குச் சமைக்கப் பெரிதாக வெட்டும் குழி.* 'ஆலக்குழி வெட்டியாச்சு.'

**ஆலக்கூடம்** - பெ. *ஆலைக்கூடம். பாகு காய்ச்சும் அடுப்பைச் சுற்றி மண்ணால் உருவாக்கப்பட்ட பகுதி.* 'ஆலக்கூடத்துக்கு மண்ணிடோனும்.'

**ஆலமேடு** - பெ. *ஆலைமேடு; பாகு காய்ச்சும் அடுப்பு இருக்கும் பகுதி.* 'ஆலமேட்டுல வெறவு கெடக்குது.'

**ஆலாக்கீரை** - பெ. *கீரை வகைகளில் ஒன்று.* 'ஆலக்கீர பொறிச்சாந்திருக்கிறேன்.'

**ஆலாப்பற(த்தல்)** - வி. *வலி தாங்க முடியாமல் படும் துன்பம்.* 'பையன் ஆலாப்பறக்கறான்.'

**ஆலாம்படி** - பெ. *மாட்டு வகைகளில் ஒன்று.* 'கட்டுத்தரையில ஆலாம்படி ஒன்னு இருந்தாத்தான் அழகு.'

**ஆலையடுப்பு** - பெ. *பனை வெல்லப் பாகோ கரும்புப் பாகோ காய்ச்சும் அடுப்பு.* 'ஆலையடுப்புப் பக்கம் கொழந்தய உட்ராத.'

**ஆவசோவை** - பெ. *தெம்பு, பலம் இல்லாத தன்மை.* 'அவன் ஒரு ஆவசோவைடா.'

**ஆள்கட்டு** - பெ. *ஆள் பலம்.* 'அவனுக்கென்ன ஆள்கட்டு இருக்குது.'

**ஆள் கைமாறு(தல்)** - வி. *வேலை செய்து கொண்டிருப்பவர் உண்ணச் செல்ல வேறொருவர் வந்து ஆள்மாற்றி விடுதல்.* 'ஆள்கை மாறியாச்சா.'

**ஆளுக்காரன்** - பெ. *நிலம் இருப்போரிடம் ஆண்டுக் கூலிக்கு வேலை செய்யும் (பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த) ஆள்.* 'உங்க ஆளுக்காரன் வந்துட்டானா?'

**ஆயா** - பெ. *பாட்டி; அப்பாவின் அம்மா.* 'அந்தாயா எங்க வந்துச்சு.'

**ஆனநெருஞ்சி** - *பெ.* ***இலைகளும் காய்களும் பெரிதாக இருக்கும் ஒருவகை நெருஞ்சிச் செடி.*** 'ஆனநெருஞ்சி நெறயா இருக்குது. காலப் பாத்து வெச்சு வா.'

# இ

**இக்கம்** - *பெ.* ***இடுப்பு.*** 'இக்கத்துல கை வெக்காத.'

**இக்கட்ட** - *வி.அ.* ***இந்தப் பக்கம்.*** 'இக்கட்ட என்ன கெடக்குது.'

**இக்கட்டு** - *பெ.* ***1. துன்பச் சூழல்.*** 'குடும்பத்த இக்கட்டுல உட்டுட்டுப் போயிட்டானே.' *2.* ***நெருக்கடி.*** 'இப்பப் பெரிய இக்கட்டு. நீதாங் காப்பாத்தோனும்.'

**இங்கத்த** - *பெ.அ.* ***இந்த ஊரினுடைய; இந்தப் பக்கத்து.*** 'அவன் இங்கத்த பையன்.'

**இசுக்காட்டு** - *வி.* ***எதிரிலிருப்பவர்க்குக் கொடுப்பது போலக் காட்டி, கொடுக்காமல் ஏமாற்றுதல்.*** 'கொழந்தைக்குப் போயி இசுக்காட்டிக்கிட்டுத் திங்கறான்.'

**இட்டேரி** - *பெ.* ***நிலங்களுக்கிடையே எல்லையாக அமைக்கப்பட்ட பெரிய வரப்பு.*** 'இட்டேரில ஆடு மேயுது.'

**இட்டேரித்தடம்** - *பெ.* ***பெரிய வரப்பின் மீதுள்ள வழி.*** 'இட்டேரித் தடத்துல போனாச் சீக்கிரமாச் சேர்ந்தரலாம்.'

**இட்ரிப்பு** - *பெ.* ***நெஞ்சுக் கரிப்பு.*** 'கொஞ்சம் இட்ரிப்பா இருக்குது. ரண்டு உப்புக்கல்லுப்போட்டுத் தண்ணி குடு.'

**இட்ரை** - ***காண்க: இட்ரிப்பு.***

**இடக்கயிறு** - ***காண்க: அல்லக்கயிறு.***

**இடத்தான்** - *பெ.* ***வண்டி, ஏற்றம், ஏர் ஆகியவற்றில் இடது பக்கம் செல்லும் பழக்கம் கொண்ட மாடு.*** 'அந்த எடத்தானப் புடிச்சுக் கட்டு.'

**இடுக்கு** - *வி.* ***பனை, தென்னை மரங்களில் தெளுவிறக்கப் பாளைகளைப் பதப்படுத்துதல்.*** 'புதுசா வந்த பாளய இடுக்கீட்டயா.'

**இடுக்குக்கோல்** - *பெ.* ***பனை, தென்னை மரங்களில் தெளுவிறக்கப் பாளைகளைப் பதப்படுத்தும் இரண்டு கட்டைகள் இணைத்துக் கட்டப்பட்ட தடி. இக்கோலை ஆட்டுகிடாய்களுக்குக் காயடிக்கவும் பயன்படுத்துவர்.*** 'இடுக்குக் கோல இப்ப எடுத்தாரலியே... நாளைக்குப் பாளைய இடுக்கீறலாம்.'



இடுக்குக்கோல்

**இடுக்குத்தடி** - ***காண்க: இடுக்குக்கோல்.***

**இடுத்தம்** - *பெ.* ***குறுகிய எண்ணம்; சுயநலம் மிக்க தன்மை.*** 'அவுங்க நல்லவுங்கன்னா நெனச்சா செரியான இடுத்தம் புடுச்சவிய.'

**இடும்பன்** - *பெ.* ***குயவர் சக்கரத்தை நிலை நிறுத்திச் சுற்றும் வலிமையான கல்.*** 'இடும்பனாட்டம் நிக்கறான்.'

**இண்டம்** - *பெ.* ***அடர்ந்திருக்கும் ஒரு வகை முள்செடி.*** 'அந்த ஊட்ல இண்டம் புடிச்சுக் கெடக்குது.'

**இணைபொலி** - *பெ.* **இருவரின் நிலங்களுக்குப் பொதுவில் எல்லையாக இருக்கும் வரப்பு.** 'நாங்க எணபொலிக் காட்டுக்காரங்க.'

**இத்தாச்சோடு** - *பெ.அ.* **மிகப்பெரிய.** 'இத்தாச் சோட்டு மூட்டயத் தூக்க முடியுமா?'

**இத்தனூண்டு** - *பெ.அ.* **மிகச் சிறிய.** 'இத்தனூண்டு கருப்பட்டி கொடுத்தான்.'

**இந்த வாட்டி** - *வி.அ.* **இந்த முறை.** 'இந்தவாட்டி ஜெயிக்கறன் பாரு.'

**இமுசு** - *பெ.* **வலி; துயரம்; பிறரால் உண்டாகும் துன்பம்.** 'இந்த இமுசு பட ஆரால முடியும்.', 'இமுசு பண்ணிக்கிட்டே இருக்கிறான்.'

**இருக்கு(தல்)**[1] - *வி.* **அடி(த்தல்).** 'சொல்ற பேச்சுக் கேக்கலீன்னா இருக்கீருவன் பார்த்துக்க.'

**இருக்கு**[2] - *பெ.* **கையாலோ தடியாலோ அடிக்கும் அடி.** 'ரண்டு இருக்கு இருக்கீருவன் பாத்துக்க.'

**இருசி** - *பெ.அ.* **கடினமான; இறுகிய.** 'அவனுக்கு இருசி மனசு.'

**இருசு** - *பெ.* **வண்டி அச்சு.** 'இருசு தேஞ்சு போச்சு.'

**இருசு திரட்டு(தல்)** - *வி.* **வண்டியின் தேய்ந்துபோன அச்சைச் சரி செய்தல்.** 'வண்டிக்கு இருசு தெரட்டியாச்சா.'

**இருட்டா இருக்க** - *பெ.* **விடிவதற்குச் சற்று முன்பு லேசாக இருள் இருக்கும் நேரம்.** 'இருட்டா இருக்க வந்துரு போலாம்.'

**இருப்பணம்** - *பெ.* **கொடிக்காலில் வெற்றிலை கிள்ளும் போது கட்டை விரலில் போட்டுக் கொள்ளும் இரும்பினால் ஆன ஒரு கருவி.** 'இருப்பணத்த எடுத்துப் போட்டுக்க.'

**இல்லெடம்** - *பெ.* **வீடு, வசிப்பிடம்.** 'இவ்வளவு நாள் பொழச்சு என்ன, ஒரு இல்லெடங்கூடக் கெடையாது.'

**இவடத்த** - *வி.அ.* **இங்கே; இவ்விடத்தில்.** 'இவடத்த கெடக்குது. நீ எங்கெங்கயோ தேடற.'

**இளநேரம்** - *பெ.* **வெயில் கடுமையாக இல்லாத காலை நேரம்.** 'எளநேரத்துலயே போயிட்டு வந்திரு.'

**இளம்பயிர்** - *பெ.* **1. முளைத்துச் சிறிது நாட்களே ஆன பயிர்.** 'எளம்பயிரப் போயி ஆட்ட உட்டு மேச்சிருக்கிறான்.' **2. ஒன்பது மாதம் ஆன வெற்றிலைக் கொடிக்கால்.** 'இப்பத்தான் எளம்பயிரா இருக்குது.'

**இளவெயில்** - *பெ.* **காலை வெயில்.** 'எள வெயிலுக்குப் பயந்துக்கிட்டு எவனாச்சும் ஊட்ட இருப்பானா.'

**இளுக்கு** - *வி.* **உடலிலோ சுவரிலோ மை போன்றவற்றைப் புள்ளியாக வைத்து விரலால் கோடு போல இழுத்துவிடுதல்.** 'எங்கன்னத்துல பொட்டு இளுக்கி உட்டுட்டாம் பாரு.'

**இறக்கத்துக்கோயில்** - *பெ.* **மலை அடிவாரத்தில் அமைந்திருக்கும் கோயில்.** 'மலைக்கு ஆரு போனா, எறக்கத்துக் கோயிலில சாமி கும்புட்டுட்டு வந்தம்.'

**இறங்கு துறை** - *பெ.* **வாய்க்காலின் ஓரத்தில் கால்நடை, மனிதர்கள் இறங்கும் பகுதி.** 'எறங்கு தொறைல தண்ணி மோரு.'

**இன்னாரு** - *பெ.* **இவர் என்று சுட்டிச் சொல்லுதல்.** 'இன்னாருன்னு சொன்னாத்தான் தெரியும்.'

**இன்னாக்காலம்** - *பெ.* **இதே காலம்.** 'போன வருசம் இன்னாக் காலமெல்லாம் சோளம் இத்தன ஒசரம் நிக்கிது.'

**இனுங்கு(தல்)** - *வி.* **மரத்திலோ செடிகளிலோ இருக்கும் சிறு கோல்களை வேகமாகக் கையாலோ கோலாலோ இழுத்துப் பறித்தல்.** 'ரண்டு கொத்து இனுங்கிப் போடு.'

**இஸ்கார்** - *பெ.* **தேவையற்ற தொல்லை; துன்பம் வரும் என்று தெரிந்தும் ஒரு செயலில் இறங்குதல்.** 'எனக்கு அந்த இஸ்காரே வேண்டாமப்பா, நா வர்ல.'

## ஈ

**ஈக்கமார்** - *பெ.* **தென்னை ஈர்க்குகளால் (ஓலை நரம்பு) ஆன கூட்டப் பயன்படும் விலக்குமாறு.** 'அந்த ஈக்கமாத்த எடுத்தா.'

**ஈக்கி** - *பெ.* **ஈர்க்கு; தானியத் தட்டைகளின் மேற்புறத் தோல்.** 'தட்டப் பாத்து உருவு, ஈக்கி கிழிச்சிப்புடும்.'

**ஈசுகன்னு** - *பெ.* **குறைப் பிரசவத்தில் மாடு ஈன்ற கன்று.** 'ஈசுகன்னுக்கு மயிரே மொளக்கல.'

**ஈசுகுட்டி** - *பெ.* **குறைப் பிரசவத்தில் ஆடு ஈன்ற குட்டி.** 'இந்த ஈத்து ஈசுகுட்டி போட்டுடுச்சு.'

**ஈஞ்சமாறு** - *காண்க: ஈக்கமார்.*

**ஈஞ்சிக்கிட(த்தல்)** - *வி.* **மரத்தில் பழங்கள் நிறைந்திருத்தல்.** 'அந்த மரத்துல புளி இந்த வருசம் ஈஞ்சிக் கெடக்குது.'

**ஈட்டுலக்கை** - *பெ.* **உரலில் ஒரே நேரத்தில் இரண்டு பேர் மாற்றி மாற்றிப் போட்டுக் குத்தும் உலக்கை.** 'இந்த மாவு இடிக்க முடியாதா. ஈட்டொலக்க போட்டா அர நிமிசம்.'

**ஈடு** - *பெ.* **கையாலே தடியாலோ அடிக்கும் அடி.** 'நல்ல மாட்டுக்கு ஒரு ஈடு.' (பழமொழி)

**ஈத்து** - *பெ.* **ஆடு மாடுகளின் மகப்பேறு எண்ணிக்கை.** 'இந்த மாடு எத்தன ஈத்து கன்னுப் போட்டிருக்குது.'

**ஈத்து மாடு** - *பெ.* **ஒருமுறைக்கு மேல் கன்று ஈன்ற மாடு.** 'ஈத்து மாட்டுக்கென்ன அப்பிடிப் பாவன.'

**ஈந்துவிடுதல்** - *வி.* **பனைமரத்தின் (அதிகக் கள் சுரக்கவோ, நுங்கு காய்க்கவோ) தேவையில்லாத பட்டை பன்னாடைகளை அறுத்துவிடுதல்.** 'காயில்ல காயில்லங்கற... மரத்த ஈந்து உட்ருந்தாத்தான.'

**ஈர்வலி** - *பெ.* **தலையில் பிடித்திருக்கும் ஈர்களைக் கோதி எடுப்பதற்கான மரச்சீப்பு.** 'அந்த ஈர்வலிய எடு.'



ஈர்வலி

**ஈனம்** - *பெ.* **ஒன்றைச் செய்வது குறித்த தெளிவான அறிவு.** 'அவனுக்கு கொஞ்சமாச்சும் ஈனமிருந்தாத்தான.'

**ஈனமானம்** - *காண்க: ஈனம்.*



ஈட்டுலக்கை

ஈனவானம் - *காண்க: ஈனம்.*

ஈனன் - *பெ.* ***இழிந்த புத்தி உள்ளவன்; கருமி.*** 'ஈனனுக்கு இரு செலவு.' - பழமொழி

## உ

**உக்கலச்செயினு** - *பெ.* ***கழுத்தோடு ஒட்டியிருக்கும்படியாக அணியும் நகை.*** 'எங்க பாட்டியா இன்னம் உக்கலச்செயினு போட்டிருக்குது.'

**உச்சானி** - *பெ.* ***மிக உயரமான மரக்கிளையின் நுனிப்பகுதி.*** 'உச்சானியில ஏறிக்கிட்டு வெளையாட்டு என்னடா?'

**உசுப்பு** - *வி.* ***1. வளைக்குள் நீளக்குச்சியை நுழைத்து வேகமாக இழுத்து இழுத்து மீண்டும் உள்ளே விட்டு எலியை வெளியே கிளப்பு.*** 'நல்லா உசுப்புடா. எலி வர்ட்டும்.' ***2. தொந்தரவு செய்து எழுப்புதல்.*** 'நல்லா உசுப்பி எழுப்புடா.'

**உசுப்பேற்றுதல்** - *வி.* ***தூண்டி விடுதல்.*** 'அவன நல்லா உசுப்பேத்தி உட்டுட்டான்டா.'

**உண்டுனா** - *வி.அ.* ***அளவுக்கு அதிகமாக; நிரம்ப.*** 'சோறு கொஞ்சம் உண்டுனாத் தின்னுட்டன்.'

**உத்தி** - *பெ.* ***1. சிறுவர்கள் விளையாட்டில் காலால் மண்ணில் வட்டமிட்டு ஏற்படுத்திக் கொள்ளும் எல்லை.*** 'நா(ன்) உத்தியத் தொட்டுட்டன்.' ***2. சிறுவர்கள் விளையாட்டில் அணி பிரிக்கும் முறை.*** 'உத்தி பிரிச்சிக்கிட்டு வெளையாடலாம்.'

**உதி(த்தல்)** - *வி.* ***உடம்பில் சதை பிடித்தல்.*** 'ஆளு இப்படி உதிச்சுப் போயிட்டான்.'

**உப்பசம்** - *பெ.* ***1. சரியான செரிமானம் இல்லாமையால் வயிறு ஊதிப் போதல்.*** 'வயிறு உப்பசமா இருக்குது. என்ன தின்னனோ தெரீல.' ***2. புழுக்கம்.*** 'ஒரே உப்பசமா இருக்குது. அதான் வேத்து ஒழுவுது.'

**உப்பாட்டம்** - *பெ.* ***பெண்கள் விளையாடும் ஒரு வகை விளையாட்டு.*** 'உப்பாட்டத்துக்கு வர்றியா.'

**உப்புக்கண்டம்** - *பெ.* ***உப்புத் தடவிக் காயவைத்த கறித்துண்டம்.*** 'ஒழுங்கா இருந்துக்க. இல்லீனா தோல உரிச்சு உப்புக்கண்டம் போட்ருவன்.'

**உம்பான்** - *பெ.* ***உணவு.*** 'வேல செய்யலீனா உம்பானுக்கு எங்கே போறது.'

**உயிர்நிலை** - *பெ.* ***ஆண் / பெண் குறி.*** 'உயிர்நெலையிலேயே ஒதச்சுட்டான்டா.'

**உருட்டா** - *பெ.* ***வாய்ச் சவடால்.*** 'இந்த உருட்டாவுக்கொன்னும் கொறச்சல் இல்ல.'

**உருட்டிக்கட்டு** - *பெ.* ***வேட்டியின் முன்பகுதியை எடுத்துச் சுருட்டிப் பின்பக்கத்தில் கோவணம் போல் சொருகிக் கொள்ளும் கட்டுமுறை.*** 'உருட்டிக்கட்டுப் போட்டுக்கிட்டு வந்துட்டான். வேலையில ஒண்ணுமில்ல.'

**உருட்டிக் கோமணம்** - *காண்க: உருட்டிக்கட்டு.*

**உருண்டை வெல்லம்** - *பெ.* ***உருண்டையாகச் செய்யப்படும் வெல்லம்.*** 'உருண்ட வெல்லம் வாங்கியா.'

**உருமாலை** - *பெ.* ***தலைப்பாகை.*** 'உருமாலய



உருமாலை

அவுத்துட்டு வாடா.'

**உருவு** - *பெ.* **நோய் நொடி வராமல் காக்க வேண்டுமென்ற நேர்ச்சிக்காகச் சிறு தெய்வங்களுக்கு மண்ணால் செய்து வைக்கும் மனிதர் உருவம்.** 'பையனுக்கு உருவு செஞ்சு வைச்சிருக்கறன்.'

**உருவுதடி** - **காண்க: இடுக்குக்கோல்**

**உலுக்காட்டு(தல்)** - *வி.* **தொலைத்தல்.** 'ரெண்டு பவுன் சங்கிலிய எங்கயோ உலுக்காட்டிட்டயேடா.'

**உள் அவுனிப்பட்டை** - *பெ.* **(தயிர் கடைவதற்காக மத்தை நிறுத்தித் தூணில் மேலும் கீழுமாய்க் கட்டும்படி) பனம் பட்டையின் அடிப்பகுதியிலிருந்து உரிக்கப்படும் நார்.** 'உள் அவுனிப்பட்ட ரண்டு உரிச்சுக்குடு.'

**உள்க்குத்து** - *பெ.* **சேலை கட்டும்போது முதல் சுற்றாக வைத்துக் கட்டும் சேலைப் பகுதி.** 'உள்குத்து நல்லா வெச்சாத்தான ஆவும்.'

**உள்கொடைசாய்(தல்)** - *வி.* **வண்டிச் சக்கரத்தில் கும்பம் உள்பக்கமாகத் தள்ளி இருத்தல்.** 'இதென்ன சக்கரம் உள்கொட சாஞ்சிருக்குது.'

**உள் சுருக்கு** - *பெ.* **மனதில் இருப்பதை வெளிக்காட்டாமை.** 'அவன் உள்சுருக்கு வெச்சுப் பேசறான்.'

**உள்ளுமடி** - *பெ.* **வெளியே தெரியாத வகையில் உள்ளே கட்டிக்கொள்ளும் மடி.** 'உள்ளுமடியில் வெச்சிருப்பா பாரு.'

**உள்ளொளவு** - *பெ.* **நமக்குள்ளேயே இருந்து கொண்டு எதிரிக்கு உளவு சொல்பவன்.** 'இது ஏதோ! உள்ளொளவு வேலதான்.'

**உள்ளோட்டு** - *வி.* **ஆடுகளை அடைப்பதற்காகப் பட்டிக்குள் ஓட்டுதல்.** 'ஆட்ட உள்ளோட்டிப்புட்டு வா.'

**உளந்தைக்குருவி** - *பெ.* **வாயின் இருபுறமும் வெளுத்துக் கோணியது போன்றிருக்கும் ஒருவகைக் குருவி.** 'உளந்தக் குருவிங்க சத்தம் இப்படி கேக்குது.'

**உளிமுகம்** - *பெ.* **பல வசதிகளும் கொண்ட (சிறப்புடைய) நடுவான இடம்.** 'ஊடு நல்ல உளிமொகமா இருக்குது.'

**உழப்பு** - *வி.* **சேற்றையும் தண்ணீரையும் சேர்த்துக் கலக்குதல்.** 'இப்படி ஒழப்பி வெச்சிருக்கறான்.'

**உழுக்கோல்** - *பெ.* **உழவின்போது மாடுகளை ஓட்டவும், கலப்பையில் சேர்ந்துவிட்ட மண்ணைத் தள்ளிவிடவும் கையில் வைத்திருக்கும் குச்சி.** 'உழுதவன் கணக்குப் பாத்தா ஒழக்கோல்கூட மிஞ்சாது.' (பழமொழி)

**உழும்பு** - *வி.* **பன்றி, மாடு ஆகியவை, தண்ணீருக்குள் கலந்த தவிட்டை பிரித்துத் தின்பதற்காக முகத்தை உள்ளே விட்டுத் தேடுதல்.** 'நல்லா உழும்பித் திங்கும் இந்த மாடு.' 'பன்னியாட்டம் உழும்பறான்.'

**உறவாரை** - *பெ.* **வெல்லப் பாகை உலர்த்த உதவும் தட்டையான முனை கொண்ட**



உறவாரை

***கோல்***. 'உறவாரையில திருப்பிப் போடு.'

**உறிக்கொடி** - *பெ*. ***உறிபோல் தொங்கும் காயையுடைய கொடி***. 'அங்க உறிக்கொடி படந்திருக்குது பாரு.'

**உறிச்சட்டி** - *பெ*. ***உறியில் வைக்கப்பட்டிருக்கும் மண்பாத்திரம்***. 'உறிச்சட்டியில உப்பிருக்குது. கொஞ்சம் அள்ளு.'

**உறைப்புளுத்தி** - *பெ*. ***ஆண்குறியின் முன் குமிழ்மேல் இயற்கையிலேயே தோல் மூடியிராமை***. 'டேய் ஒறப்புளுத்தி இங்க வாடா.'

**உறை வெல்லம்** - *பெ*. ***கரும்புப் பாகு உலர்வதற்கு முன் உண்பதற்காகப் பலமுறை கரண்டியால் உறைத்துச் செய்யப்படும் மென்மைத் தன்மையுடைய வெல்லக் கட்டி***. 'பாகு ஆறறதுக்குள்ள உறவெல்லம் போடு.'

## ஊ

**ஊங்காரம்** - *பெ*. ***காற்றின் ஊளை***. 'காத்து ஊங்காரம் போட்டுகிட்டு வருது.'

**ஊசித்தட்டான்** - *பெ*. ***ஊசி போன்ற உடலமைப்பை உடைய ஒருவகைச் சிறிய தட்டாம்பூச்சி***. 'ஊசித்தட்டான் புடுச்சுப்புடுவியா.'

**ஊசிப்புல்** - *பெ*. ***ஊசிபோல மெலிந்த தண்டை உடைய ஒருவகைப் புல்***. 'ஊசிப் பில்லேறிக் கெடக்குது காட்டுல.'

**ஊசை** - *பெ*. ***கெட்டுப்போன தானியம், பலகாரம்***. 'அது ஊசைடா, திங்காத.'

**ஊஞ்சமரம்** - *பெ*. ***தலைக்குத் தேய்த்துக் குளிக்கும் அரப்புத் தழை கொடுக்கும் மரம் (துரிஞ்சி என்றும் வழங்குவர்)***. 'ஊஞ்சமரம் ஒன்னு கட்டுவாயில இருக்குது.'

**ஊட்டி** - *பெ*. ***முன் கழுத்தின் நடுவில் இருக்கும் மூச்சுக்குழாய்***. 'ஊட்டியப் புடுச்சிப்புடுவம் பாத்துக்க.'

**ஊடுகட்டி அடி(த்தல்)** - *வி*. ***தப்பிக்க விடாமல் சூழ்ந்து அடித்தல்***. 'உன்னய ஊடுகட்டி அடிச்சிப் போடுவம்டா.'

**ஊடு கூட்டு(தல்)** - *வி*. ***குழந்தை பெற்ற பெண்ணை வீட்டுக்குள் அழைத்தல்***. 'அந்தப் பிள்ளய என்னைக்கி ஊடுகூட்டறாங்களாமா.'

**ஊடு பூசு(தல்)** - *வி*. ***வீடு பூசு; வீட்டுச் சுவர்களுக்குச் சுண்ணாம்பு பூசுதல்***. 'கலியாணம் வருது, ஊடுபூசோனும்.'

**ஊடுமுட்டி** - *பெ*. ***பெருச்சாளி***. 'அங்க ஒரு ஊடுமுட்டி ஓடுது.'

**ஊடுவழி(த்தல்)** - *வி*. ***வீடு வழித்தல்; வீட்டுத் தரையைச் சாணத்தால் மெழுகுதல்***. 'சனிக் கெழமிக்கித்தான் ஊடு வழிக்கோனும்.'

**ஊத்தானிக்குச்சி** - *பெ*. ***ஏரில் கலப்பையிலிருந்து கருவுத்தடி கழன்று விடாமல் இருக்கப் பின்பக்கத்தில் துளையிட்டுச் செருகப்படும் சிறு குச்சி***. 'ஊத்தானிக்குச்சிய நல்லா அடிச்சு உடு.'



ஊத்தானிக்குச்சி

**ஊமைக்காயம்** - *பெ*. ***புண் ஆகாமல் ஏற்படும் உள் காயம்***. 'ஊமைக்காயம் பட்டிருக்கும்.'

**ஊமைக்குத்து** - பெ. ***வெளியே காயமேற்படாமல் பலமாகக் குத்தும் குத்து.*** 'அவன ஒரு ஊமக்குத்து உடு.'

**ஊய்க்கா** - பெ. ***எருமை.*** 'அந்த ஊய்க்கா மேக்கிற பசங்களக் கூப்பிடு.'

**ஊய்க்கா மந்தை** - பெ. ***மேய்ச்சலுக்கு ஓட்டிச்செல்ல எருமைகளைத் திரட்டி ஒன்று சேர்க்கும் இடம்.*** 'ஊய்க்கா மந்தைப் பக்கம் போய்ட்டு வாறன்.'

**ஊய்க்காலி** - பெ. ***பொறுப்பற்ற தன்மையைக் குறிக்கும் திட்டுச்சொல்.*** 'அவன்/ள் சுத்த ஊய்க்காலி.'

**ஊர்க்காடு** - பெ. ***குடியிருப்புக்கு அருகில் உள்ள நிலம்.*** 'ஊர்க்காட்டுலதான் ஆடு மேயும்.'

**ஊர்க்கிணறு** - பெ. ***ஊருக்குப் பொதுவான கிணறு.*** 'ஊர்க்கெணத்துல தண்ணி வத்திப் போச்சு.

**ஊர்க்கொத்து** - பெ. ***நாட்டாண்மை.*** 'உனக்கெதுக்கு இந்த ஊர்க்கொத்து வேல?'

**ஊர்சுத்தி** - பெ. 1. ***பன்றி.*** 'ஊர் சுத்தி கறி போடறாங்க.' 2. ***கழுதை.*** 'ஊர் சுத்தியாட்டம் திரிஞ்சுட்டு வர்ரான்.'

**ஊர்ப்பட்ட** - பெ.அ. ***அளவுக்கு அதிகமான.*** 'ஊர்ப்பட்ட பேரு வந்துட்டாங்க.'

**ஊர்ப்பண்ணாடி** - பெ. ***ஊர்த்தலைவர்.*** 'ஊர்ப்பண்ணாடி தோட்டத்துல இருப்பாங்க.'

**ஊர் மேய்தல்** - வி. ***ஆணோ, பெண்ணோ முறையற்ற தொடர்பு வைத்திருத்தல்.*** 'ஊர்மேஞ்சுகிட்டுத் திரியறவனோட உனக்கு என்ன சரவகாசம்?'

**ஊரடி** - பெ.அ. ***ஊருக்கு மிக அருகில் உள்ள.*** 'ஊரடித் தோட்டம் அவருதுதான்.'

**ஊரப்பிடி** - வி. ***பாத்திரத்தைத் தலைகீழாகப் பிடித்து நீரை வடியச் செய்.*** 'குண்டாவ நல்லா ஊரப்பிடி.'

**ஊரான்** - பெ. ***பிறர்; உறவற்றவர்.*** 'பிள்ளயின்னு பொறந்தா அது எனக்கிருந்தாலும் ஊரான் ஊ(வீ)ட்டுக்குத்தான் சொந்தம்.'

**ஊளக்குரி** - வி. ***மிகுந்த சத்தமிட்டு அழு; ஊளையிடு.*** 'அங்க எவன்டா ஊளக்குரிக்கிறது.'

**ஊளமூக்கு** - பெ. ***சளி; சளி நிறைந்த மூக்கு.*** 'ஊள மூக்கு ஒழுவுது பாரு'; 'அவன் ஊளமூக்குப் பையன்.'

**ஊளமூக்கன்** - பெ. ***சளி ஒழுகும் மூக்கை உடையவன்.*** 'அவங் கெடக்கறான் ஊளமூக்கன்.'

**ஊளமொட்டு** - பெ. ***கெட்டுப்போன முட்டை.*** 'ஊளமொட்டத் தின்னுட்டு நல்ல மொட்டக் கொண்டுக்கிட்டு ஓடியா.' (கண்ணாமூச்சுப் பாடல்)

**ஊளை** - பெ. 1. ***கெட்டுப் போன பொருள்.*** 'ஊளையாப் போனதத் திங்காத.' 2. ***சளி.*** 'ஊளை ஒழுவுது. சிந்துபோ.'

**ஊறல்** - பெ. ***சாராயம் காய்ச்சத் தேவையான பல பொருட்களையும் கலந்து பானையில் ஊறப் போட்டிருத்தல்.*** 'போலீசு வந்து ஊறல எல்லாம் ஒடச்செறிஞ்சிடுச்சு.'

**ஊறு(தல்)** - வி. ***குழந்தைகள் சதை பிடித்துக் குண்டாதல்.*** 'பிள்ள நல்லா ஊறியிருக்கறாளா.'

**ஊன்** - பெ. ***பழங்களின் சதைப்பகுதி.*** 'தோலக் கடிச்சுத் துப்பிட்டு ஊன மட்டும் திங்கறான்.'

**ஊனாங்கொடி** - பெ. ***உறுதியான ஒரு வகைக் கொடி.*** 'ஊனாங்கொடில தூரி கட்டு. ஆடலாம்.'

**ஊனி** - பெ. ***பாரம் அதிகமாகும்போது மாட்டு வண்டியின் பின்பக்கம் நிலத்தோடு சென்று அழுந்தாமல் இருக்க ஊன்றும் தடி.*** 'அந்த ஊனிய எடுத்து உடு.'



ஊனி

**ஊனு** - *வி.* **பலமாகத் தாக்கு.** 'நல்லா ஊனுடா. அப்பத்தான் அவனுக்குப் புத்தி வரும்.'

## எ

**எக்கட்ட** - *வி.அ.* **எங்கே; எந்தப் பக்கம்.** 'அய்யன் எக்கட்ட போயிருக்கறாங்க.'

**எக்காளம்** - *பெ.* **மிக ஆபாசம்.** 'எக்காள எக்காளமாப் பேசறான்.'

**எக்கு** - *வி.* **வயிற்றை உள்ளே ஒட்டிப் போகும்படி செய்.** 'வவத்த எக்காத நல்லா உட்டு நில்லு.'

**எச்சக்கல** - *பெ.* **எச்சில் இலை என்பதைக் குறிக்கும் திட்டுச்சொல்.** 'ஆடிக்காத்துல அம்மியே பறக்கறப்ப, எச்சக்கல நீ எந்த மூலக்கி.'

**எச்சக்கொளாங்கி** - *பெ.* **எச்சில் துப்ப உதவும் பாத்திரம்.** 'எச்சக்கொளாங்கிய எடுத்தாந்து வெய்யி.'



எச்சக்கொளாங்கி

**எச்சக்கோலாம்பி** - **காண்க: எச்சக் கொளாங்கி.**

**எச்சு** - *பெ.* **அதிகம்.** 'சோறு கொஞ்சம் எச்சு.'

**எச்சுப் பன்னாட்டு** - *பெ.* **அதிகப் பிரசங்கித்தனம்.** 'எச்சுப் பன்னாட்டுப் பண்ணாதீடா.'

**எசகேடு** - *பெ.* **இசை(வு)கேடு; சிறிது தவறிவிடுதல்.** 'கொஞ்சம் எசகேடா உட்டுட்டன் இல்லைனாப் புடுச்சிருக்கலாம்.'

**எசிலி** - *பெ.* **போட்டி.** 'எசிலிக்குப் புறுக்குட்டு ஈரோடும் பாழாச்சு.' (பழமொழி)

**எசிறி** - **காண்க: எசிலி.**

**எட்டாநாளு** - *பெ.* **வரப்போகிற அல்லது கழிந்துபோன வாரத்தின் இதே நாள்.** 'எட்டா நாளைக்கு வர்றன்'; 'எட்டா நாளு சந்தையில பார்த்தன்.'

**எட்டாங்கரம்** - *பெ.* **தாயம் போன்ற எட்டுக்கரம் உள்ள ஒரு விளையாட்டு** 'எந்நேரம் பாரு எட்டாங்கரத்துலயே இருக்கறான்.

**எட்டு** - *பெ.* **வாரம்.** 'போன எட்டுத்தான் சந்தைக்குப் போனன்.'

**எட்டி**[1] - *வி.அ.* **வேகமாக.** 'நடைய எட்டிப் போடுடா.'

**எட்டி**[2] - *பெ.* **காலடி.** 'ஒரு எட்டிக்கு ஒரு மணி நேரமாவுது.'

**எட்டி வைத்தல்** - *வி.* ***காலை வேகமாக வைத்து நடத்தல்.*** 'இப்படி நடந்தாப் போய்ச் சேர முடியுமா, எட்டி வச்சு நடடா.'

**எடங்காடு** - *பெ.* ***இடைஞ்சல்.*** 'அவனோட பெரிய எடங்காடா இருக்குது.'

**எடங்கோடு** - *பெ.* ***பயன்பாட்டிற்குப் போதாத இடம்.*** 'அங்க கொஞ்சம் எடங்கோடா இருக்குது'.

**எடத்தான்** - **காண்க: *இடத்தான்.***

**எடத்துமாடு** - *பெ.* ***இடத்துமாடு; (ஏர், ஏற்றம், வண்டி போன்ற வற்றில்) இடப்பக்கம் கட்டிப் பழக்கப்பட்ட மாடு.*** 'எடத்து மாட்டப் புடிச்சோயித் தண்ணி காட்டு.'

**எடப்பு** - *வி.* ***வயிற்றை நிமிர்த்துக் கொண்டோ, காலை வளைத்துக் கொண்டோ பின்பக்கம் சாய்ந்தது போல உடம்பை ஆக்குதல்.*** 'நடக்கறதுக்கு இப்படி எடப்பறான்.'

**எடமொடக்கு** - *பெ.* ***1. இடமுடக்கு.*** 'இயல்பாக உழுவதற்கு ஏற்றபடி இல்லாத மிகக் குறுகலான நிலப்பகுதி.' ***2. எதற்கும் ஒத்து வராத ஆள்.*** 'அவன் சுத்த எடமொடக்கு.'

**எடவாடு** - *பெ.* ***(முறையற்ற, ரகசியமான) ஆண் - பெண் தொடர்பு.*** 'அங்க அவனுக்குக் கொஞ்சம் எடவாடு இருக்கு மாட்டந்தான் தெரீது.'

**எடாலு** - *பெ.* ***பெருச்சாளி பிடிப்பதற்காக வைக்கப்படும் பொறி.*** 'பெருக்கானுக்கு எடாலு வெச்சாப் புடிச்சர்லாம்.'

**எடுப்பு** - *பெ.* ***கம்பீரம்.*** 'ஆளு நல்லா எடுப்பா இருக்கறான்.'

**எடுப்புச் சோறு** - *பெ.* ***பிச்சை எடுத்து வந்த சோறு.*** 'என்னய என்ன எடுப்புச் சோத்துக்கு வந்தவன்னு நெனச்சியா?'

**எணபொலி** - **காண்க: *இணைபொலி.***

**எத்திப் போ(தல்)** - *வி.* ***மிதமிஞ்சிப் போதல்.*** 'நத்தக்காட்டுக் கம்புவ ந்து எத்திப் போச்சாம்.' - பழமொழி.

**எத்து** - *பெ.* ***இரவல்; தத்து.*** 'எத்துல பிள்ளை பெத்து...' - பழமொழி.

**எதிரடி** - *பெ.அ.* ***பதிலி.*** 'எதிரடியா நெலத்த எழுதிக் குடுத்துரு.'

**எதுக்குளித்தல்** - *வி.* ***அதிகமாகச் சாப்பிடுவதாலோ, வேறு காரணத்தாலோ ஏற்படும் குமட்டல்.*** 'எது சாப்பிட்டாலும் எதுக்குளிச்சுக்கிட்டே வருது.'

**எதுக்கொளிக்குது** - **காண்க: *எதுக்குளித்தல்.***

**எதுத்துப் போ(தல்)** - **காண்க: *எத்திப் போதல்.***

**எதுப்பொண்ணு** - *பெ.* ***ஒரே வீட்டில் பெண் கொடுத்துப் பெண்ணெடுத்தல்.*** 'அவுங்க எதுப்பொண்ணு கட்டியிருக்கறாங்க.'

**எந்தரம்** - *பெ.* ***தாயத்து.*** 'பையனுக்கு ஒரு எந்தரம் கட்டு. காச்ச செரியாப் போயிரும்.'

**எந்நேரம்** - *பெ.* ***மிகுந்த நேரம்.*** 'எந்நேரத்துக்கு வர்றான் பாரு.'

**எப்பப்புடுச்சு** - *வி.அ.* ***எப்போதிருந்து.*** 'எப்பப்புடுச்சு வருவ வருவன்னு பாக்கறன்.'

**எம்மல்** - *பெ.* ***ஏமாற்று; ஏய்ப்பு.*** 'அவம் பெரிய எம்மல் பண்ணுவான்.'

**எம்மல்காரன்** - *பெ.* ***ஏமாற்றுபவன்.*** எம்மல்காரன நம்பாதீடா.'

**எமாவேலை** - *பெ.* ***எச்சரிக்கையான ஆள்.*** 'அந்தப் பையன் எமாவேலைடா.'

**எமட்டு** - *வி.அ.* ***எவ்வளவு.*** 'உனக்கு நான் எமட்டுப் பணம் குடுக்கோணும்.'

**எரப்பானி** - *பெ.* ***திட்டுச் சொல், இரந்து தின்பவன்/ள்.*** 'எரப்பாணி பெத்த புள்ள.'

**எரப்பு** - *பெ.* **வீட்டை ஒட்டிப் பக்கவாட்டில் இருக்கும் கூரை.** 'எரப்புக்குள்ள கன்னுக்குட்டியக் கட்டு.'

**எரவாரம்** - *பெ.* **சிறு சிறு பொருட்களைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளத்தக்க வீட்டு உள் கூரையின் கீழ்ப்பகுதி.** 'தொறப்புக்குச்சி எரவாரத்துல இருக்கும் பாரு.'

**எரிப்பான்** - *பெ.* **தீ எரிக்கப் பயன்படும் பொருள்கள்.** 'கொஞ்சம் எரிப்பான் கொண்டாரக் கூடாதா.'

**எருக்கலஞ்சிட்டு** - *பெ.* **எருக்கஞ் செடியில் உள்ள பூச்சி புழுக்களைத் தின்று வாழும் சிட்டுக்குருவி வகை.** 'எருக்கலஞ்சிட்ட அடிச்சுக் கொண்டாந்திருக்கறான்.'

**எருக்காலி** - *பெ.* **சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் பயந்து காலோடு கழிபவன்/ள்.** 'சுத்த எருக்காலியா இருந்தா எப்படிப் பொழைக்கறது.'

**எருக்குழி** - *பெ.* **நிலத்திற்குப் போடும் எருவைச் சேர்த்து வைக்கும் குழி.** 'எருக்குழியில கொண்டோயிக் கொட்டு.'

**எருத்துவாரி** - *பெ.* **ஏற்றம் இறைக்கும்போது சால் நீரை இழுத்துக்கொண்டு மாடுகள் ஓடும் தடம்.** 'எருத்து வாரியில புழுதி கெளம்புது, கொஞ்சம் தண்ணி தெளி.'

**எருமா மட்டை** - *பெ.* **சாணத்தை வட்டமாகத் தட்டிக் காய வைத்த (எரிக்கப் பயன்படும்) எரிபொருள்; வரட்டி.** 'எருமா மட்டை தட்டிக் காய வைச்சிருக்கறான்.'

**எருமா முட்டி** - **காண்க: எருமா மட்டி.**

**எருமைத் தேள்** - *பெ.* **கரு நிறத்தில் பெரிய உருவில் இருக்கும் தேள்.** 'எருமத் தேளு பாரு எத்தாப் பெருசு போவுது.'

**எருவாட்டி** - **காண்க: எருமா மட்டை.**

**எருவு** - *வி.* **(பயத்தால்) மலத்தைக் காலோடு கழிதல்.** இருட்டுல என்னயப் பாத்ததும் எருவிட்டான்.'

**எருவு** - *பெ.* **நிலத்திற்கு உரமாகப் பயன்படும் சாணம் முதலியன.** 'எருவுப் போட்டா வெளயுமா; ஏவிரிஞ்சா வெளயுமா.' (பழமொழி)

**எருவுகாலி** - **காண்க: எருக்காலி.**

**எலங்கு(தல்)** - *வி.* **சுற்றத்தோடு சேர்ந்திருத்தல்.** 'இத்தன நாள் உட்டுட்டு எச்சகலப் பட்டுடுத்தி நான் அவங்கூட எலங்கப் போறனா...'

**எலிப்பூண்** - *பெ.* **எலிப்பொறி.** 'எலிப்பூண்ல என்ன குத்தி வச்சிருக்கற.'



எலிப்பூண்

**எலும்புக்கறி** - *பெ.* **எலும்பு இறைச்சி.** 'எலும்புக்கறி நெறையாப் போட்டிருக்கறான்.'

**எவ்வெட்டு** - *பெ.அ.* **எட்டு எட்டாக.** 'ஆளுக்கு எவ்வெட்டுப் பணம் கணக்காக் குடு.'

**எளநேரம்** - **காண்க: இளநேரம்.**

**எளப்பு** - *பெ.* **மூச்சிரைப்பு.** 'எதுக்குடா இப்பிடி எளப்பு வாங்க வாங்க ஓடியார.'

**எளப்பு நோவு** - *பெ.* **காசநோய்.** 'எளப்பு நோவு வந்தா ஆளத் தின்னுரும்.'

ஏறகூடை - பெ. இறைகூடை. கிணற்றிலிருந்து தூர வயல்களுக்கு நீர் பாய்ச்ச வேண்டும்போது முதலில் சற்று தொலைவில் ஆழம் அதிகம் அற்ற குழியில் நீரை விட்டுப் பின் அதிலிருந்து இறைத்து வயலுக்குப் பாய்ச்சுவர். அதில் நீர் இறைக்கப் பயன்படும் கூடை. 'ஏறகூட போட்டா நாலு இழுப்புல வந்திருது.'



ஏறகூடை

எறவாரம் - காண்க: எரவாரம்.

எறவாணம் - காண்க: ஏரவாரம்.

## ஏ

ஏகடியம் - பெ. கேலி, கிண்டல். 'இந்த ஏகடியமெல்லா எங்கிட்ட வேண்டா.'

ஏங்கல் - பெ. குழந்தைகளுக்கு வரும் மூச்சிரைப்புடன் கூடிய நோய்; இளவயதுக் காசநோய். 'ஏங்கலுக்கு அந்தப் பாட்டி தழ குடுக்கும்.'

ஏங்கால் - பெ. கிணற்று ஏற்றக்கால்களுக்கு முட்டுக் கொடுக்கும் கட்டை. 'ஏங்காலு நல்லா வலுவாப் போடு.'

ஏணிப்புழு - பெ. ஆமணக்குச் செடியில் காணப்படும் புழுவகை; (இது நகரும்போது நடு உடல் வளைந்து கொக்கி போல் நிற்கும்; இதன் உடலே ஏணியாக மாறிக் கொள்ளும்). 'ஏணிப்புழு உழுந்து தொலைஞ்சிருச்சி.'

ஏத்தம் - பெ. ஏற்றம் - 1. கிணற்றில் மாடுகளைக்கொண்டு நீர் இறைப்பதற்காக இரண்டு கால்களை ஊன்றி இடையே பெரிய உருளை பொருத்தப்பட்ட அமைப்பு. 'ஏத்தம் எறைக்கோணும் மாட்டப்புடுச்சா.' 2. தலைக்கனம் கொண்ட திமிர். 'அவனுக்கு ஏத்தமேறிப் போச்சு.'



ஏத்தம்

ஏத்தமேடு - பெ. கிணற்று மட்டத்தைவிட உயரமாக அமைக்கப்பட்ட ஏற்றம் வைக்கப்படும் பகுதி. 'ஏத்த மேட்டுல நின்னு பாத்தா நல்லாத் தெரியும்.'

ஏத்தவண்டி - பெ. ஏற்ற வண்டி ஏற்றத்தின் நடுவில் உள்ள (நீர் இறைக்கப் பயன்படும்) மர உருளை. 'ஏத்த வண்டியக் கழட்டி வெச்சிட்டாங்க.'

ஏந்தே - பெ. (பெரும்பாலும் குழந்தைகளுக்குள்) ஒருவரை ஒருவர் விளித்து அழைக்கப் பயன்படும் சொல். 'ஏந்தே, இதக் கேளு.'

ஏர்க்கால் - பெ. மாட்டு வண்டியின் முன் பக்கம் நிலத்தில் ஊன்றும் கட்டை. 'ஏர்க்கால நல்லாத் தூக்கிப் புடிடா.'


ஏர்க்கால்

ஏர்வாடி - *பெ.* ***திமிராகப் பேசும் பெண்களைக் குறிக்கும் திட்டுச் சொல்.*** 'ஏர்வாடிகிட்ட என்ன பேச்சு.'

ஏரி - *பெ.* ***மிக உயரமான வரப்பு.*** 'அந்த ஏரியில ரண்டு பில்லு வெட்டிகிட்டு வர்றன்.'

ஏரிமேடு - *பெ.* ***நீர்த்தேக்கமான ஏரியின் இருபுறங்களிலும் செல்லும் நீளமான மண் கரை.*** 'ஏரி மேட்டுல ஆடு மேய்து பாத்துக்க.'

ஏறுபனை - *பெ.* ***கள், பதநீர் ஆகியவற்றைத் தரும் பனைமரம்.*** 'அந்த மரத்த வெட்டீராத அது ஏறுபனை.'

ஏறுமாறு - *பெ.* 1. ***கூடக்குறைவு.*** 'அவன்கிட்ட ஒரு வேல சொன்னா ஏறுமாறாத்தான் செய்வான்.' 2. ***அதிகமும் குறைவுமாக.*** 'கொஞ்சம் ஏறுமாறா இருந்தா என்ன போடு.'

ஏறுவெயில் - *பெ.* ***அதிகரித்துக்கொண்டே வரும் (காலையிலிருந்து நண்பகல் வரையிலான) வெயில்.*** 'முதுவுல ஏறுவெயிலு சுள்ளுனு படுது பாரு.'

ஏனம் - *பெ.* ***பாத்திரம்.*** 'ஏனத்தக் கழுவீட்டியா.'

## ஐ

ஐயன் - ***காண்க: அய்யன்***

## ஒ

ஒக்கட்டக்காய் - *பெ.* ***ஒற்றை பருப்புடைய வேர்க்கடலைக் காய்.*** 'ஒக்கட்டக்காயெல்லாம் கழிச்சுப்புட்டாம் பாரு.'


ஒக்கட்டக்காய்

ஒக்கட்டை - ***காண்க: ஒக்கட்டக்காய்.***

ஒச்சொடி - *பெ.அ.* ***மெலிந்த; இளைத்த.*** 'ஒச்சொடியான ஒடம்புக்காரன் அவன்.'

ஒசம்பு - *பெ.* ***கனத்த மழை பெய்யும் போதோ அருகில் ஏரி போன்ற நீர்த்தேக்கங்கள் இருக்கும் போதோ பள்ளமான நிலத்தின் மேற்பரப்பில் தானாக ஊறும் நீர்.*** 'அந்தக் காட்ட எப்பிடி ஒட்டறது ஒசும்பு ஊறுது.'

ஒசும்புத் தாக்கு - *பெ.* ***நீர் ஊறி, மிகுந்த ஈரமாக இருக்கும் நிலம்.*** 'ஒசும்புத் தாக்குல என்னத்த போடறது.'

ஒட்டக்கூத்து - *பெ.* ***ஒட்டரைத் தலைவராகக் கொண்ட ஒருவகைக் கூத்து.*** 'பொங்கலுக்கு ஒட்டக்கூத்து போடறாங்களாம்.'

ஒட்டு - *பெ.* 1. ***பால் கறக்கும் மாடு, எருமைகளுக்குப் பிறர் கண்படாமல் இருப்பதற்காகவோ குளிப்பதற்காகவோ ஓலையால் கட்டப்படும் மறைப்பு.*** 'ஒட்டுக் கட்டுனா ஆரு கேக்கறா. எரும ஓதச்சிக்கிட்டுப் போயிருச்சி.' 2. ***பனைமரத்தில் தெளுவு சுரக்கும் பாளைக்கு மேல் அதைச் சார்ந்து வரும் சிறுபாளை.*** 'அந்தப் பனைல ஒட்டு வந்திருக்குது.' 3. ***மிக நெருக்கம்.*** 'ஒட்டும் ஒறவும் எத்தன நாளக்கினு பாக்கலாம்.'

**ஒட்டுக்கா** - பெ.அ. 1. **ஒரே நேரத்தில்.** 'ஒண்ணொண்ணா நூறோ ஒட்டுக்கா நூறோ' (பழமொழி) 2. - வி.அ. **ஒன்றாக.** 'ரண்டு பேரும் ஒட்டுக்கா பொறந்தவுங்களா.'

**ஒட்டுக்கூடை** - பெ. **அடி அகன்றும் உயரம் குறைந்தும் இருக்கும் சாணி, மண் போன்றவை அள்ள உதவும் சிறு கூடை.** 'சாணி எடுக்கற ஒட்டுக்கூட எங்கடா.'



ஒட்டுக்கூடை

**ஒட்டுத்திண்ணை** - பெ. **வீட்டை ஒட்டி வாசற்பகுதியில் (உட்காரு வதற்காகக்) கட்டப்படும் அகலம் குறைந்த சிறு திண்ணை.** 'ஒட்டுத் திண்ண மேல அப்பிடி உக்காரேன் ஏன் நிக்கற.'



ஒட்டுத்திண்ணை

**ஒட்ட நாடகம்** - பெ. **காண்க: ஒட்டக்கூத்து.**

**ஒட்டராமாயணம்** - **காண்க: ஒட்டக்கூத்து.**

**ஒட்டுவாரொட்டி** - பெ. **தொற்றுநோய்.** 'அவங்கிட்ட ஆரு பொழங்குவா, ஒட்டுவாரொட்டி வந்து கெடக்கறான்.'

**ஒடக்கான்** - பெ. **ஓணான்.** 'ஒடக்கானப்போயி எதுக்குடா அடிக்கிற.'

**ஒடக்கிக்கட்டறது** - பெ. **வீட்டில் இருக்கும் போது வயல் வேலைகளில் ஈடுபடும் போதும் கட்டிக்கொள்ளும் (அதிகமாகப் பயன்படுத்தும்) சாதாரணச் சேலை.** 'அதுல மண்ணுப்பட்டா என்ன, ஒடக்கிக் கட்டறதுதான.'

**ஒடசல்** - பெ. **(சரியாக விதைக்காததாலோ விதை முளைக்காத தாலோ) நிறைய இடைவெளி விட்டுப் பயிர் முளைத்திருத்தல்.** 'பயிர் ஒடசலா மொளச்சிருக்கே.'

**ஒடுக்கஞ்சோறு** - பெ. **பொங்கலில் சிறிது எடுத்துக் கடவுளுக்குப் படைக்கும் சோறு.** 'கொஞ்சம் ஒடுக்கஞ்சோறு எடுத்து வெச்சிருங்க.'

**ஒடை** - பெ. 1. **காளை, கிடாய்களின் விரை.** ''அந்தக் கெடாய்க்கு ஒட அடிச்சரோனும்.' 2. **கனமற்ற ஒருவகை மூங்கில்.** 'ரண்டு ஒடய வெட்டியாந்திருக்கலாம்.'

**ஒடையடி** - வி. **ஆடு மாடுகளுக்குக் காயடித்தல்.** 'அதுக்கு ஒடை அடிச்சாச்சா.'

**ஒண்ட** - வி.அ. **அமுந்த.** 'கெணத்தொண்ட நிக்கறான் பாரு.'

**ஒண்டவெட்டு** - வி. **(மயிர், புல் போன்றவற்றை) இல்லாதது போல அழுந்த வெட்டுதல்.** 'மயிர இப்பிடி ஒண்ட வெட்டிருக்கறா... அசிங்கமா.'

**ஒண்டி** - பெ. 1. **கதவு மாட்டுவதற்காக நிலவுகாலில் அடிக்கப்படும் இரும்புப் பூண்,** 'ஒண்டி கழண்டு போச்சு.' 2. **தனித்திருப்பவன்/ள்.** 'ஒண்டியா உக்காந்திருக்கறன்.'

**ஒண்டிக்காரி** - *பெ.* **வேலை செய்யத் துணையற்று ஒருத்தியாக இருக்கும் பெண்.** 'அவளே ஒண்டிக்காரி. பாவம், எல்லா வேலயும் அவதான்.'

**ஒண்டு** - *பெ.* **தேன் எடுப்பதற்கு மலைப் பகுதிகளில் பயன்படுத்தப்படும் ஒற்றை மூங்கில்.** 'ஒண்ட எடுத்தாந்து குடு.'

**ஒணத்து** - *வி.* **ஈரமான பொருட்களைக் காய வைத்தல்.** 'பருப்பு நனஞ்சிருச்சு, கொஞ்சம் வெயில்ல ஒணத்தோனும்', 'துணிய நல்லா ஒணத்து.'

**ஒதச்சிக்கிட்டுப் போ(தல்)** - *வி.* **மாடோ எருமையோ பால் கறக்க நிற்காமல் காலை உதைத்துக்கொண்டு ஓடிவிடுதல்.** 'நாலு மாசத்திலயே இந்த எரும ஒதச்சிக்கிட்டுப் போயிடுச்சு.'

**ஒதஞ்சி** - *வி.அ.* **காலை நிலத்தில் அழுந்த ஊன்றி (இருத்தல்).** 'கால நல்லா ஒதஞ்சி நில்லுடா.'

**ஒதவு** - *பெ.* **கறிக்காக அறுக்கப்படும் ஆட்டின் குடலில் செரிக்காமல் மாவு போல இருக்கும் தழை உணவை எடுத்துத் துணியில் போட்டு பிழியும் சாறு. (இதனைக் குடிப்பர். நோய் வராமல் காக்க உதவும்).** 'இந்தத் தடவ கறிபோடறப்ப ஒதவு குடிச்சரோனும்.'

**ஒதறிவிடு** - *வி.* **தீவனத் தட்டைகளைக் காய்வதற்காகப் பரப்பி விடுதல்.** 'தட்ட நல்லா ஒதறிஉடு.'

**ஒதுக்குப்படல்** - *பெ.* **திறந்து மூடும் வகையில் ஒதுக்குப்புறமாகக் கட்டப்படும் சிறு தடுப்பு.** 'இங்க ஒரு ஒதுக்குப்படல் கட்டி வெய்யின்னா ஆரு கேக்கறா.'

**ஒதை(தல்)** - *வி.* **உதைதல், காலை நிலத்தில் அழுத்தமாக ஊன்றி நிற்றல்.** 'நல்லா ஒதஞ்சி நில்லுடா.'

**ஒப்புட்டு** - *பெ.* **கடலைப்பருப்பும் மைதாமாவும் சேர்த்துச் செய்யப்படும் இனிப்புப் பலகாரம்.** 'இன்னிக்கி எங்கூட்ல ஒப்புட்டுடா.'

**ஒப்பு** - *பெ.* **தேவையானால் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் வைத்திருக்குள் ஆள் (Substitute).** 'அவன் ஒப்புக்குத்தான் இருக்கறான்', 'அவன ஒப்புக்குச் சப்பா வெச்சுக்கலாம்.'

**ஒப்புக்குச் சப்பு** - **காண்க: ஒப்பு.**

**ஒரட்டாங்கை** - *பெ.* **இடது கை.** 'எங்க ஒரட்டாங்கையக் காட்டு.'

**ஒரட்டாங்கைக்காரன்** - *பெ.* **இடதுகையை அதிகம் பயன்படுத்துபவன்.** 'அவன் ஒரட்டாங்கைக்காரன்.'

**ஒரப்பு** - *பெ.* 1. **குண்டு.** 'அந்தப் பொண்ணு ரொம்ப ஒரப்பு.' 2. *வி.அ.* **(உப்பு) சிறிது அதிகம்.** 'உப்பு நல்லா ஒரப்பா இருக்குது.'

**ஒரம்பரை** - *பெ.* **உறவினர், விருந்தினர்.** 'வராத ஒரம்பர இன்னிக்கு வந்திருக்குது.'

**ஒரம்பு** - **காண்க: ஒசும்பு.**

**ஒரம்புப்பூடு** - *பெ.* **நிலத்தில் காணப்படும் பூண்டு வகை. சிராய்ப்பு முதலிய காயங்களுக்கு மருந்தாகப் பயன்படும்.** 'ஒரம்புப் பூடு அந்தப் பக்கம் இருக்குதான்னு பாரு.'

**ஒரு அட்டை** - *வி.அ.* **சம வயது.** 'அவனும் எங்க பையனும் ஒரு அட்டதான்.'

**ஒருக்கா** - *வி.அ.* **ஒருமுறை.** 'ஒருக்காச் சொன்னாப் போதாதா.'

**ஒரு சந்தி** - *பெ.* **ஒருவேளை மட்டும் உணவு உண்ணாமல் இருக்கும் விரதம்.** 'சனிக்கெழமக்கு நான் ஒரு சந்தி.'

**ஒரு சிந்தி** - **காண்க: ஒரு சந்தி.**

**ஒரு பாட்டுநேரம்** - *பெ.* **ஒரு பகுதி வேலை முடியும் நேரம்.** 'இப்பத்தான் ஒரு பாட்டு நேரம் ஆயிருக்குது.'

**ஒரு பாடு** - *பெ.* **வேலையில் குறிப்பிட்ட ஒரு பகுதி.** 'வேல ஒருபாடு ஆயிருச்சு.'

**ஒரு பொலிக்காடு** - *பெ.* **ஒரே வரப்பைப் பொது எல்லையாகக் கொண்ட நிலங்கள்.** 'அது ரண்டும் ஒரு பொலிக்காடுதான்.'

**ஒரு மிக்க** - *வி.அ.* ***இடைவிடாமல்.*** 'இப்பத்தான் ஒருமிக்க அழுவறான்.'

**ஒருவிச** - *வி.அ.* ***ஒருமுறை.*** 'ஒருவிசதான் சொல்லுவன் நான்.'

**ஒரோல மழை** - *பெ.* ***ஒரு உரல் மழை; ஒரு உரல் நிறையும் அளவு பெய்யும் மழை.*** 'ஒரோல மழை பெஞ்சுதுனாப் போதும்.'

**ஒரு உழடு மழை** - *பெ.* ***ஒரு உழவு செய்ய போதுமான மழை.***

**ஒல்லிக்காய்** - *பெ.* ***உள்ளே ஒன்றுமே இல்லாத தேங்காய்.*** 'அந்த ஒல்லிக்காய எறிஞ்சிடு.'

**ஒல்லு** - *பெ.* ***உரல்.*** 'ஒல்லுல மாவிடிக்கிறா.'

**ஒலக்குப்பூண்** - *பெ.* ***உலக்கைப் பூண். உலக்கையின் இருபக்கமும் பூட்டப்பட்டிருக்கும் இரும்பால் ஆன வளையம்.*** 'ஒலக்கப்பூண நல்லாத் தட்டு மாவு உழுவட்டும்.'



ஒலக்குப்பூண்

**ஒலகு** - *பெ.* ***நீரை வயலில் இருந்து வடிக்க ஒரு பக்கத்தில் சிறிது ஆழமாகப் பறிக்கும் குழி.*** 'இன்னுங் கொஞ்ச ஆழமா ஒலகு வெட்டறதுதான.'

**ஒலை(த்தல்)** - *வி.* ***நாய் குரைத்தல்.*** 'இந்த நாய் ஏண்டா இப்படி ஒலைக்குது.'

**ஒவுத்திரியம்** - *பெ.* ***1. பெரும் துன்பம் கொடுக்கும் வலி.*** 'ராத்திரி யெல்லாம் இந்த புண்ணு ஒவுத்திரியம் தாங்க முடியல.' ***2. தொல்லை.*** 'அவன் பண்ற ஒவுத்திரியம் ஆரு தாங்குவா' (சொ.வி) உபத்திரவம் என்னும் சொல்லின் வழக்கு.

**ஒவை** - *வி.* ***(மரக்கிளைகளை) அசை.*** 'ஒவைக்காத கீழ உழுந்திருவான்.'

**ஒழவு கயிறு** - *பெ.* ***உழவு கயிறு. நுகத்தடியையும், கலப்பையையும் இணைக்கும் கயிறு.*** 'அந்த ஒழவுக்கவுத்த இறுக்கமா கட்டு.'



ஒழவு கயிறு

**ஒழாவு** - *வி.* ***(அதிக சூடான) வெந்நீரில் குளிர்நீரைக் (சூடு குறைத்துக் குளிக்கவோ குடிக்கவோ போதுமானதாகும் வரை) கலத்தல்.*** 'இன்னங் கொஞ்சம் தண்ணி ஊத்தி ஒழாவு.'

**ஒழைக்காத்தடி** - ***காண்க: உழக்கோல்.***

**ஒத்தைக் கோவணம்** - *பெ.* ***உடம்பில் வேறு துணி எதுவும் இல்லாமல் கோவணம் ஒன்று***

*மட்டுமே இருக்கும் நிலை:* 'ஒத்தக் கோமணத்தோட நிக்கறான் பாரு.'

**ஒறப்புளுத்தி** - *காண்க:* **உறைப்புளுத்தி.**

**ஒனத்தி** - *பெ.* ***சுவை.*** 'கொழம்பு நல்லா ஒனத்தியா இருக்குதா.'

## ஓ

**ஓக்காலம்** - *பெ.* ***வாந்தி வராமல் அந்த உணர்ச்சியால் தூண்டப்படும் வெறும் சத்தம் மட்டும் தொண்டையிலிருந்து வருதல்.*** 'என்னமோ ஓரே ஓக்காலமா இருக்குது.'

**ஓட்டப்பல்,** - *பெ.* ***இடை இடையே பல் விழுந்த குழிகளை உடைய பல் வரிசை.*** 'ஓட்டப்பல்ல வச்சிகிட்டுத் தேங்கா திங்கறயா.'

**ஓட்டாங்கரம்** - *பெ.* ***சிறுவர், சிறுமியர் விளையாடும் ஒருவகை விளையாட்டு.*** 'அது ரண்டும் ஓட்டாங்கரம் ஆடிக்கிட்டு இருக்குதுவ.'

**ஓடக்கல்** - *பெ.* ***நீர் ஓடும் பகுதியில் காணப்படும் கல் (சுண்ணாம்பு வேகவைக்கப் பயன்படும்).*** 'ஓடக்கல்லுதான் காட்டுல நெறயக் டெக்குது.'

**ஓடை** - *பெ.* ***நான்கைந்து வயல்களை உள்ளடக்கிய நிலப்பகுதி.*** 'அந்த ஓடைக்கு தண்ணி பாஞ்சாச்சா.'

**ஓடைமண்** - *பெ.* ***நீர் ஓடும் பகுதியில் காணப்படும் ஒருவகை (சுவர் வைக்கப் பயன்படும்) மண்.*** 'அது ஓடமண்ணுல கட்டுன செவுரு.'

**ஓடுகாலி** - *பெ.* ***1. ஓரிடத்தில் நில்லாமல் (வேலை செய்யாமல்) மாறிக்கொண்டே இருப்பவள்.*** 'ஒரு எடத்துல வேல செஞ்சால்ல ஆவும். ஓடுகாலியா இருக்கறானே.' ***2. வீட்டை விட்டுத் தான் விரும்பியவரோடு ஓடிவிடும் பெண்.*** 'அவ ஓடுகாலி'.

**ஓடுஞ்சுளுவு** - *பெ.* ***அறுவடை எங்காவது ஒன்றிரண்டு இடங்களில் மட்டும் நடத்தல்.*** 'ஓடுச்சுளுவாத் தான் வேல நடக்குது.'

**ஓணவாய்** - *பெ.அ.* ***சட்டிப் பானைகளின் வாய்ப்பகுதி (சிறிதளவோ, பாதியோ) உடைந்திருத்தல்.*** 'அந்த ஓணவாய்ப் பானைய எடுத்தா.'

**ஓப்பாளம்** - *பெ.* ***கோபத்திற்கு எதிராகக் காட்டும் கோபம்.*** 'அவனுக்குனா மட்டும் ஓப்பாளம் இருக்காதா.'

**ஓர்சல்** - *பெ.* ***ஒரே முறையில் முழுமையாக (வேலையை)ச் செய்தல்.*** 'ஓர்சலா அதச் செஞ்சுட்டு வரவேண்டீதுதானே.'

**ஓரக்கால்** - *பெ.* ***1. கால்பாத்தி கட்டப்பட்ட வயலின் ஓரத்தில் இருக்கும் பாத்தியின் ஒரு பகுதி.*** 'ஓரக்கால்ல வெத நல்லா ஊனு.' ***2. வயலின் ஓர உழவுத்திட்டு.*** 'ஓரலக்கால முதிக்காத.'

**ஓராம் பயிர்** - *பெ.* ***கம்புப் பயிர் முளைத்துச் சில நாட்களான பின் உழவு ஓட்டிப் பயிர் களைந்து விடுதல்.*** 'பயிரு வந்திருச்சு. ஓராம்பயிர் ஓட்டி உட்டறலாம்.'

**ஓரி** - *பெ.* ***உடன்பிறந்தோர் யாரும் இல்லாமல் வீட்டுக்கு ஒரே பிள்ளையாகப் பிறந்தவர்.*** 'எனக்கு ஆரிருக்கறா நானே ஓரி.'

**ஓரியாட்டம்** - *பெ.* ***குழந்தைகளுக்குள் ஏற்படும் சிறு சச்சரவு.*** 'இதுவளுக்கு எப்பப்பாரு ஓரியாட்டந்தான்.'

**ஓல** - *பெ.* ***ஓலை, காதணி.*** 'காதுல ஓலபோட்டுக்கிட்டு இருக்கறா.'

**ஓலக்கருக்கு** - *பெ.* ***ஓலைக்கருக்கு; பனம் பட்டையின் இருபுறமும் இருக்கும் ரம்பம் போன்ற கிழிக்கும் பகுதி.*** 'ஓலக் கருக்கில கையவெச்சுக் கிழிச்சுக்காத.'

**ஓலவாய்** - *பெ.* ***பொக்கை வாய்.*** 'அவனுக்குப் பல்லேது ஓலவாயி.'

**ஓலன்** - பெ. **திட்டுச்சொல். உடல் உறவில் மிகுந்த விருப்பம் உள்ளவன்; அதிகமாக உடல் உறவில் ஈடுபடுபவன்.** 'அவன் செரியான ஓலன்டா.'

**ஓலி** - பெ. **திட்டுச்சொல். உடல் உறவில் மிகுந்த விருப்பம் உள்ளவள்; அதிகமாக உடல் உறவில் ஈடுபடுபவள்..** 'அந்த ஓலிகிட்டப் பேச்சுக் குடுத்து மீள முடியுமா?'

**ஓலிவருதல்** - வி. **பார்ப்பதற்கு அதிகமாயிருக்கும் ஆனால் பயன் பாட்டிற்கு போதாதிருத்தல் (அதாவது கட்டி வராது).** 'சக்கரயாட்டம் கருப்பட்டி ஓலிவருமா?'

**ஓலைக்குடை** - பெ. **பனை ஓலையால் செய்யப்பட்ட குடை.** 'அந்த ஓலக்கொடைய எடுத்தா.'

**ஓவிடியம்** - பெ. **உபதேசம்.** 'சிரிச்சுப் போன முண்ட ஊருக்கு ஓவிடியம் பேச வந்துட்டா.'

**ஓவிலி** - பெ. **ஓய்வில்லாமல் அலைகிறவன் / ள்; உருப்படாதவன் / ள்.** 'அவனுக்கு நிக்க நேரமேது ஓவிலியா அலயரான்.'

**ஓவு** - பெ. **மண் அடுப்பின் பக்கத் தீ படுமாறு இணைக்கப்பட்ட பக்க அடுப்பு.** 'ஓவுல கொழம்புச் சட்டிய வெச்சிரு.'



ஓவு

## க

**கக்கல்** - பெ. **நாள்பட்ட எண்ணெயிலிருந்து எழும் (கெட்ட) வாசம்.** 'எண்ணெயக் கக்கலடிக்கிற வெரைக்குமா வெச்சிருப்பாங்கொ.'

**கங்கிடி(த்தல்)** - வி. **காண்க: அல்ல வெட்டுதல்.**

**கங்கு** - வி. **விளிம்பு.** 'கெணத்து கங்குல நிக்கிறான் எனக்கே பகீர்னுடிச்சி'.

**கச்சல்** - பெ. **குழப்பம்; தாறுமாறு.** 'அந்தக் குடும்பம் ரொம்பக் கச்சலாக் கெடக்குது.'

**கச்சாயம்** - பெ. **அரிசி மாவும் வெல்லமும் கலந்து எண்ணெயில் வேக வைக்கும் இனிப்புப் பண்டம்.** 'கச்சாயம் சுடறவ கருத்தாளி' (பழமொழி)

**கட்டக்கவுறு** - பெ. **கட்டில் கயிறு. கட்டில் கட்டுவதற்காக நூல், கற்றாழை நார் போன்றவற்றைக் கொண்டு திரிக்கும் கயிறு.** 'கட்டக்கவுறு ஒரு சுருணை இருந்தாக் குடு.'

**கட்டக்கொடி** - பெ. **திண்மையான தண்டுடைய ஒருவகைக் கொடி (இதனைக் கொண்டு மாடுகளுக்கு வாய்க் கூடை பின்னலாம்) கட்டுவதற்கும் கயிறு போலப் பயன்படும்.** 'கட்டக்கொடியில பின்னுன வாக்கூடைடா இது.'

**கட்டச்சட்டம்** - பெ. **1. கட்டில் சட்டம்; கட்டில் குத்துக்கால்களை இணைக்கும் மரச் சட்டம்.** 'கட்டச் சட்டம் ஒடஞ்சிரப் போவுதுடா, அதுமேல உக்காராத.'

**கட்டவெட்டி** - பெ. **கட்டை வெட்டி, நிலத்தில் தங்கிவிட்ட மரம் செடி ஆகியவற்றின் அடிக்கட்டைகளை வெட்டி எடுக்கப் பயன்படும் கருவி.** 'கட்ட வெட்டி இருந்தாக் கொஞ்ச நேரத்துல பேத்து எடுத்தரலாம்.

**கட்டாப்பு** - பெ. **1. தடவை.** 'இந்தக் கட்டாப்பு அவ பொழச்சதே பெரிசு.' **2. சுற்றிலும் ஆள்**

சேர்த்துக் கொண்டு சண்டைக்கு வருதல். 'கட்டாப்புக் கட்டிக்கிட்டுச் சண்டைக்கு வர்ராங்க.'

கட்டுக்குடுமி - பெ. ஆண்கள் வைத்திருக்கும் குடுமி. 'அந்தக் கட்டுக்குடுமி வெச்சிருக்கிற கெழவன கூப்புடு.'

கட்டுச்சோத்து விருந்து - பெ. ஐந்து அல்லது ஏழு வகையான சோறு செய்து உறவினர்களை அழைத்து விருந்திட்டுக் கருவுற்ற பெண்ணை ஏழு அல்லது ஒன்பதாம் மாதம் பிறந்த வீட்டுக்கு அழைத்துச் செல்லும் சடங்கு. 'அந்தப்பிள்ளைக்கி இன்னிக்கிக் கட்டுச்சோத்து விருந்து கூப்பிட்டாங்க.'

கட்டுத்தரை - பெ. மாடுகள் கட்டும் இடம், கட்டுத்தறி. 'கட்டுத்தரச் சாணிய எடுடா.'

கட்டுத்திட்டம் - பெ. ஊருக்கோ, சாதிக்கோ உரிய சட்டதிட்டம்; கட்டுப்பாடு. 'கட்டுத்திட்டத்த அனுசரிச்சுத்தான் நடக்கோணும்.'

கட்டுப்பானை - பெ. சாராயம் காய்ச்சப் பயன்படும் வாய்கட்டப்பட்ட பானை அடுக்கு. 'கட்டுப்பானயில வடிச்ச சாராயந்தான் இது.'

கட்டுப்பானைச் சாராயம் - பெ. பானை அடுக்கு வைத்து, அதன் வழி வடித்தெடுக்கப்படும் சாராயம். 'கட்டுப்பானச் சாராயம் குடிக்கறவன் உருப்படுவானா.'

கட்டுப்புடி - வி. சிறுவர்கள் ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்துப் போட்டுக் கொள்ளும் சிறு சண்டை. 'அவுங்க ரண்டு பேருந்தான் கட்டுப்புடுச்சுக் கிட்டாங்க இப்ப அழுவுறாங்க.

கட்டுப்பொண்ணு - பெ. ஒரு குடும்பத்திற்குப் பெண் கொடுத்து அங்கிருந்தே பெண் எடுக்கும் முறை. 'கட்டுப் பொண்ணுக் கட்டுனா குடுமுபத்துக்கு ஆவாது.'

கட்டுமாறு - பெ. (நெருங்கிய உறவினர்கள் போட்டுக் கொள்ளும்) சண்டை. 'அப்பக் கட்டுமாறு கட்டிக்கிட்டாங்க இப்பச் சேந்துகிட்டாங்க.'

கட்டுமானம் - பெ. (ஒருவர் குடும்பத்தை விலக்கி வைக்கும்) ஊர்க்கட்டுப்பாடு. 'முடிஞ்சா கட்டுமானம் பண்ணிக்கோங்க, பாக்கறன்.'

கட்டுமுடி - பெ. பயிர்களைக் கத்தையாகக் கட்டும் நார். 'கட்டுமுடிய அந்தக் கரைமேலதாம் போட்டன். எடுத்தா.'

கட்டுமொறை - பெ. கட்டுமுறை, பேய், பிசாசுகள், செய்வினை போன்ற செயல்களிலிருந்து காத்துக் கொள்ளச் செய்யும் ஒரு மந்திர முறை. 'கட்டுமொற கட்டிக்கிட்டு வந்ததுக்கப்பறந்தான் ஒடம்பு பரலால்ல.'

கட்டுவாய் - பெ. நீர் ஓடுமாறு வாய்க்கால் போலக் கட்டப்படும் புன்செய்நிலத்துக் கரை. 'அந்தக் கட்டுவாய்ல உடு. எருமெ நல்லா மேயும்.'

கட்டுவிடு(தல்) - வி. தனித்தனியாகப் பிய்ந்து போகுமாறு உடல் வலித்தல். 'நேத்து ஒடம்பு அப்பிடியே கட்டுட்டுப் போச்சு.'

கட்டை - பெ. அறுத்தபின் நிலத்தில் எஞ்சியிருக்கும் பயிரின் அடிப்பகுதி. 'கட்டய உட்டுட்டு அறுடா.'

கட்டை தழை(தல்) - வி. அறுவடை செய்தபின் எஞ்சியிருக்கும் பயிரின் அடிப்பகுதி மீண்டும் தழைந்து வருதல். 'கட்ட தழுஞ்சு வருட்டும். மேவுக்காவும்.'

கட்டை வெலக்குமாறு - பெ. தேய்ந்து கட்டையாகிப் போன விலக்குமாறு. 'கட்ட வெலக்குமாத்தாலயே சாத்திப்புடுவம் பாத்துக்க.'

கடக்கட்டக் கவுறு - பெ. கடைக் கட்டில் கயிறு. கட்டிலின் கடைப்பகுதியில் கட்டில் கயிறு தொங்கிப் போகாமல் விறைப்பாக இருப்பதற்காக ஒரு சாண் அளவுக்கு

***இழுத்துக் கட்டும் வலுவான கயிறு***. 'கடக்கட்ட கவுறு தளந்துப் போச்சு, இழுத்துக் கட்டு.'



கடக்கட்டக் கவுறு

**கடகால்** - *பெ.* ***கடைகால், அஸ்திவாரம்***. 'ஊட்டுக்கு என்னிக்கிக் கடகால் போடறீங்க.

**கடசக் கட்டில்** - *பெ.* ***கடைந்த வேலைப்பாடுடன் கூடிய குத்துக்கால் களைக் கொண்ட கட்டில்***. 'அந்தக் கடசக் கட்டலத் தூக்கியா.'

**கடவு** - *பெ.* *1.* ***முள்வேலியில் ஆள் நுழையுமளவு தானாகவே ஏற்படும் சிறுவழி***. 'வேலியில மேக்கால ஒரு கடவு உழுந்திருச்சு.' *2.* ***திறந்து மூடும்படி மூங்கிலால் செய்த சிறு படல்***. 'கடவத் தொறந்துக்கிட்டுப் போடா.'

**கடுக்காய்** - *பெ.* *1.* ***அதிக நேரம் வெந்ததால் இறுகிப் போன இட்லி***. 'இட்லி கடுக்காயாப் போறளவுக்கு உட்டுட்டியே.' *2.* ***முற்றிய நுங்கு***. 'நொங்கு கடுக்காயாப் போச்சு.'

**கடுக்கு** - *பெ.* ***ஆண்கள் காதில் அணியும் அணி, கடுக்கண்***. 'காதுல கடுக்குப் போட்டிருக்கற ஆளப் பாரு.'



**கடுப்பான்** - *பெ.* ***புளி சேர்த்துச் சில நாட்களுக்குக் கெடாமல் இருக் கும் வகையில் செய்யும் துவையல்***. 'கொஞ்சூண்டு கடுப்பானிருந்தா வெய்யி.'

**கடும்பு** - *பெ.* ***கதுப்பு, கன்னச் சதை***. 'கன்னமெல்லாம் சத கடும்பு தள்ளுதுங்கோ.'

**கடுமிஞ்சம்** - *பெ.* ***அதிக தூரம் நடக்க முடியாத குழந்தை (கைகளை கழுத்தில் கட்டிக் கொண்டும், கால்களை வயிற்றுப் பகுதியில் கட்டிக் கொண்டும்) பெரியவர்களின் முதுகில் ஏறிக் கொள்ளுதல்***. 'இவன எவ்ளோ நேரம் கடுமிஞ்சம் கட்டித் தூக்கியாரது.'



கடுமிஞ்சம்

**கடுவு** - *பெ.* ***பருத்தி எடுக்கும் முறை அளவு***. 'எத்தன கடுவு பருத்தி எடுத்துருக்கற.'

**கடெ கெட்டவன்** - *பெ.* ***ஒன்றுக்கும் வசதியில்லாதவன்***. 'அவங்கெடக் கறான் கடெகெட்டவன்.'

**கடை கெட்ட** - பெ.அ. ***மதிப்பற்ற.*** 'கடகெட்ட சாமிக்கு லொடலொடப் படியாம்' - பழமொழி.

**கடை கெட்டவள் / ன்** - பெ. ***திட்டுச்சொல். மதிப்பற்றவள் / ன்.*** 'கடகெட்டவனோட சேந்தா உனக்கும் கேடுதான்.'

**கடை போதல்** - வி. ***ஏரி, கிணறு போன்றவற்றில் தண்ணீர் நிரம்பி வழிதல்.*** 'ஏரி கடபோவுது.'

**கடைமுளை** - பெ. ***வண்டி நுகத்தில் மாடுகள் நகராமலிருக்க இருபுறமும் போடும் முளைக்குச்சி.*** 'கடமொளய நல்லா அடிச்சு உடு.'

**கடையாணி** - பெ. ***அச்சாணி.*** 'கடையாணியச் செரியாப் போட்டயா.'

**கண்டவள் / ன்** - பெ. ***அறிமுகம் இல்லாதவள் / ன்; அப்போது தான் பார்த்தவள் / ன்.*** 'கண்டவளோட எல்லாம் உனக்கென்ன பேச்சு.'

**கண்ணடக்கம்** - பெ. ***கண் தொடர்பான வேண்டுதலின் பேரில் சாமிக்குச் செய்து வைக்கும் (வெள்ளி அல்லது ஈயத்தாலான) கண்.*** 'மாரியாயிக்கு ஒரு கண்ணடக்கம் செஞ்சு வெச்சரோனும்.'



கண்ணடக்கம்

**கண்ணாரை** - பெ. ***1. நுங்குப் பருவத்திலிருக்கும் போது பனங்காயின் மேல் மூடிக்கு வெளியில் வெண்மையாகத் தெரியும் பகுதி. (அப்பகுதி கருத்துவிட்டால் நுங்கு முற்றிவிட்டது என்று பொருள்).*** 'இன்னம் முத்துல. கண்ணார தெரீது.' ***2. வீட்டில் தானியம் சேமித்து வைக்கச் சுவரால் கட்டப்படும் தொட்டி போன்ற அமைப்பு.***



கண்ணாரை

'கண்ணாரையில நெல்லு எவ்வளவு இருக்குதுன்னு பாரு.'

**கண்ணாவி** - பெ. ***வேலைப் பளுவாலோ பசியினாலோ தோன்றும் கண் கிறுகிறுப்பு; மயக்கம்.*** 'கண்ணாவி போவ வேல செஞ்சு போட்டா தின்னூட்டுப் படுத்திருப்ப நீ.'

**கண்ணி** - பெ. ***சிறு கயிறுகள் பலவற்றைச் சேர்த்து முறுக்கிச் செய்திருக்கும் பெரிய கயிற்றில் உள்ள ஒரு சிறு கயிறு.*** 'கவுதுதுல ஒரு கண்ணி உட்டுப்போச்சு.'

**கண்ணிக்கவுறு** - பெ. ***கண்ணிக்கயிறு; மாடுகளை வண்டியிலோ நுகத்தடியிலோ பிணைக்கும் (கண்ணிகளால் பின்னப்பட்ட) கயிறு.*** 'கண்ணிக் கவுத்துல மாட்டி உடு.'



கண்ணிக்கவுறு

**கண்ணுச்சூடு** - பெ. **கண்ணிமை.** 'கண்ணுச்சூடு ரண்டு நாளாத் துடிக்குது.'

**கத்தங்கல(த்தல்)** - வி. **முறையற்று கசகசவென்று வேலை செய்தல்.** 'இப்பிடிக் கத்தங்கலந்தா வேல எப்ப முடியறது?'

**கத்தாழைக் கயிறு** - பெ. **கற்றாழை நாரினால் திரிக்கப்படும் கயிறு.** 'கட்டலுக்குத் கத்தாழக் கவுறுதான் கட்டீருக்கறன்.'

**கதம்ப நார்க்கயிறு** - பெ. **கற்றாழை, புளிச்சநார் போன்றவை கலந்து திரிக்கப்படும் கயிறு.** 'சந்தைல கதம்ப நார்க் கவுறேஇல்ல.'

**கதவுக் கம்பை** - பெ. **கதவின் வெளிப்பகுதியில் அமைக்கப் பட்டிருக்கும் கட்டை.** 'கதவுக் கம்பையப் புடுச்சுக்கிட்டுத் தொங்காத.'

**கதனை** - பெ. **கை கால்களில் இருக்கும் சதை முண்டுகள்.** 'கொழுந்தக்கு கைகாலெல்லாம் நல்லா கதனை கதனையா இருக்குது.'

**கதுக்கு** - பெ. **கூரிய விளிம்புப் பகுதி.** 'செவுத்துக் கதுக்குல கால்பட்டுக் காயமாயிருச்சு.'

**கந்தர கோலம்** - பெ. **அலங்கோலம்.** 'ஊட்டப்பாரு கந்தர கோலமாக் கெடக்குது.'

**கந்தாயம்** - பெ. 1. **ஆண்டுக் குத்தகை.** 'அந்தக் காட்டக் கந்தாயத்துக்கு உட்ருக்கறம்.' 2. **நிலவரி.** 'தூங்குன மணியாரன எழுப்புனா பழைய கந்தாயமெல்லாம் கேப்பான்' (பழமொழி)

**கப்பி** - பெ. 1. **மணல், மாவு போன்றவற்றில் சலித்து எடுத்த பெருந்துகள்.** 'நல்லா இடி. மாவு கப்பி கப்பியா இருக்குது.' 2. **ஜல்லிக்கல்** 'கப்பி போட்டுத் தட்டி உடோணும்.'

**கப்பிக்குடி** - வி. **(நீர், தேநீர் போன்றவற்றை பாத்திர விளிம்பில்) வாய் வைத்துக் குடித்தல்** 'கப்பிக் குடிக்காத, கப்பிக் குடிக்காதன்னு சொன்னா கேக்கறதே இல்ல இவன்.'

**கப்பு** - வி. **விரைவாகவும் நிறையவும் உண்ணுதல்:** ஆக்கி வெச்சிருக்கறன் வந்து கப்பீட்டுப்போ.'

**கம்பம்** - பெ. **மாரியம்மன் போன்ற சிறு**



கதவுக் கம்பை



கம்பம்

***தெய்வங்களுக்குத் திருநாள் சாட்டும்போது வாயிலில் நடும் மூன்றாகக் கிளை பிரிந்த மரக் கொம்பு.*** 'கம்பம் புடுங்கறது என்னைக்கு.'

**கம்பரக்கத்தி** - பெ. ***தானியக் கதிர்களை அறுத்தெடுக்கும் சிறு கத்தி.*** 'கம்பரக்கத்தி இல்லாம பூட்ட பொறுக்கறது எப்படி.'



கம்பரக்கத்தி

**கம்பரிசி** - பெ. ***தவிடு நீக்கிய கம்பு.*** 'கம்பரிசிய இடிச்சு எடுத்தா.'

**கம்மஞ்சோறு** - பெ. ***கம்பரிசியால் ஆக்கப்படும் சோறு.*** 'கம்மஞ்சோறுக்கும் தயிருக்குந்தான் பொருத்தம்.'

**கம்மந்தட்டு** - பெ. ***கம்புப் பயிரின் தட்டை.*** 'கம்மந்தட்டுப் போட்டு ஊடு மேஞ்சிருக்கறான்.'

**கம்மம்பூ** - பெ. ***கம்புக் கதிரில் அரும்பும் பூ.*** 'கம்மம் பூவெல்லாம் மழையில உதுந்து போச்சு.'

**கம்மம் பூட்டை** - பெ. ***கம்புக் கதிர்.*** 'கம்மம் பூட்டை பொறுக்கோணும்.'

**கம்ம மாவு** - பெ. ***கம்பரிசியில் வெல்லம் சேர்த்து இடிக்கும் மாவு.*** 'பொங்கலுக்குக் கம்ம மாவு இடிச்சிருக்கறம்.'

**கம்மி** - பெ. ***குறைவு.*** 'சோறு கம்மியாத்தான் இருக்குது.'

**கமறல்** - பெ. ***காரம் கலந்த நெடி.*** 'மொளவாயத் தீச்சுப்புட்டயா. இந்தக் கமறலடிக்குது.'

**கமுக்கம்** - பெ. ***இரகசியம்.*** 'விசயத்தக் கமுக்கமா வெச்சிருக்கறாங்க.'

**கமுக்கன்** - பெ. ***விஷயத்தை ரகசியமாக வைத்திருப்பவன்.*** 'அவன் ஆளு கமுக்கனா இருப்பாம் போலருக்குது.'

**கயாவலி** - பெ. ***கழிக்கப்பட்டவன் / ள் (திட்டுச்சொல்).*** 'கயாவலிக் கிட்ட எல்லாம் நமக்கென்ன பேச்சு.'

**கரகன்னு - காண்க: ஈசுகன்னு**

**கரகுட்டி - காண்க: ஈசுகுட்டி**

**கரச்சோறு** - பெ. ***நீர், மோர் ஆகியவற்றைச் சேர்த்துக் கரைத்த சோறு.*** 'காத்தால கரச்சோறு குடிச்சன்.'

**கரடு** - பெ. ***சிறுகுன்று.*** 'அந்தக் கரட்டுக்குத்தான் ஆடு ஓட்டிகிட்டு போவம்.'

**கரணை** - பெ. ***(மரம், கரும்பு போன்றவற்றின் நீண்ட பகுதியிலிருந்து நறுக்கப்பட்ட) சிறு துண்டு.*** 'அந்தக் கரும்ப எத்தன கரணயா வெட்டுன.'

**கரம்** - பெ. ***(தாயம் போன்ற விளையாட்டுக்களில் போடப்படும்) கோடு; கட்டம்.*** 'கரம் போட்டுட்டுக் கூப்புடு, வர்ரன்.'

**கரம்பக்காளை** - பெ. ***கருமை கலந்த வெள்ளை நிறக் காளை.*** 'கரம்பக்காளை எந்தப் பக்கம் நிக்கிதுன்னு பாரு.'

**கரம்பெலி** - பெ. ***நீர் செல்லும் வாய்க்கால் கரைகளில் வாழும் ஒரு வகை எலி.*** 'அந்தக் கரையில கரம்பெலி வங்கு வெச்சிருக்குது.'

**கரம்பைக் காடு** - பெ. ***சிறு சிறு கற்கள் நிறைந்த மண் கொண்ட நிலம்.*** 'கரம்பக்காட்ட ஓட்டி ஓட்டி வெதைக்கறதுதான் மிச்சம். ஒன்னும் வரமாட்டீங்குது.'

**கரள்** - வி. ***பல்லால் பற்றிச் சுரண்டி இழுத்தல்.*** 'தேங்காய அப்படிக் கரள்றான்.'

**கரவலோடு** - பெ. ***பயிறுகளை வறுக்கும் ஓடு.*** 'கரவலோட்டுல போட்டு வறுத்தா நல்லா வறுபடும்.'

**கரி அடுப்பு** - பெ. ***கரித் துண்டுகளைப் போட்டு எரிப்பதற்கேற்ப அடுப்பு.*** 'கரி அடுப்பு ஒன்னு இருந்தாப் பரவால்ல.'

**கரிச்சீலை** - பெ. **சமையலறையில் சூடான பாத்திரத்தைப் பிடித்து எடுப்பதற்கான அழுக்குத் துணி.** 'கரிச்சீலையை எடுத்துக் கொழம்ப எறக்கு. சுட்டரப் போவுது.'

**கரிஞ்சிக்குட்டிச் செடி** - பெ. **மணத்தக்காளிச் செடி.** 'கரிஞ்சிக்குட்டிச்செடி காட்டுல இருக்குதா.'

**கரித்துணி** - **காண்க: கரிச்சீலை.**

**கருக்கடை** - பெ. **பயம்; அக்கறை.** 'நெஞ்சுல கொஞ்சமாச்சும் கருக்கடை இருக்குதா?'

**கருக்கரிவாள்** - பெ. **புல் அறுக்கும் (ரம்பம்போன்ற வாய் கொண்ட) அரிவாள்.** 'கருக்கரிவாள எடுத்தா. கொஞ்சம் பில்லறுத்தாரன்.'

**கருக்கல்** - பெ. **மழை பெய்யத் திரளும் மேகம்.** 'மானத்துல கருக்கல் கட்டீருச்சு.'

**கருக்காய்** - பெ. **பாளை நெல்.** 'கருக்காயத் தூத்தி எடுத்திரு.'

**கருக்கு** - பெ. 1. **பனம்பட்டையின் இருபுறமும் (ரம்பம் போல்) இருக்கும் அறுக்கும் பல்.** 'கருக்குப் பட்டரப் போவுது. கிழிச்சிப்புடும்.' 2. **பனைமரக் கன்று.** 'அந்தக் கருக்குல ஓல வெட்டியாச்சா.'

**கருக்குத்தடி** - பெ. **ஏரில் கலப்பையையும் நுகத்தையும் இணைப்பதற்காகக் கலப்பையில் செருகப்பட்டிருக்கும் திண்மையான மரக்கம்பு.** 'இந்தக் கருக்குத் தடிய நொகத்துல கட்டு.'

**கருக்கு(தல்);** - பெ. **தீய்த்தல்.** 'ஆட்டுக்கால நல்லா கருக்குடா.'



கருக்குத்தடி

**கருக்கு வை(த்தல்)** - பெ. **கருக்கரிவாளின் மொன்னையாகிவிட்ட வாய்ப்பகுதியில் மீண்டும் பல் ஏற்படுத்துதல்.** 'இந்த அரிவாளுக்குக் கருக்கு வெக்கோனும்.'

**கருக்கோலை** - பெ. **பனங்கற்றின் ஓலை.** 'கருக்கோல இருந்தாப் போதும். மறுப்புக் கட்டீரலாம்.'

**கருகமணி** - பெ. **கன்னிமார் என்னும் சிறு தெய்வங்களுக்குக் கழுத்தில் போடும் ஓர் அணிகலன்.** 'காதோல கருகமணி போடறன்னு வேண்டிக்கிட்டிருக்கறன்.'

**கருத்து** - பெ. **அக்கறை.** 'வேலையில கருத்தா இருப்பான்.'

**கருது** - பெ. 1. **தானியக் கதிர்.** 'சோளப் பயிர்ல நல்லா கருது வந்துருக்கதா.' 2. **ஏற்ற உருளையின் அச்சு.** 'கருதுக்குக் கொஞ்சம் தண்ணியடி. கீச்கீச்சுன்னு சத்தம் போடுது.'

**கருநாக்கு** - பெ. **மச்சமுள்ள நாக்கு (இந்த நாக்குள்ளவர்கள் சொல்வது பலிக்கும் என்பது நம்பிக்கை).** 'அவளுக்குக் கருநாக்கு. சொல்றதெல்லாம் பலிக்குது.'

**கருப்பு** - பெ. 1. **பிசாசு.** 'ஏதாச்சும் கருப்பு அண்டீருக்கும்.' 2. **இறப்பினால் ஏற்படும் தீட்டு. காண்க: கருப்புக் கழித்தல்.** 3. **பஞ்சம்.** 'ஒரு போர்த்தட்டு இருக்கங்காட்டி மேவுக்கு கருப்பத்துப் போச்சு.'

**கருப்புக் கழித்தல்** - வி. **பங்காளி வீட்டுச் சாவுக்காக எண்ணெயும் அரப்பும் சேர்த்துக் குளித்துத் தீட்டுக் கழித்தல்.** 'கருப்புக் கழிச்சுப்புட்டா தீந்தது.'

**கருமருந்து** - பெ. **திருநீறு (சாமியாடுபவர்கள் - வழக்கு).** 'கருமருந்த வாயில போட்டுக்கோ.'

**கருமாந்தரம்** - பெ. **திட்டுச் சொல். கொடுஞ்செயல் நிரம்பியவன்/ள்.** 'இந்தக் கருமாந்தரம் எதுக்கு வந்தது.'

**கருமானம்** - *பெ.* ***காசை கருத்துடன் செலவழிக்கும் சிக்கனம்.*** 'அவ நல்லா கருமானம் உள்ளவ.'

**கருவாயன்** - *பெ.* ***கருப்பு நிறமுடையவன்.*** 'அந்தக் கருவாயன் எங்க போனான்.'

**கருவிழிச்சுப் போ(தல்)** - *வி.* ***கண்ணுக்குக் கீழே கருவளையம் விழுந்து இளைத்துப் போதல்.*** 'ஆளு கருவிழிச்சுப் போயிட்டான்.'

**கருவுத்தடி** - ***காண்க: கருக்குத்தடி.***

**கரெறும்பு** - *பெ.* ***கறுநிறமுடைய எறும்பு.*** 'எங்கிருந்தோ கரெறும்பு கூட்டமா வந்திருச்சு.'

**கரவழி** - *பெ.* ***கரைவழி; ஆற்றோரத்தில் இருக்கும் நிலப்பகுதி.*** 'அவனுக்கென்ன கரவழில வயக்காடு இருக்குது.'

**கல்லக்காய்** - *பெ.* ***நிலக்கடலை.*** 'கல்லக்காய்க்கு களவெட்டி உட்டாச்சா.'

**கல்லடுப்பு** - *பெ.* ***பெரிய கற்களை முக்கூட்டாக வைத்து உருவாக்கப்படும் அடுப்பு.*** 'கல்லடுப்புக் கூட்டிப் பொங்க வெச்சம்.'

**கல்லங்குமிட்டி** - *பெ.* ***வெள்ளைப் பூவைக் கொண்ட ஒருவகைக் கீரை.*** 'கல்லக்காட்டுல கல்லங்குமிட்டி நெறைய மொளச்சிருக்கு.'

**கல்லங்கொளுஞ்சி** - *பெ.* ***கொளஞ்சிச் செடியின் வகைகளுள் ஒன்று.*** 'கல்லங்கொளுஞ்சிதான் குமிஞ்சு கெடக்குது.'

**கல்லாங்குழி** - *பெ.* ***கற்களை நிறைத்து அதற்கு இடையில் உண்டாக்கப்பட்டிருக்கும் (கல்லெலியின்) வளை.*** 'கல்லாங்குழியில கால வெச்சராத.'

**கல்லாங்குழிப்புண்** - *பெ.* ***(கல்லெலியின் வளையை மிதித்து விட்டதால் வரும் என நம்பப்படும்) சிறுசிறு கொப்புளங்கள் நிறைந்திருக்கும் புண்.*** 'கல்லாங்குழிப் புண்ணு வந்திடுச்சு அவனுக்கு.'

**கல்லுக்கட்டு** - *பெ.* ***ஏற்றம் வைப்பதற்காகக் கிணற்றில் கல்லினால் கட்டப்பட்ட சுவர்.*** 'கல்லுக்கட்டுல ஏறி நின்னு பாத்தாத் தெரியும்.'



கல்லுக்கட்டு

**கல்லுமுடி** - *பெ.* ***எளிதில் அவிழ்க்க முடியாதபடி போடப்பட்ட முடிச்சு.*** 'கல்லுமுடி போட்டு வெச்சுட்டா எப்படி அவுக்கறது.'

**கல்லுளி** - *பெ.* ***கல் உடைக்கப் பயன்படும் உளி.*** 'அந்தக் கல்லுளிய எடுத்தா.'

**கல்லெடுப்பான்** - *பெ.* ***நடுவில் கற்களைக் கூட்டமாக வைத்து விட்டு அதை ஒருவன் காக்க, நாற்புறமும் இருந்து அவனை ஏமாற்றிக் கல்லை எடுக்க முயலும் சிறுவர் விளையாட்டு.*** 'நாங்க கல்லெடுப்பான் வெளயாடப் போறம்.'

**கல்லெலி** - *பெ.* ***சுற்றிலும் கற்களைப் பரப்பி அதனூடே வளை ஏற்படுத்தி வசிக்கும் ஒருவகை எலி.*** 'கல்லெலி இருக்குமாட்டந் தெரீது. அதான் இத்தன கல்லுக்கெடக்குது.'

**கல்மாரி** - *பெ.* ***ஆலங்கட்டி மழை.*** 'கல்மாரி உழுவுது. பொறுக்கலாமா.'

**கல்றை** - *பெ.* ***குருணையும் கற்களும் கலந்த கலவை.*** 'இந்தக் கல்றைய வெச்சிக்கிட்டு எப்படிச் சோறாக்கறது.'

**கலயப்பானை** - *பெ.* ***அடிப்பகுதி அகன்றும் வாய்ப்பகுதி குறுகியும் உள்ள சிறுபானை.*** 'கலயப் பானையத் தூக்கியா.'

**கலயம்** - *காண்க:* கலயப் பானை.

**கவட்டி** - *பெ.* **மரக்கோல் முதலியவை இரண்டாகப் பிளவு பட்டிருக்கும் தன்மை.** 'கவட்டியாப் பாத்து வெட்டிப்போடு.'

**கவலை ஓட்டுதல்** - *வி.* **மாடுகளைக்கொண்டு ஏற்றம் இறைத்தல்.** 'கவலை ஓட்டப் போவோணும்.'

**கவிட்டி** - *காண்க:* **கவட்டி**

**கவுச்சி** - *பெ.* 1. **துர்நாற்றம்.** 'அந்தப் பக்கம் கவுச்சி அடிக்குது.' 2. **மீன், இறைச்சி முதலியன.** 'உங்கூட்ல இன்னக்கிக் கவுச்சி எடுக்கறீங்களா.'

**கவுண்டிக்கை** - *பெ.* **அதிகாரம் செய்யும் தோரணை.** 'அடேங்கப்பா... அவம் பண்ற கவுண்டிக்கை இருக்குதே...'

**கவுளி** - *பெ.* **நூற்றி நான்கு எண்ணிக்கை கொண்ட வெற்றிலை அளவு.** 'ஒரு கவுளி வெத்தல வாங்கியா.'

**கவை** - *பெ.* **(முள், செத்தைகள் போன்றவற்றைச் சேர்த்துத் தள்ள உதவும்) நுனியில் இரண்டாகப் பிரிந்து செல்லும் நீண்ட மரக்கோல்.** 'அந்தக் கவைய எடுத்தாந்து செத்தயெல்லாம் சேர்த்துத் தள்ளு.'



கவை

**கவைக்கோல்** - *காண்க:* **கவை**

**கழத விரியன்** - *பெ.* **விரியன். பாம்பின் ஒரு வகை.** 'கழத விரியன் எப்பிடி அடிச்சாலும் சீக்கிரம் சாவாது.'

**கழி** - *பெ.* **வண்டியிலோ ஏரிலோ பூட்டப்பட்டுள்ள மாடுகள் நிலையில் நிற்காமல் மிரண்டு திரும்பிக் கொள்ளுதல்.** 'எடத்துமாடு கழிப்போட்டுக்கிரிச்சு. அதான் அவுத்துட்டுட்டன்.'

**கழிக்குச்சி** - *பெ.* **வண்டி நுகத்தில் பூட்டப்பட்ட மாடு, (திரும்பி விடாமலிருக்க) அதன் கழுத்தின் இருபுறத்திலும் இருக்குமாறு போடப்பட்டிருக்கும் குச்சி.** 'கழிக்குச்சியக் கழட்டி எங்கயோ எறிஞ்சிட்டாங்க இந்தப் பசங்க.'

**கழிச்சல்** - *பெ.* **வயிற்றுப் போக்கு.** 'அவனுக்கு கழிச்சல் கண்டுட்டுது.'

**கழிச்சிக்காய்** - *பெ.* **சிறுவர்களின் ஒருவகை விளையாட்டு.** 'கழிச்சிக்காய் ஆடிக்கிட்டி சோத்துக்குக்கூட வர மாட்டீங்கறாங்க.'

**கழிசல்** - *பெ.* **தீவனக் குப்பை. மாடுகள் தின்னாமல் கட்டுத்தறியில் சிதறிக் கிடக்கும் சிறுசிறு தட்டைக் கோல்கள்.** 'அந்தக் கழிசல பொறுக்கிப் போடு.'

**கழிச்சுப் போடு(தல்)** - *வி.* **கழித்துப் போடுதல்** - 1. **திருஷ்டி, செய்வினை போன்றவற்றிற்குப் பரிகாரம் செய்து (எலுமிச்சை, மிளகாய், காசு போன்ற பொருள்களை) முச்சந்தியில் போடுதல்.** 'அங்க கழிச்சுப் போட்டுருக்குது முதிச்சுப்புடாத.' 2. **நல்ல தட்டைகளைப் பொறுக்கித் தின்றுவிட்டு மோசமானவற்றை மாடுகள் போட்டுவிடுதல்.** 'இந்த மாடு எத்தன தட்டக் கழிச்சுப் போட்டுருக்குது பாரு.'

**கழித்துக் கட்டுதல்** - *வி.* **மனைவிக்குப் பணமோ சொத்தோ கொடுத்துப் பொது**

***மனிதர் முன்னிலையில் திருமணத்தை ரத்து செய்துவிடுதல்.*** 'அவளக் கழிச்சுக் கட்டிப் புட்டானாமல்லொ.'

**கழிதட்டு** - ***காண்க: கழிசல்***

**கழி(தல்)** - *வி.* ***வயிற்றெடுப்பின் காரணமாக நீர் போல மலம் செல்லுதல்.*** 'ஆளு காலோட கழிஞ்சிட்டுக் கெடக்கறான்.'

**கழிவு கொப்பு** - *பெ.* ***நெல் வயலில் எஞ்சியுள்ள தண்ணீர் செல்லும் வாய்க்கால்.*** 'கழிவு கொப்புல தண்ணி நெறையப் போவுது.'

**கழுத்துக்கட்டி** - *பெ.* ***கட்டுவதற்காக மாடுகளின் கழுத்தில் பிணைக்கப்பட்டிருக்கும் கயிறு.*** 'மாட்டுக்குக் கழுத்துக்கட்டிய நல்லா தளக்கமா உடு.'

**கழுத்தேர்** - *பெ.* ***வரிசையில் இரண்டாவதாகச் செல்லும் ஏர்.*** 'கழுத்தேர நிக்கச் சொல்லு.'

**கள்ளத்தும்பு** - *பெ.* ***மாட்டின் மூக்கணாங்கயிற்றையும் திருகாணியையும் இணைக்கும் தும்பு.*** 'கள்ளத்தும்பு நல்லாப் போட்டிருக்கறயா.'

**கள்ளுத்தண்ணி** - *பெ.* ***கள்.*** 'இத்தனூண்டு கள்ளுத்தண்ணி குடிக்கப் போனன்.'

**கள்ளுத்தெளுவு** - ***காண்க: கள்ளுத்தண்ணி.***

**களக்கொத்து** - *பெ.* ***களைச் செடிகளை வெட்டி எடுப்பதற்கு உதவும் கருவி.*** 'இந்தக் களக்கொத்து வெட்டறதுக்கு நல்லாவே இல்ல.'

**களவெட்டு** - *பெ.* ***களைவெட்டு; நிலத்தில் உள்ள களைகளை வெட்டி எடுக்கும் வேலை.*** 'இப்பத்தான் களவெட்டு நடந்துக்கிட்டு இருக்குது.'

**களிக்குச்சி** - *பெ.* ***வண்டியில் மாடு திரும்பிக் கொள்ளாமல் இருக்க நுகத்தில் போடப் படும் குச்சி.*** 'கொழந்தைங்க களிக்குச்சியப் புடிங்கிட்டுப் போகுது.'



களிக்குச்சி

**களையெடுப்பு** - *பெ.* ***கருவியின்றி கைகளால் (நெல்வயலில்) களைகளைப் பிடுங்கும் வேலை.*** 'களையெடுப்பு இன்னக்கித்தாந் தொடங்கிச்சு.'

**கறவை** - *பெ.* ***1. பால் கறக்கும் மாடு.*** 'அந்தக் கரவய கட்டுத்தர மாத்திக்கட்டு' ***2. பால் கறக்கும் வேலை.*** 'கறவ முடிஞ்சிடுச்சா.'

**கறவைப் பண்டம்** - ***காண்க: கறவை.***

**கன்னப்பொட்டு** - *பெ.* ***நெற்றியின் இருபுறங்களிலும் கன்னத்திற்குச் சற்று மேலாக இருக்கும் லேசாகக் குழிவான பகுதி.*** 'கன்னப் பொட்டுல கல்லுவந்து பட்டுடுச்சு.'

**கன்னிவெடை** - *பெ.* ***முதன் முதலாக முட்டை இடும் கோழி.*** 'அது கன்னிவெட, இப்பத்தான் மொட்டு வெக்குது.'

**கனசரம்** - *பெ.* ***கரிசனம்.*** 'கனசரம் கட்டிக்கிட்டு அழுவுதாம் கட்டிச்சோறு புட்டுக்கிட்டு அழுவுதாம்.' (பழமொழி)

## கா

**காக்காக் குளியல்** - *பெ.* ***அவசரக் குளியல்.*** 'இரு, ஒரு காக்கா குளியல் போட்டுட்டு வந்திர்ரன்.'

**காட்டம்** - *பெ.* 1. **கோபம்.** 'ஆளு ரொம்பக் காட்டமா இருக்கறானாட்டம் தெரீது.' 2. **அதிகம் காரம் அல்லது உறைப்பு.** 'சாராயம் நல்ல காட்டமா இருக்குது.'

**காட்டுக்கத்து** - *பெ.* **காடுகளில் தூர தூரமாக வேலை செய்து கொண்டிருப்போர் சத்தமிட்டுப் பேசிக் கொள்ளுதல்:.** 'காட்டுக் கத்துக் கத்தறான்டப்பா.'

**காட்டுக் கம்பு** - *பெ.* **புன்செய் நிலங்களில் விளையும் கம்பு (தானியம்).** 'காட்டுக் கம்புனா அதோட மணமே தனிதான்.'

**காடி** - *பெ.* 1. **கட்டுத்தறியில் மாடுகளுக்குத் தீவனம் போடும் பகுதி.** 'காடிக்குள்ள போடாத, கீழ இத்தன தட்ட எறிஞ்சிருக்கறான்.' 2. **பின்பக்கம் துளைவிழாமல் மரக்கட்டைகளில் லேசாகக் குழிவு செய்தல்.** 'காடி இன்னங் கொஞ்சம் பெரிசா வேணும்.'

**காடிப்பீ** - *பெ.* **ஆட்டுக் குட்டிகளும் மாட்டுக் கன்றுகளும் பிறந்த ஓரிரு நாட்களில் கழியும் (பிசின் போன்ற) மலம்.** 'காடிப்பீ பாரு ஒட்டிக்கிட்டுக் கெடக்குது.'

**காடி பெருத்துப் போதல்** - *வி.* **மரக்கட்டையில் வேறொன்றை வைத்து இணைப்பதற்காகச் செய்யப்படும் குழிவுப் பகுதி பெரிதாகி விடுதல்.** 'ரண்டு செரா வெச்சு அடி, காடி பெருத்துப் போச்சு.'

**காடு அழிந்து போதல்** - *வி.* **நிலத்தில் வேளாண்மை முழுதுமாகத் தீர்ந்து போதல்.** 'காடு அழிஞ்சு போச்சு. இன்னமே ஆடு மேஞ்சா என்ன.'

**காடு கட்டாமலிருத்தல்** - *வி.* **நிலத்தில் பயிர்கள் போதிய நெருக்கமற்று இருத்தல்.** 'பயிரு செரியில்ல. காடு கட்டாம இருக்குது.'

**காடு காட்டறது** - *வி.* **கணவன் இறந்த பின் மனைவியைப் பிற பெண்கள் ஒன்று சேர்ந்து நிலத்திற்குச் கூட்டிச் சென்று விடுதல்.** 'காடு காட்டறதுக்கு இன்னிக்கித்தான் கூட்டியோராங்க.'

**காணப் பொறந்தவள் / ன்** - *பெ.* **ஒருவருக்கு விபரம் தெரியும் வயதுக்குப் பிறகு பிறந்த இளையவள் / ன்.** 'நாங் காணப் பொறந்தவ நீ. எங்கிட்டயே கட்டுப்புடிக்க வாரயா.'

**காணிகாச்சி கோயில்** - *பெ.* **குலதெய்வக்கோயில்.** 'எங்க காணிகாச்சி கோயில் ஆனங்கூர்ல இருக்குது.'

**காத்தாலை** - *பெ.* **காலை நேரம்.** 'காத்தாலக்கி போலாம் வா.'

**காதுகுத்து** - *பெ.* **குழந்தைகளுக்குக் காதில் துளையிட்டு நகை அணிவிக்கும் விழா.** 'எங்க பிள்ளக்கிக் காதுகுத்து வெச்சிருக்கறம் வந்துருங்க.'

**காதுப் பலகை** - *பெ.* **ஏற்றத்தில் உருளை மாட்ட இருபுறமும் இருக்கும் காது போன்ற துளையுடைய பலகை.** 'காதுப் பலகையில நல்லா மாட்டி உடுடா.'



காதுப் பலகை

**காதுப்பொன்** - *பெ.* **காதில் சுருள்போல அணியும் நகை.** 'அந்தக் காதுப்பொன்னுப் போட்டிருக்கற ஆயாளக் கூப்புடு.'

**காதோலை** - *பெ.* **கன்னிமார் எனும் சிறுதெய்வத்துக்கு அணிவிக்கும் அணிகலன்.** 'காதோல கருகமணி செஞ்சு வெக்க வேண்டிருக்கறன்.'



காதோலை

**காந்தல்** - பெ. **எண்ணெய் தீயும் வாசனை.** 'அடுப்புல எண்ணெயா வெச்சிருக்கற, காந்தலடிக்குது.'

**காந்து(தல்)** - வி. ***வெயிலின் மிகு வெப்பம்.*** 'அடேங்கப்பா... வெய்ய இப்படிக் காந்துது.'

**காப்புக் கட்டு(தல்)** - வி. ***1. கோயில் திருவிழா முறையாகத் தொடங்குதல்.*** 'கோயிலுக்குக் காப்புக் கட்டியாச்சு. அடுத்தவாரம் பொங்கலு'. ***2. போகி நாளன்று பூளைப்பூ, ஆவாரம்பூ, வேப்பிலை ஆகியவற்றைச் சேர்த்து வீட்டுக் கூரைகளில் செருகுதல்.*** 'நாங்கல்லாம் காத்தாலயே காப்புக் கட்டீட்டம்.'

**காப்பு** - பெ. ***1. பெண்கள் கையில் அணியும் பட்டையான அணிகலன்.*** 'அந்தப் பாட்டி கை ரெண்டுலயும் காப்புப் போட்டிருந்துச்சு.' ***2. கையில் மாட்டும் விலங்கு.*** 'அவன காப்பு மாட்டித்தான் கூட்டியோவாங்க.' ***3. காய்ப்பு.*** 'தொடர்ந்த வேலையின் காரணமாக உள்ளங்கை, உள்ளங்கால்களில் தோல் தடித்துப் போதல் ***4. காய் விளைச்சல்.*** 'இந்த வருசம் கல்லக்கா காப்பு பரவால்லயா.'

**காம்புப் பாளத் தெளுவு** - பெ. ***பனைமரத்துப் பாளை இறுதிப் பகுதியான பின் ஊறும் தெளிவு (கள், பதநீர்).*** 'காம்புப் பாளத் தெளுவுதான் நல்லாப் போத வரும்.'

**காம்புப் பாளை** - பெ. ***தெளிவு (கள், பதநீர்) இறக்கும் போது குறைந்து கொண்டே வரும் பனம் பாளையின் அடிப்பகுதி.*** 'காம்புப் பாளயில வந்து தெளுவு நல்லா ஊறுது'

**காமஞ்சூலை** - பெ. **வானவில்.** 'கெழக்கால காமஞ்சூல போட்டிருக்குது.'

**காமாடு** - பெ. ***கால்மேடு; கட்டிலில் கால் நீட்டும் பகுதி.*** 'காமாட்டுல உக்காந்துக்கிட்டான்.'



காமாடு

**காயதம்** - பெ. **கடிதம்.** 'இன்னக்குக் காயதம் ஏதோ வந்திருக்குது.'

**காயொழிக்கும் ஆட்டம்** - பெ. ***பெண்கள் ஆடும் ஒருவகை விளையாட்டு.*** 'காயொழிக்கிற ஆட்டத்துக்கு வர்றயா.'

**காரத்தாலை** - **காண்க: காத்தாலை.**

**காராட்டு** - பெ. ***நாய், பூனை முதலிய விலங்குகளின் புணர்ச்சி.*** 'பூனை எங்கயோ காராட்டுக்குப் போயிருச்சாட்டம் இருக்குது.'

**காராட்டுக் காலம்** - பெ. ***நாய், பூனை ஆகியவற்றின் புணர்ச்சிக் காலம்.*** 'காராட்டுக் காலம் வந்துட்டாவே இந்த நாய்வ ரவுசு தாங்க முடியாது.'

**காராட்டுப் பூனை** - *பெ.* ***புணர்ச்சிக்காக இடம் மாறிவரும் பூனை.*** 'அது ஏதோ காராட்டுப் பூனையாட்டம் இருக்குது.'

**காரி** - *பெ.* ***கரு நிறமுடைய மாடு.*** 'அந்தக் காரியப் புடுச்சுக் கட்டு.'

**காரிமாடு** - ***காண்க: காரி***

**காரை** - *பெ.* ***1.(நெக்லஸ் போன்ற) கழுத்து நகை.*** 'கழுத்துல காரையொன்னு போட்டிருக்கறா.' ***2. ஆண்கள் காலில் போடும் மெட்டி.*** 'அப்ப ஆம்பளைகளெல்லாம் கால்ல கார போட்டிருப்பாங்க.'

**காரை வீடு** - *பெ.* ***சிமெண்ட் கலவை பூசப்பட்ட வீடு.*** 'அந்தக் காரை வீட்டுக்குப் போங்க. அதுதான் அவுங்க ஊடு.'

**காரொழவு** - *பெ.* ***கார்கால உழவு. ஆவணி, புரட்டாசி மாதங்களில் விதைப்புக்கு முன் செய்யும் உழவு.*** 'காரொழவு போடாட்டிப் பில்லுச் சாகாது.'

**கால்கயிறு** - *பெ.* ***மரம் ஏறும்போது இரண்டு கால்களையும் இணைத்து மாட்டிக் கொள்ளும் கயிறு.*** 'கால்கவுறு போட்டுக்கிட்டு ஏறுடா.'



கால் கயிறு

**கால்ச்சப்பை** - *பெ.* ***1. மாடுகளுக்கு வாய், கால்ச் சந்துகளில் வரும்புண்; கோமாரி நோய்.*** 'அந்த மாட்டுக்குக் கால்ச்சப்ப வந்திடுச்சு.' ***2. ஆடு மாடுகளின் தொடைப்பகுதி.*** 'ஒரு கால்சப்பை எடுத்து வெய்யி. நாளைக்கிக் கறி ஆக்கலாம்.'

**கால் தூக்கீட்டுது** - *வி.* ***மாடு பால் கறக்க நிற்காமல் காலைத் தூக்கிக்கொண்டு ஓடிவிடுதல்.*** 'அஞ்சு மாசமாவுல அதுக்குள்ள கால் தூக்கீட்டுது.'

**கால்பாத்தி** - *பெ.* ***பருத்தி விதை ஊன்றுவதற்குச் சிறு சிறு நீண்ட திட்டுக்களாகப் பிரிக்கப்பட்டு அமைக்கப்படும் பாத்தி.*** 'கால்பாத்தி புடுச்சாத்தான் பருத்திக்கு நல்லது.'

**கால்மாறு(தல்)** - *வி.* ***கரும்புப் பயிர் சிறிது வளர்ந்த பின் இருபுறமும் உள்ள சால் மண்ணை வெட்டிப் போட்டு அணை கொடுத்தல்.*** 'கரும்புக்காடு கால் மாறியாச்சு.'

**கால்மிதி** - *பெ.* ***1. காலடிச்சுவடு.*** 'அவனோட கால்மிதியில நீ எதுக்குடா நடக்கற.' ***2. காலில் ஒட்டியிருப்பவற்றைத் துடைத்துக் கொண்டு உள்ளே செல்வதற்காக வீட்டு வாயிற்படியில் போடப்பட்டிருக்கும் கோணி.*** 'கால்மிதி ஒண்ணு போட்டதுக்கப்பறந்தான் ஊட்டுக்குள்ள மண்ணு வராத இருக்கு.'

**கால்மிதிமண்** - *பெ.* ***(திருஷ்டி கழிப்பதற்குக்) காலடிச் சுவட்டிலிருந்து எடுக்கும் மண்.*** 'தடத்துல போயி கொஞ்சம் கால்மிதி மண்ண எடுத்தாடா.'

**காவிக்கல்** - *பெ.* ***காவி நிற மண் உருண்டை.*** 'எருமக் கொம்புக்குப் பூச காவிக்கல் வாங்கியாந்தாச்சா.'

**காலைக் கட்டு(தல்)** - *வி.* ***காலில் விழுந்து மன்னிக்க வேண்டுதல்.*** 'போயி அவங் காலயே கட்டு. வேற வழியில்ல.'

**காளி** - *பெ.* ***கதிரின் காம்புப் பகுதி.*** 'கருது பகை, காளி ஒறவா.' (பழமொழி)

**காளை சேர்(த்தல்)** - *வி.* ***சினையாவதற்காக பசு மாட்டைக் காளையோடு புணரவிடுதல்.*** 'மாடு நேத்துல இருந்து கத்திக்கிட்டே இருக்குது. காள சேத்தக் கொண்டோவனும்.'

**காறப் பல்லு** - *பெ.* ***காறைப் பல். (நுங்குக் குரம்பை போன்றவற்றைக் கடிப்பதால்) கறை படிந்த பல்.*** 'காறப்பல்லு வெச்சுக்கிட்டு மினுக்கறா.'

**காறை** - *பெ.* ***(நுங்குக் குரம்பை போன்றவற்றைக் கடிப்பதால்) பல்லில் உண்டாகும் கறை.*** 'செங்கல் போட்டுத் தேச்சாக் கூடக் காறையப் போக்க முடியாது.'

**கானக்காடு** - *பெ.* ***சுடுகாடு.*** 'கட்டையக் கொண்டோயிக் கானக்காட்டுல வெச்சாத்தான் கஷ்டம் தீரும்.'



கிட்டி

## கி

**கிச்சப் பெருத்து(தல்)** - *வி.* ***அக்குளில் கை வைத்துச் சிரிப்பு மூட்டுதல்.*** 'சும்மா கிச்சப் பெருத்திக்கிட்டே இருக்கறான் அவன்.'

**கிச்சம்** - *பெ.* ***அக்குள்.*** 'கிச்சத்துல கட்டி வந்திருச்சு.'

**கிச்சாம்பட்டை** - ***காண்க: கிச்சம்.***

**கிச்சு** - ***காண்க: கிச்சம்.***

**கிசுக்கு** - *வி.* ***சிறுவர் சிறுமியர் தாம் கையில் வைத்திருக்கும் பொருளைப் பிறர் கேட்கும் போது அவர்களைப் பார்த்து ஏளனமாகச் சொல்லும் சொல்.*** 'ரொட்டி வேணுமா, கிசுக்கு தாரேன்.'

**கிட்டக் கட்டிப் போதல்** - *வி.* ***சாவு நெருங்கிவிடுதல்.*** 'அவரு அவ்வளவுதான். கிட்டக்கட்டிப் போச்சு.'

**கிட்டி** - *பெ.* 1. ***பசு மாட்டைக் காளை புணரும் போது மாடு அசையாமல் பிடித்துக் கொள்ள வசதியாக இருபுறமும் கட்டப்பட்ட தடுப்பு.*** 'கிட்டிக்குள்ள உட்டுப் புடுச்சிக்க.' 2. ***மூங்கில் , குச்சியால் செய்யப்பட்ட எலிப்பொறி.*** 'கிட்டியில எலி சிக்கீருச்சு.'

**கிடுக்கிட்டி** - *பெ.* ***மிகவும் ஒல்லியானவள் / ன்.*** 'அவன் கெடக்கறான். கிடுக்கிட்டி.'

**கிடை** - *பெ.* ***ஒரு பொருளை ஒரே இடத்தில் அதிக நாட்களுக்குப் போட்டு வைத்திருத்தல்.*** 'கெடையாப் போட்டு வெச்சிருந்தா நாத்தமெடுக்காத என்ன பண்ணும்.'

**கிண்டுதாளம்** - *பெ.* ***மாய்மாலம்.*** 'இந்தக் கிண்டுதாளமெல்லாம் இங்க வெச்சுக்காத.'

**கிண்ணி** - *பெ.* ***மேலே அகன்று அடியில் குவிந்துள்ள சாப்பிடுவதற்குரிய வெண்கல / பித்தளைப் பாத்திரம்.*** 'கிண்ணியில சோத்தப் போட்டு எடுத்தா.'

**கிணற்று மேடு** - *பெ.* ***கிணற்றில் ஏற்றம் வைக்கப்பட்டுள்ள மேடான பகுதி.*** 'கெணத்து மேட்டுல ஏறிப் பாத்தா நல்லாத் தெரியும்.'

**கிளம்பு(தல்)** - *வி.* ***உதித்தல்.*** 'பொழுது கெளம்பி எவ்ளோ நேரமாயிடுச்சு.'

**கிளிக்கால் தப்பை** - *பெ.* ***சவாரி வண்டியில் ஆள் உட்கார்வதற்காகப் போடப்படும் மரப்பலகை.*** 'கிளிக்கால் தப்ப மேல உக்காந்துக்க.'

**கிறுக்கி** - *பெ.* ***முட்டை இட்டு முடிந்தபின் அடைகாக்கும் உணர்வுடன் கூடிய கோழி.*** 'அந்தக் கோழி கிறுக்கு.'

## கீ

**கீகோடு** - *பெ.* ***நிலத்தின் கிழக்குப் பக்க மூலை.*** 'கீகோட்டுல பாரு பில்லு மண்டிருக்குது.'

**கீப்படி** - *பெ.* ***கதவின் கீழ் இருக்கும் படி.*** 'கீப்படியில பாரு வெச்சிருக்கறன்.'

**கீரிப்பூச்சி** - *பெ.* ***மலத்தில் வெளியேறும் வெள்ளை நிறப் புழு.*** 'கீரிப்பூச்சி புடுச்சு ஒரே கொடச்சலா இருக்குது.'

**கீழ்ப்பூட்டு** - *பெ.* ***நுகத்தடிக்குக் கீழ்ப்புறம் கருக்குத் தடியை வைத்துக் கட்டப்படும் கலப்பை.*** 'கீழ்ப்பூட்டுல ஒழவு நல்லா வருதா.'

## கு

**குக்கல்** - *பெ.* ***நாய்.*** 'குக்கலாட்டம் கெடக்கறாம் பாரு.'

**குக்கு** - *வி.* ***1. உட்கார்.*** 'திண்ணமேல குக்கிக்க.' ***2. வயிற்றுப் பக்கம் ஒடுங்கி உடல் வளைந்து இருத்தல்.*** 'ஆளு குக்கிப் போயிட்டான்.'

**குச்சிக்கெழங்கு** - *பெ.* ***மரவள்ளிக் கிழங்கு.*** 'குச்சிக்கெழங்கு வேக வெச்சிருக்கறன், தின்னு.'

**குச்சு** - *பெ.* ***அறுவடை செய்த தீவனத் தட்டைகளைக் (காய்வதற்கும், மழையில் நனையாமல் இருப்பதற்கும் வசதியாகக்) கூம்பு வடிவத்தில் சேர்த்துக் கட்டி வைத்தல்.*** 'மழ வருமாட்டம் இருக்குது. தட்டக் குச்சு கட்டிரோனும்.'

**குச்சூடு** - *பெ.* ***ஓலை அல்லது தட்டைகளால் வேயப்பட்ட சிறு வீடு.*** ஏதோ எங்களுக்குனு ஒரு குச்சூடு இருக்குது.'

**குசலக்காரன்** - *பெ.* ***கோள் சொல்பவன்.*** 'பெரிய குசலக்காரனா இருப்பானாட்டம் இருக்குது.'

**குசலக்காரி** - *பெ.* ***கோள் சொல்பவள்.*** 'அவளாட்டம் குசலக்காரிய நாம் பாத்ததில்ல.'

**குசலம்** - *பெ.* ***ஒருவரைப் பற்றி இன்னொருவரிடம் அவதூறு கூறுதல்; கோள்.*** 'அவந்தான் குசலம் மூட்டி உட்டிருப்பான்.'

**குசலம் மூட்டுதல்** - *வி.* ***கோள் சொல்லுதல். காண்க: குசலம்.***

**குஞ்சு** - *பெ.* ***இறுக்கிக் கட்டுவதற்கேற்பக் கயிற்றை (அதிக முயற்சியோடு) இழுத்தல்.*** 'நல்லாக் குஞ்சுரா, இன்னும் இறுகல.'

**குஞ்சக்கவுறு** - *பெ.* ***பல நிறங்களில் குஞ்சம் தொங்கும் வகையில் பின்னப்பட்டக் கயிறு.*** 'மாட்டுக் கொம்புக்குக் குஞ்சக்கவுறு வாங்கிப் போடு. நல்லா இருக்கும்.'

**குட்டக் கலப்பை** - *பெ.* ***தேய்ந்துபோன குறுங்கலப்பை.*** 'அந்த அணப்பக் குட்டக் கலப்பையில ஓட்டுனாப் போதும்.'

**குட்டான்** - *பெ.* ***குவியல்.*** 'கல்லக்காயக் குட்டாங் குட்டானாப் போட்டு வச்சிருக்கறம்'

**குட்டிக்கொடி** - *பெ.* ***நிலத்தில் அடர்ந்து படரும் ஒருவகைக் களைக்கொடி.*** 'குட்டிக்கொடி படந்து கெடக்குது, புடுங்கோனும்.'

**குட்டி வீசு(தல்)** - *வி.* ***ஆடுகளுக்கு நேரும் குறைப்பிரசவம்.*** 'அந்த ஆடு குட்டி வீசிப் போச்சு.'

**குட்டு** - *பெ.* ***1. மண் அடுப்பின் குமிழ்.*** 'ஒரு பக்கம் அடுப்புக்குட்டு ஒடஞ்சு போச்சு.' ***2. ரகசியம்.*** 'அவனோட குட்டு எத்தன நாளக்கி இருக்கப்போவுது.'

**குட்டை** - *பெ.* ***1. (அணப்பைவிட) மிகச் சிறிய நிலப்பரப்பு.*** 'அந்தக் குட்டைய ஓட்டறதுக்கு எவ்வளவு நேரமாவுது.' ***2. குழிப்பாங்கான நிலம்.*** 'அந்தக் குட்டைய வெதச்சு என்ன வரப் போவுது.'

**குடி எழுப்பு(தல்)** - *வி.* ***ஆதிக்கம் வாய்ந்தவர்கள் தங்கள் கீழிருப்பவர்களை வசிக்கும் இடத்தை விட்டு விரட்டுதல்.*** 'உன்னயக் குடி எழுப்பிருவேம் பாத்துக்க.'

**குடிபடை** - பெ. ***(எல்லாச் சாதியையும் சேர்ந்த) மக்கள்***. 'அடேங்கப்பா... அந்த ஊருக் குடிபடையே தெரண்டு வந்திருச்சு.'

**குடிவளவு** - பெ. ***உயர் சாதியினர் (குடியானவர்) குடியிருப்புப் பகுதி***. 'குடிவளவுல ஆரிருக்கறா. அவுங்கவுங்க காட்டுலதான குடியிருக்கறாங்க.'

**குடிவெளப்பி** - பெ. ***குடும்பம் வாய்க்கப் பெறாதவன்***. 'அவனொரு குடிவெளப்பி.'

**குடி வை(த்தல்)** - வி. ***உயர் சாதியினர் தமது தேவையின் பொருட்டுக் கீழ்ச் சாதியினரை அழைத்து வந்து தமது ஊரில் வசிக்கச் செய்தல்***. 'நாந்தான் அவனக் குடிவெச்சன் என்னயவே எதுக்கறான்.'

**குடுசு** - பெ. ***குடிசை. பருவமடைந்த பெண் சில நாட்கள் தனித்திருக்கப் பச்சை ஓலையால் கட்டப்படும் குடிசை***. 'குடுசு கட்டறதுக்கு மாமங்காரன் வந்தானா?'

**குடுசு கட்டு(தல்)** - பெ. ***பருவமடைந்த பெண் தனித்திருக்கத் தடுப்புக் கட்டுதல். காண்க: குடுசு***

**குடுவாந்தொரட்டி** - பெ. ***பனங்கிழங்கு பிடுங்கிய பின் அதிலிருந்து உதிர்ந்த, விறகுக்குப் பயன்படும் கொட்டை***. 'குடுவாந்தொரட்டி ஒரு கூட கொண்டாந்தா தண்ணி காய வெக்கலாம்.'

**குடுவு** - பெ. ***இடுப்பு***. 'குடுவு எறங்கீருச்சு.'

**குடை சாய்தல்** - வி. ***வண்டி கவிழ்தல்***. 'நொடித் தடத்துல ஓட்டிக்கிட்டுப் போயிருக்கறான். வண்டி கொட சாஞ்சிருச்சி.'

**குண்டுக்கல்** - பெ. ***(முளைக்குச்சி தட்ட, வெற்றிலை கொட்ட உதவும்) உருண்டையான சற்றுப் பெரிய கல்***. 'நல்லா குண்டுக்கல்லாப் பாத்து எடுத்தா.'

**குண்டி** - பெ. ***ஆணின் விரை***. 'போதையில குண்டி வெடிச்சிச் செத்துப் போயிட்டான்.'

**குண்டிக்காய்** - பெ. ***ஆடுகளின் விரை இறைச்சி***. 'குண்டிக்கா கொஞ்சம் போடு. கொழந்தைங்க திங்கும்.'

**குத்தகை** - பெ. ***நிலத்தில் பயிர் செய்வதற்காகப் பிறரிடம் பேசி ஆண்டுக்குக் குறிப்பிட்ட அளவு பெற்றுக் கொள்ளும் பணம் அல்லது தானியம்***. 'அவங்களுக்குத்தான் குத்தகைக்கு உட்டிருக்கறன்.'

**குத்தப் பணம்** - பெ. ***குற்றப் பணம். குற்றம் செய்தவர் தண்டனையாக ஊருக்குக் கட்டும் பணம்***. 'குத்தப் பணம் கட்டிக்கூட அவனுக்குப் புத்தியில்ல.'

**குத்தரபொட்டி** - பெ. ***கம்பு போன்ற தானியங்களை உரலில் போட்டு இடிக்கும்போது வெளியே சிதறாமல் தடுக்க வைக்கப்படும் (கீழ்ப்புறம் குவிந்தும் மேல்புறம் விரிந்தும் இருக்கும்) கூடை போன்று பின்னப்பட்ட பெட்டி***. 'குத்தரபொட்டி இல்லாத கம்ம மாவு ஒரு கைப்பிடி எறஞ்சு போச்சு.'

**குத்தல்** - பெ. ***கிணற்றில் நீர் கசியும் பகுதி***. 'கெணுத்துல குத்தல் பக்கம் பாசி படிஞ்சிட்டுது.'

**குத்தாரி** - பெ. ***முறையின்றித் தீவனப் பயிர்களைப் போட்டு வைத்திருக்கும் குவியல்***. 'சோளத்தட்ட யாராச்சும் இப்படியா குத்தாரியாப் போட்டு வெச்சிருப்பாங்க.'

**குத்திப்போடு** - வி. ***கம்பிடித்துச் சோறாக்குதல்***. 'நேத்துக் கம்பு குத்திப் போட்டன். சோறு இன்னங் கெடக்குது.'

**குத்தீட்டி** - பெ. ***வேட்டையில் மிருகங்களைக் குத்திக் கொல்ல உதவும் கருவி***: 'அவனுக்குப் பல்லப் பாரு. குத்தீட்டியாட்டம் இருக்குது.'

**குத்து** - பெ. ***ஒரு கைப்பிடியளவு***. 'ஒரு குத்துச் சாக்கரை அள்ளி வாயில போட்டுக்கிட்டா.'

**குத்துக்கல்** - பெ. ***சிறிது வெளியே நீட்டிக்கொண்டு இருக்கும் வகையில் மண்ணில் நடப்பட்ட கல்***. 'அந்தக் குத்துக்கல்லு மேல உக்காரு.'

**குத்துக்கால்** - பெ. **கட்டில், குடிசை போன்றவற்றில் நிலத்தில் ஊன்றும் வகையில் அமைக்கப்பட்ட மரக்கால்.** 'கட்டக்குத்துக்கால் மேல உக்கோராத, குருத்தொடிஞ்சிடும்.'

**குத்துக்காய்** - பெ. **நிலக்கடலையில் ஒரு வகை. அகன்று படராமல் மேல்நோக்கி வளரும் நிலக்கடலைப் பயிர்.** 'மேட்டுக் காட்டுல குத்துக்காய் போட்டாக் காய்ச்சலுக்குத் தாங்காது.'

**குத்துச்சரம்** - பெ. **வீட்டுக் கூரை முகட்டையும் விட்டத்தையும் இணைக்கும் மரக்கட்டை.** 'குத்துச் சரத்துல கரையான் ஏறிடுச்சு.'



குத்துச்சரம்

**குத்துச் செடி** - பெ. **குறும்புதர்ச் செடி.** 'குத்துச் செடியாக் கெடக்குது. அதுக்குள்ள போவாத.'

**குத்துளி** - பெ. **கூர்மையான, அகலம் குறைந்த மர உளி வகை.** 'அப்படியே குத்துளியில ஏத்திப்புடுவம் பாத்துக்க.'

**குத்தேரி** - **காண்க: குத்தாரி.**

**குதிரைப்பொலி** - பெ. **ஒரே இடத்தில் நிலம் அமையாமல் பிறருடைய நிலங்களுக்கு இடையே சிறிது சிறிதாக இருத்தல்.** 'அவனுக்குப் பூரா குதரப்பொலி பங்குடா.'

**குதியாளம்** - பெ. **உற்சாகத்தால் குழந்தைகள் (குதித்துக்கொண்டு) போடும் ஆட்டம்.** 'அடேங்கப்பா... இதுவுளுக்குக் குதியாளத்தப் பாரு.'

**குதிரவாலம் பூடு** - பெ. **ஒரு களைச் செடி.** 'குதிரவாலம் பூடுன்னா வெள்ளாடு நல்லாத் திங்கும்.'

**குதிரை முகம்** - பெ. **முழங்காலுக்குக் கீழுள்ள காலின் முன் பகுதி.** 'குதிரை மொகத்துல வெட்டீருக்குது. சீக்கிரம் ஆறாது.'

**குந்த வை** - வி. **காலை மடக்கிப் பின்பகுதி நிலத்தில் படாமல் உட்காருதல் (மலம் கழிக்கும் போது உட்காரும் நிலை).** 'அவளுக்குச் சம்மணம் போட முடியாது. குந்தவெச்சுத்தான் உட்காருவா.'

**குந்தானி** - பெ. **(நெல் உமி நீக்கப் பயன்படும்) மரத்தாலான உரல்.** 'குந்தானி உங்கூட்டுல இருக்குதா. கொஞ்சம் நெல்லுக் குத்தோனும்.'



குந்தானி

**குந்தானிச்சி** - *பெ.* ***(குந்தானி போன்ற) அகன்ற இடுப்புடைய பெண்.*** 'குத்தானிச்சி போறா பாரு.'

**குந்து** - *வி.* ***முழங்காலை மடக்கி (மலம் கழிக்கும் போது உட்கார்வது போன்று) அமர்தல்.*** 'குந்தித் தின்னா கோபுரமும் கொறையும்.' (பழமொழி)

**குந்து** - *பெ.* ***1. கதவில் நாதாங்கி மாட்டப் பயன்படும் சாதனம்.*** 'குந்து நல்லா மாட்டி உடு.' ***2. கலப்பையில் பட்டா மாட்டும் கொக்கி.*** 'குந்த அடிச்சு உடு'.

**குந்துகால்** - *பெ.* ***நடக்கும்போது லேசாக மடக்கியது போல இருக்கும் கால்.*** 'அவனுக்குக் குந்துகால். அதான் அப்படி நடக்கறான்.'

**குந்தேத்தக்குழி** - *பெ.* ***தூரத்திலுள்ள வயல்களுக்கு நீர் பாய்ச்சக் கிணற்றிலிருந்து நீரை இறைத்து வழியில் ஒரு குழியில் நிறைப்பர். அதிலிருந்து மீண்டும் இறைத்து வயலுக்குக் கொண்டு செல்வர். (ஏற்றத்தில் நீர் இறைக்கும் போது வெகுதூரம் சென்று பாயாது. அதற்காக இந்த ஏற்பாடு) அந்தக் குழி.*** 'குந்தேத்தக் குழியில எறச்சு உட்டா அந்தக் காடு பாஞ்சராது.'

**குப்பப் புழு** - *பெ.* ***குப்பைக்குள் வெண்ணிறத்தில் இருக்கும் பெரிய புழு.*** 'குப்பப்புழுவு பாரு, மொட்டாட்டம் கெடக்குது.'

**குப்ப மண்** - *பெ.* ***தொழு உரம்.*** 'குப்ப மண்ணுப் போட்டா நல்லா வெளையும்.'

**குப்ப மாரிச்செடி** - *பெ.* ***குப்பைப் பகுதியில் வளரும் செடி; குப்பைமேனி.*** 'குப்ப மாரிச் செடி எக்கச்சக்கமா வளந்திருச்சு.'

**குப்பாங்குதி** - *பெ.* ***(குழந்தைகளின்) அளவு மீறிய குதிப்பு.*** 'ஏன்டா இந்தக் குப்பாங்குதி குதிக்கற.'

**குப்பால்** - *பெ.* ***அடி(த்தல்).*** 'அவனுக்கு ரண்டு குப்பால் போடோனும்.'

**குப்பைக்குழி** - *பெ.* ***எருவைச் சேர்த்து வைக்கும் குழி.*** 'குப்பக்குழியில கொண்டோயிக் கொட்டு.'

**குப்பை உதறு** - *வி.* ***நிலத்தில் குப்பையைச் சமச்சீராக இறைத்தல்.*** 'குப்ப உதறித்தான் ஓட்டோனும்.'

**கும்பக்கட்டு** - *பெ.* ***வண்டி ஆரக்கால்கள் இணையும் மையப்பகுதி.*** 'கும்பக்கட்டுக்குத் தார்ப்பூசு.'

**கும்பந்தாளித்தல்** - *பெ.* ***கோவில் திருவிழா தொடக்கத்தில் கடவுளுக்குரிய கரகம் அமைத்தல்.*** 'நேத்தே மாரீங்கோயில்ல கும்பந் தாளிச்சிட்டாங்க.'

**கும்பம்** - *1. காண்க: கும்பக்கட்டு. 2.* ***கோவில் திருவிழாவில் எடுத்து ஆடும் கரகம்.*** 'இன்னிக்கி கும்பம் பாக்க வர்லியா.'


கும்பம்

**கும்பல்** - *பெ.* ***சோறு தீய்வதால் வரும் மணம்.*** 'சோறு நேத்துக் கும்பலடிச்சுப் போச்சு.' 'சோத்த எறக்கு. கும்பல் அடிக்குது.'

**கும்பவாசம்** - ***காண்க: கும்பல்.***

**கும்மு(தல்)** - *வி.* ***கையால் துணியைக் குவித்துத் தட்டித் துவைத்தல்.*** 'துணிய நல்லாக் கும்மு.'

**குமிட்டி** - *பெ.* ***நிலத்தில் களையாக வளரும் ஒரு கீரை.*** 'குமிட்டி நக்கிரி கடஞ்சா நெய்யாட்டம் இருக்கும்.'

**குமுணி** - *பெ.* ***குன்றிமணி.*** 'குமுணியப் பொறுக்கியா வெளயாடுவோம்.'

**குமுளாமுள்** - *பெ.* ***வேலி கட்டப் பயன்படும் முள்செடி.*** 'குமளாமுள் கொண்டாந்து வேலி கட்டலாமுல்ல.'

**குரங்குப் பெடல்** - *பெ.* ***மிதிவண்டி பழகும்போது சிறுவர்கள் முன்பகுதியில் உள்ள முக்கோணத்துள் கால் நுழைத்து ஓட்டும் நிலை.*** 'இப்பத்தான் குரங்கப் பெடல்ல ஓட்டறான்.'

**குரம்பை** - *பெ.* ***நுங்கு, தேங்காய் ஆகியவற்றின் பிஞ்சு நிலை.*** 'நொங்கு இன்னம் குரம்பயா இருக்குது, இப்ப எப்படி வெட்டறது.'

**குரழத்தஞ்செடி** - *பெ.* ***வெள்ளரிக் கொடி போலக் காணப்படும் ஒரு வகைக் கொடி (இதன் காய்கூட வெள்ளரிப் பிஞ்சு போலவே இருக்கும்).*** 'குரமத்தஞ் செடிய பாத்துட்டு வெள்ளரிக் கொடிங்கறான்.'

**குருட்டுக் காதுத் தளுக்கு** - *பெ.* ***காதின் முன் குமிழ் போன்றுள்ள சிறு பகுதியில் அணியும் அணிகலன்.*** 'அந்தப் பாட்டி குருட்டுக் காதுத் தளுக்குக் கூடப் போட்டிருக்குது.'

**குருட்டுப் பருத்தி** - *பெ.* ***வெடிக்காமல் கருப்புப் படிந்துவிட்ட பருத்திப் பஞ்சு.*** 'குருட்டுப் பருத்தியத் தனியாத்தான் எடைக்கு எடுத்துக்குவாங்க.'

**குருட்டு வசாலி** - ***காண்க: ஒடக்கான் தின்னிக் கழுகு.***

**குருத்து** - *பெ.* ***கட்டில் சட்டம், வண்டி முளை போன்றவற்றின் (துளையில் மாட்டுவ தற்காக) நுனியில் செதுக்கப்பட்ட பகுதி.*** 'கட்டச் சட்டம் குருத்தொடிஞ்சு போச்சு.'

**குருத்தொடி (தல்)** - *வி.* ***கட்டில் குத்துக்காலின் துளையில் பொருந்தி யிருக்கும் மரச் சட்டத்தின் நுனிப்பகுதி உடைந்துவிடுதல். காண்க: குருத்து.***

**குருத்தோலை** - *பெ.* ***பனை, தென்னைகளில் உள்ள விரியாத நுனி ஓலை.*** 'மடலோலயப் பாத்துக் குருத்தோல சிரிச்சுதாம்.' (பழமொழி)

**குருத்துக்கட்டை** - *பெ.* ***இளம் கரும்புப் பயிரில் குருத்து வறண்டு போகும் நோய்.*** 'வெய்யக் காலத்துல அதிகமா குருத்துக் கட்டை உழுவும்.'

**குருத்துக்கதவு** - *பெ.* ***தரையோடு உரசிச் செல்லும்படியான (கதவுக்கும் தரைக்கும் இடைவெளி அற்ற) கதவு.*** 'குருத்துக் கதவெல்லாம் அந்தக் காலத்துலதான்.'

**குருவலம்** - *பெ.* ***1. மிகுந்த விருப்பம்.*** 'கச்சாயம்னா அவனுக்குக் குருவலம்' ***2. காலமும் நேரமும் (குருபலன்) கூடி வருதல்.*** 'குருவலங் கூடுன்னா தான கலியாணம் நடக்கும்.'

**குருவிப்பீ** - *பெ.* ***காதுக்குள் சேரும் அழுக்கு; குறும்பி.*** 'காதுல குருவிப்பீ இத்தன சேர்ந்து போச்சு.'

**குலம்** - *பெ.* ***கொங்குப் பகுதிக் கவுண்டர் சாதியினுள் இருக்கும் (செடி, மரம், பறவைப் பெயர்களைச் சின்னமாகக் கொண்ட) பிரிவு.*** 'நாங்க காடைகுலம்.'

**குழிவாசல்** - *பெ.* ***பிணம் புதைக்க வெட்டும் குழியின் வாயில்.*** 'எங்காதுப் பொன்ன நாங் குழிவாசலுக்குப் போறப்பக் கழ்ட்டிக்கோ.'

**குழுதாழி** - *பெ.* ***மாடுகளுக்குக் கழுநீர் வைக்கும் தொட்டி.*** 'குழுதாழியில கொண்டோயி ஊத்து.'

**குள்ளவெட்டான்** - *பெ.* ***குள்ளநரி.*** 'அந்தப் பொதைக்குள்ள குள்ளவெட்டான் ஓடுது.'

**குளமாத்து** - *பெ.* ***ஒன்றைச் செய்வதாகச் சொல்லிவிட்டு அதற்கு நேர்மாறாக நடப்பது.*** 'இந்தக் கொளமாத்துப் பண்றயா.'

**குளிப்பாட்டு(தல்)** - *வி.* ***பிணத்தை இ/சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லுகையில் நீர்***

**ஊற்றிக் கழுவும் சடங்கு.** 'இப்பத்தான் குளிப்பாட்டறாங்க. சீக்கிரம் கானக்காடு கொண்டோயிடுவாங்க.'

**குளுவை** - பெ. ***மாத்திரை.*** 'இத்தன குளுவைய எப்பிடீடா முழுங்கறது.'

**குறிச்சி** - பெ. ***பிரம்பினால் செய்யப்பட்ட நாற்காலி.*** 'அந்தக் குறிச்சிய எடுத்துப்போடு. உக்காரட்டும்.

**குறிப்பு** - பெ. ***ஜாதகம்.*** 'அவனுக்கு குறிப்பு எழுதி வெச்சிருக்கறம்.'

**குறியாப்பு** - பெ. ***தானியம், சிறுசெலவுகள் ஆகியவற்றை (இரவல்) கொடுக்கும் கைமாற்று.*** 'அவ குறியாப்புக் குடுக்கறதுக்குச் சலிச்சுக்கவே மாட்டா.'

**குறுக்காட்டு** - பெ. ***வழி மறித்தல்.*** 'அவனப் போயிக் குறுக்காட்டுடா. கோவிச்சுக்கிட்டுப் போறான்.'

**குறுக்குச் சட்டம்** - பெ. ***கட்டிலின் அகலப் பகுதியில் குத்துக் கால்களை இணைக்கும் மரச் சட்டம்.*** 'குறுக்குச் சட்டத்த நல்லாச் சீவிப் போடு'

**குறுக்குச்சால்** - பெ. 1. ***நிலத்தில் விதைத்த பகுதியிலேயே முறையின்றி மீண்டும் விதைகளைத் தூவுதல்.*** 'குறுக்குச்சால் உட்டா அடம்பா மொளச்சராது.' 2. ***நிலத்தில் முறையின்றி குறுக்காக உழும் உழவு.*** 'இவங்கிட்ட யாருடா குடுத்தா, குறுக்குச்சால் ஓட்டறன்.' 3. ***பேச்சின் இடையில் புகுந்து மாற்றுதல்.*** 'நாங்க பேசறப்ப நீ ஏண்டா குறுக்குச்சால் ஓட்டற.'

**குறுக்குத்தடம்** - பெ. ***விரைவில் சென்று சேர்வதற்குரிய நிலங்களுக்குள் செல்லும் வழி.*** 'குறுக்குத் தடத்துல போனா சீக்கிரம் போயரலாம்.'

**குறுக்குப் பளுது** - பெ. ***வண்டியின் மேல் இருபுறமும் நீண்டு செல்லும் சட்டங்களைக் குறுக்காக இணைக்கும் கட்டை.*** 'குறுக்குப் பளுது லேசா விரிசல் உட்ருக்குது. நல்ல மரமில்லயாட்டம் இருக்குது.'

**குறுக்கு வெலா** - பெ. ***முறையான உழவுப் பகுதியிலிருந்து விலகிச் செய்த உழவு.*** 'அங்கேன்டா குறுக்குவெலா ஓட்டற.'

**குறுக்கொழவு** - பெ. ***நிலத்தின் அகலப்பகுதியை இணைக்கும் விதமாகச் செய்த உழவு.*** 'இந்தத் தடவ குறுக்கொழவு தாம் போடோனும்.'

**குன்னாலு** - பெ. ***கும்மாளம்.*** 'தேருந் திருநாளும் தேவிடியோட்ட குன்னாலு' - பழமொழி.

**குன்னு** - பெ. ***சீர்வரிசையாகக் கொடுக்கும் மிடா அடுக்கின் கீழ்ப்பகுதியில் இருக்கும் மிகப் பெரிய மிடா.*** 'குன்னுல கம்பு கொஞ்சம் கெடக்குது.'

**குன்னு மாயவித்தை** - பெ. ***உடல் சரியாக இருக்கும் போதே நோய் வந்துவிட்டது போல நடித்தல்.*** 'இந்தக் குன்னு மாய வித்த எங்கிட்ட நடக்காது.'

**குனுக்கம்** - பெ. ***ஊன்றிக் கவனித்தல்.*** 'அவன் எதையும் குனுக்கமாகச் செய்வான்.'

**குன்னுமொடா** - ***காண்க: குன்னு.***

**குனுக்கு** - பெ. ***கல் இல்லாத ஒரு வகைக் காதணி.*** 'குனுக்குப் போட்டுக்கிட்டு காத இந்த ஆட்டு ஆட்டறா.'

**குனுப்பம்** - ***காண்க: குனுக்கம்.***

## கூ

**கூகை** - பெ. ***பருப்பில்லாமல் தண்ணீர் மட்டும் இருக்கும் தேங்காய்.*** 'நாலு காயி கூகையாப் போச்சு.'

**கூச்சம்** - பெ. ***(வீட்டைத் தாங்கும்) மரத்தூண்.*** 'கூச்சத்துல ரண்டு கவுறு கட்டு. தயிர் சிலுப்போனும்.'



கூச்சம்

**கூசி** - *பெ.* **புளி போன்ற பொருட்கள் போட்டு வைத்துக்கொள்ளும் மண்ணாலான (மிடாவைப் போன்ற ஆனால் அதைவிடச் சிறிய) பாத்திரம்.** 'கூசியில புளி இருக்குது துளி எடு.'

**கூட்டம்** - **காண்க: குலம்.**

**கூட்டாஞ்சோறு** - *பெ.* **அரிசி, பருப்பு, காய்கறிகள் எனப் பல பொருட்களையும் ஒன்றாகச் சேர்த்துச் சமைக்கும் உணவு.** 'இன்னக்கி எங்கூட்டுல கூட்டாஞ்சோறு ஆக்கியிருக்கறம்.'

**கூட்டுச் சாறு** - *பெ.* **பல சிறு தானியங்கள் சேர்த்து அரைத்து வைக்கும் குழம்பு.** 'குதிர வந்தாலும் கூட்டுச்சாறு தான்' - பழமொழி.

**கூடப் பொறந்தவள் / ன்** - *பெ.* **உடன் பிறந்தவள் / ன்; சகோதரி / சகோதரன்.** 'அவ எங்கூடப் பொறந்தவதான்.'

**கூடப்போடு** - *வி.* **1. தொலைத்தல்.** 'கையில எடுத்துக்கிட்டுப் போன பொருளக் கூடப்போட்டுட்டு வந்துட்டானே.' **2. கெடுத்தல்.** 'அவன் நல்ல ஊட்டயே கூடப்போட்டுருவான்.'

**கூடவைத்தல்** - *வி.* **கெடுத்தல்.** 'அவன் எத்தன குடியக் கூட வெச்சவந் தெரீமா.'

**கூத்தியா** - *பெ.* **வைப்பாட்டி.** 'குந்த நெவுலும் கூத்தியா ஊடும் இருந்திட்டா மயரான சம்பளம் வந்தா என்ன போனா என்ன?' (பழமொழி)

**கூதல்** - *பெ.* **குளிர்.** 'கூதலடிச்சா போர்வையப் போத்திக்கொ.'

**கூப்பன் கடை** - *பெ.* **ரேஷன் கடை.** 'கூப்பன் கடைல இன்னிக்கி என்ன போடறாங்க.'

**கூப்பன் சீட்டு** - *பெ.* **ரேஷன் அட்டை.** 'கூப்பன் சீட்டுல எம்பேரு உட்டுப் போயிருக்குது.'

**கூதரை** - *பெ.* **சிந்தனைத் திறமற்ற தன்மையைக் குறிக்கும் திட்டுச்சொல்.** 'அந்தக் கூதரைக்கு என்ன தெரியும்.'

**கூம்பு** - *பெ.* **1. கோழி ஒருமுறை முட்டையிடும் பருவம்.** 'இந்தக் கூம்பு எத்தன மொட்டு வெச்சது.' **2. கார்த்திகை தீபத் திருவிழாவின் போது நீளமாகக் கட்டப்பட்ட தட்டைக் கத்தைகளில் தீ மூட்டிக்கொண்டு கோயிலை வலம் வருதல்.** 'கூம்புக்கு தட்டுக் கட்டி வெச்சிட்டயா.'

**கூலிக்காளை** - *பெ.* **மாட்டைப் புணர்வதற்கு (பணம் பெற்றுக்கொண்டு) விடும் காளை மாடு.** 'அந்தக் காட்டுங்காரங்க கூலிக்காளை வெச்சிருக்காங்க.'

**கூலித்தவசம்** - *பெ.* **நிலத்தில் செய்த உழைப்புக்குக் கூலியாகக் கொடுக்கும் தானியம்.** 'கூலித்தவசம் குடுக்கறதுக்குக் கணக்குப் பாத்தா ஆவுமா.'

**கூலிப்பணம்** - *பெ.* **நிலத்தில் செய்த வேலைக்குக் கூலியாகத் தரும் பணம்.** 'கூலிப்பணத்த அன்னன்னிக்கு வாங்கித் தின்னுட்டா கடைசீல என்ன மிச்சமிருக்கும்.'

**கூலிப்பருத்தி** - *பெ.* **வேலைக்குக் கூலியாகக் கொடுக்கும் பருத்தி.** 'கூலிப்பருத்தி சேத்தே ஆடு வாங்கிட்டா.'

**கூலிவள்ளம்** - பெ. **கூலியாகக் கொடுக்கும் தானியத்தை அளக்கப் பயன்படும் வள்ளம்.** 'கூலிவள்ளத்துல போட்டா எப்பிடிக் கூட ரொம்பும்.'

**கூவக்காய்** - பெ. **உள்ளே பொக்கையான காய்.** 'இந்தத் தேங்காய் கூவக்காயாப் போச்சு.'

**கூவை** - *காண்க:* **கூவக்காய்.**

**கூளச்சி** - பெ. **குள்ளமாக இருப்பவள்.** 'கூளச்சிக்குத் திமிரப் பாரு.'

**கூளம்** - பெ. **தீவனக் கழிவு.** 'மாடு தட்டா திங்குது. எல்லாம் கூளமாக் கெடக்குது.'

**கூளை** - பெ. **குள்ளம்; தாழ்வு.** 'மரம் கூளையாத்தான இருக்குது. ஏறித்தழை வெட்டிப் போடு.' 'பையன் வளருல. கூளையாவே இருக்கிறான்.'

**கூளையன்** - பெ. **குள்ளமாக இருப்பவன்.** 'அந்தக் கூளையனுக்குப் பொண்ணுத் தர்றாங்களா.'

**கூறுகெட்டவள் / ன்** - பெ. **பகுத்தறியும் விவரமில்லாதவள் / ன்.** 'அவன் ஒரு கூறுகெட்டவன்டா.'

**கூறுள்ளவள் / ன்** - பெ. **சிந்தித்துச் செயல்படும் ஆற்றல் உள்ளவள் / ன்.** 'அவன் பொழச்சுக்குவான் கூறுள்ளவன்.'

## கெ

**கெக்கலக்கை** - பெ. **பாடலின் போதோ ஆட்டத்தின் போதோ எல்லோரும் சேர்ந்து நாவை மடித்து எழுப்பும் ஒருவித (பொருளற்ற) ஒலி.** 'கெக்கலக்(ை)க நாலு ஊருக்கும் கேக்குமாட்டம் இருக்குது.'

**கெக்கலி** - *காண்க:* **கெக்கலக்கை.**

**கெட்டித்தல்** - வி. **கிணற்றில் வேட்டு வைக்கும் போது மருந்தை அடர்த்தியாகத் திணித்து அடைத்தல்.** 'மருந்த நல்லா கெட்டிச்சுட்டயா.'

**கெடகால்** - பெ. *காண்க:* **கடகால்.**

**கெடங்கு** - பெ. 1. **வெற்றிலைக் கொடிக்கால் போடும் நில அளவு.** 'இந்த வருஷம் எத்தன கெடங்கு போடலாம்னு இருக்கற.' 2. **வயலில் ஊறும் நீரை வெளியேற்ற வெட்டும் குழி.** 'கெடங்கு வெட்டுனா ஓரம்படிக்காதுடா.'

**கெடதண்ணி** - பெ. **கிடை தண்ணீர். இறைக்காமல் பல நாட்களாகக் கிணற்றில் கிடக்கும் நீர்.** 'கெட தண்ணீல குதிச்சா சளிப்புடிக்காம என்ன பண்ணும்.'

**கெடப்பு** - பெ. **இருப்பு.** 'அவங் கெடப்பு ஆருக்குத் தெரியாது.'

**கெடபுண்ணு** - பெ. **கிடைபுண். படுக்கையில் நீண்டநாள் கிடப்பதால் உடலின் பின்பகுதியில் உண்டாகும் புண்.** 'முதுவெல்லாம் கெடபுண்ணு வந்திருச்சு. இன்னமேலா பொழைக்கப் போறா.'

**கெடமல்லன்** - பெ. **படுக்கையிலேயே சிறுநீர் கழிப்பவன்.** 'இவனொரு கெடமல்லன்டா.''

**கெடமல்லி** - பெ. **படுக்கையிலேயே சிறுநீர் கழிப்பவள்.** 'இது ஒரு கெடமல்லி.'

**கெடமல்லு** - பெ. **கிடைமல். படுக்கையிலேயே (குழந்தைகள்) போய்விடும் சிறுநீர்.** 'இத்தன வயசாச்சு இன்னம் கெடமல்லு மல்லரான்.'

**கெடாக்கறி** - பெ. **கிடாக்கறி. சாமிக்குக் கிடா வெட்டி (உறவினர்களை அழைத்து) போடும் விருந்து.** 'எங்கூட்ல கெடாக்கறி. ஊரு கூப்படோனும்.'

**கெடா சேத்தறது** - வி. **சினைக்கு ஆட்டோடு கிடாவைச் சேரவிடுதல்.** 'கெடா சேத்தறதுக்கு அலைய வேண்டிதா இருக்குது.'

**கெடாரி** - பெ. **மாடு, எருமைகளின் வளர்ந்த (ஈனும் முன் உள்ள பருவப்) பெண் கன்று.** 'அந்தக் கெடாரி செனையாயிடுச்சா.'

**கெடாரிக்கன்னு** - *பெ.* ***கிடாரிக்கன்று. மாடு, எருமைகளின் பெண் கன்று.*** 'ரண்டு ஈத்தா இந்த மாடு கெடாரிக் கன்னுதாம் போடுது.'

**கெடாவெட்டு** - *பெ.* ***சாமிக்குக் கிடா வெட்டும் நிகழ்ச்சி.*** 'நாளக்கித்தான முனீப்பனுக்குக் கெடாவெட்டு.'

**கெடை** - *பெ.* **1. *ஓரிடத்திலே அதிக நாட்கள் இருக்கும் இருப்பு.*** 'அவனுக்கு அவங்கூட்டலதாங் கெடை.' 'பட்டியக் கெடை மாத்தோனும்.' **2. *படுக்கை.*** 'கெடைக்கு ஊட்டுக்கு வந்தரலாம்.'

**கெண்டி** - *பெ.* ***வளர்ந்த குழந்தைகள் பால் குடிக்கப் பயன்படும் (ஒரு பக்கம் குழாய் கொண்ட சொம்பு போன்ற) பாத்திரம்.*** 'கெண்டில ஊத்திக்குடு. சீக்கிரம் குடிச்சிடுவான்.'



கெண்டி

**கெணத்துத் திட்டு** - **காண்க: *கிணற்றுமேடு.***

**கெணத்துப்பூடு** - *பெ.* ***கிணற்றோரத்தில் அதிகமாகக் காணப்படும் ஒரு செடி.*** 'கெணத்துப்பூட்டுத் தழயக் கசக்கிச் சாறுட்டா புண்ணு ஆறிப் போயிரும்.'

**கெரந்தி** - *பெ.* ***வாய்வு நோய் உண்டாக்கும் உடலுக்குச் சேராத உணவு வகை.*** 'ஏதோ கெரந்தியத் தின்னுட்டன்.'

**கெராம்புக்குச்சி** - *பெ.* ***காதில் அணியும் அணிகலன்.*** 'அந்தக் காலத்துல காதுல கெராம்புக் குச்சி போடுவாங்க.'

**கெராம்புச்சொர** ***காண்க:*** **கெராம்புக்குச்சி.**

**கெராய்** - *பெ.* ***மண்ணோடு கட்டியாகச் சேர்ந்து வரும் கெட்டியான புல்.*** 'அந்தக் கெராய்ல மாட்டக்கட்டு.'

**கெவுருத்து** - *பெ.* ***மதிப்பு; தலைக்கனம்.*** 'அவனுக்குக் கெவுருத்து வந்திருச்சு.' 'இருந்தாலும் இந்தக் கெவுருத்து ஆகாது.'

**கெளை** - *பெ.* ***அதிகக் களைப்பு.*** 'கெளையா வந்திருச்சுப் போ.'

## கே

**கேவுதல்** - *வி.* ***முட்டையிடும் பருவத்தில் கோழி நீளமாகக் கத்தும் கத்தல்.*** 'கோழி கேவுது. மொட்டு வெச்சிடும்.'

**கேழை ஆடு** - *பெ.* ***மலைப் பகுதியிலுள்ள ஒருவகை ஆடு.*** 'கேழையாடுவ அந்தப் பக்கம் போவுது.'

**கேனச்சி** - *பெ.* ***எதையும் முறையாக ஒழுங்காகச் செய்யத் தெரியாத பெண்.*** 'அவளே ஒரு கேனச்சி. அவகிட்டயா வேல சொல்றது.'

**கேனயன்** - *பெ.* ***எந்தச் செயலையும் சரியாகச் செய்யத் தெரியாத ஆண்.*** 'அவங் கெடக்கறான் கேனயன்.'

**கேனை** - *பெ.* ***திட்டுமிட்டுச் செய்யும் ஆற்றலில்லாத தன்மை உடையவள் / ன்.*** 'அது ஒரு கேன. என்ன தெரியும்.'

## கை

**கைக்கரண்டி** - **காண்க. *அன்னக்கரண்டி.***

**கைப்பிடிச் சுவர்** - *பெ.* ***ஓடு வேய்ந்த வீடுகளின் கூரைக்குமேல் இருபுறங்களிலும் சிறிது உயரமாக எழுப்பும் சுவர்.***

***(கூரைமேல் ஏறும்போது கையால் பிடித்துக்கொண்டு நடக்க இச்சுவர் உதவும்).*** 'மேல பாக்கறதுக்கு மொட்டையாத் தெரீது. கைப்பிடிச் செவுரு கட்டறதுதான.'

**கைச்சாளை** - *பெ.* ***வீட்டை ஒட்டியிருக்கும் (சமையல் செய்யும்) சிறு அறை.*** 'கைச்சாளயில தண்ணி இருக்கும். எடுத்துக்குடி.

**கைச்செலவு** - *பெ.* ***சிறுசெலவு.*** 'கைச்செலவுக்காச்சும் நாலு காசு வேண்டாமா.'

**கைத்துருசு** - *பெ.அ.* ***வேலையில் விரைவு.*** 'பொழுதோடக் கொஞ்சம் கைத்துருசா வேல செய்.'

**கைநீளம்** - *பெ.* ***எதையும் சீக்கிரம் (பிறருக்குக் கொடுத்துச்) செலவழித்து விடுதல்.*** 'அவனுக்குக் கைநீளம். கேட்டாக் குடுத்துருவான்.'

**கைப்பாசி** - *பெ.* ***சிறு குழந்தையின் கைகளில் வளையல் போலப் போடப்படும் மணி.*** 'கொழந்தைக்கிக் கைப்பாசி ஒன்னு வாங்கிப் போடு.'



கைப்பாசி

**கைப்பனியன்** - *பெ.* ***ஆண்கள் அணியும், கைப்பகுதியுடன் கூடிய உள்ளாடை.*** 'ஊட்ல இருக்கும்போது அவரு கைப்பனியன்தான் போடுவாரு.'

**கையாட்டம்** - *பெ.* ***தாய விளையாட்டில் ஐந்தும் அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையும் விழும்போது மீண்டும் எடுத்தாட வாய்ப்புக் கிடைக்கும் ஆட்டம்.*** 'எட்டு உழுந்திருக்குது கையாட்டம் எடுத்துப் போடு.'

**கையோடு** - *பெ.* ***கூரை வேய (விரித்த கைபோலக் குயவர்களால்) செய்யப்படும் சுட்ட மண் ஓடு.*** 'எங்கூட்டுக்குப் போட்டிருக்கறது அந்தக் காலத்துக் கையோடு.'



கையோடு

**கைவிளக்கு** - *பெ.* ***மண்விளக்கு.*** அந்தக் கைவெளக்க எடுத்தா.'

**கைவேலை** - *பெ.* ***சிறு சிறு வேலை.*** 'கை வேலைக்கு ஒரு சிட்டாளு இருந்தாப் பரவாயில்ல.'

## கொ

**கொக்கணம்** - *பெ.* ***தாய விளையாட்டில் கட்டையை உருட்டும்போது ஒன்றும் விழாமல் இரண்டும் மொட்டையாக இருப்பது (இதனைச் சிலர் 12 என்றும் கொள்வர்).*** 'கொக்கணமாவே விழுது. நீ எடுத்தாடு.'

**கொக்கரை** - பெ. **எதையும் பிறருக்குக் கொடுக்கக் கை வராமை (கஞ்சத் தனம்).** 'வாய் சக்கரை கை கொக்கரை.' (பழமொழி)

**கொக்காணி** - பெ. **(சிறுவர்கள்) ஆள்காட்டி விரலை மடக்கிக் கொண்டு கீழுதட்டை மடித்து ஒலியெழுப்பிப் பிறரைப் பழித்துக் காட்டுதல்.** 'அப்ப இருந்து எனக்குக் கொக்காணி காட்டிக்கிட்டே இருக்கறான்.'

**கொக்கிச்சல்லை** - பெ. **மரங்களிலுள்ள காய்கள், தழைகள் முதலியவற்றைப் பறிப்பதற்காக உள்ள நீண்ட மூங்கிலில் வளைந்த கொக்கி பொருத்தப்பட்டது.** 'கொக்கிச்சல்ல இருந்தா எடுத்தா, நாலு தழ ஒடிச்சுப் போடலாம்.'



கொக்கிச்சல்லை

**கொக்கி போடுதல்** - வி. **தானியக் கதிர் முதிர்ந்து வளைதல்.** 'கொக்கி போட்டிருச்சு. அறுத்தர வேண்டீதுதான்.'

**கொக்கி முள்** - பெ. **கொக்கி போல முள்ளுடைய காய் காய்க்கும் செடி.** 'கொக்கி முள்ளு துணியில குத்திக்கிரிச்சி'.

**கொங்கங்காளை** - பெ. **காங்கேயங் காளை.** 'ரண்டு கொங்கங்காளை வாங்கோனும்.'

**கொங்கடை** - பெ. **மழையில் நனையாமல் இருக்கும் வகையில் மடித்துத் தலையில் மாட்டிக் கொள்ளும் கோணி.** 'மழையில நனஞ்சராத கொங்கட போட்டுக்கிட்டுப் போ.'



கொங்கடை

**கொங்க மழை** - பெ. **மிகக் குறைந்த நேரத்தில் பெய்து நின்றுவிடும் பலத்த மழை.** 'பேஞ்சாக் கொங்க மழையாட்டம் பேயோனும்.'

**கொங்காயன்** - பெ. **வெகுளி.** 'அவன் சுத்தக் கொங்காயன்.'

**கொங்கினி முடிச்சு** - பெ. **ஒரு வகைக் கொண்டை.** 'கொங்கினி முடிச்சுப் போட்டுக்கிட்டுப் போறா.'

**கொங்கூடை** - **காண்க: கொங்கடை**

**கொசக்கட்டு** - பெ. **வேலை செய்யும்போது குயவர்கள் ஒரு பக்கம் முழங்கால்வரை விட்டு இன்னொரு கால் சற்று மேலே இருக்கும் வகையில் வேட்டியை மடித்துப் பின் பக்கம் சொருகிக் கொள்ளும் கட்டு.** 'வேட்டியக் கொசக்கட்டுக் கட்டிக்கிட்டாம் பாரு.

**கொசவனோடு** - **காண்க: கையோடு.**

**கொட்டக்காய்** - பெ. **ஆமணக்குக் காய்.** 'கொட்டாக்கா ஒடிச்சாச்சா.'

**கொட்டக்காய்ப் பலகை** - பெ. **ஆமணக்குக் காய்கள் காய்ந்ததும் அடித்துத் தோல் நீக்க முன்பக்கம் தட்டையாகவும் பின்பக்கம் • கைப்பிடிக்கும் அளவில் உருண்டையாகவும் இருக்கும் பலகை.**

'கொட்டாக்காய் பலவ இருந்தாக் குடு. அடிச்சுட்டுத் தாரேன்.'

**கொட்டக்கோல்** - *பெ.* ***காய்ந்த ஆமணக்குத் தண்டு.*** 'கொட்டக்கோல ஒடிச்சு வெய்யி. அடுப்பு எரியட்டும்.'

**கொட்டச்சருகு** - *பெ.* ***காய்ந்த ஆமணக்கு இலை.*** 'கொட்டச் சருவு பொறுக்கி வெச்சாலாச்சும் வெள்ளாட்டுக்காவும்.'

**கொட்டத் தண்டு** - *பெ.* ***ஆமணக்குச் செடியின் தண்டுப்பகுதி.*** 'கொட்டத் தண்டுதான் நிக்குது. காயக் காணாம்.'

**கொட்டப்பல்** - *பெ.* ***குழந்தைகளுக்கு முதலில் முளைக்கும் பால் பல்.*** 'கொட்டப்பல்லு வந்திருச்சா. கண்டதயும் எடுத்து வாயில வெக்குமே.'

**கொட்டப்புழு** - ***காண்க:*** **ஏணிப்புழு.**

**கொட்டப் பொச்சு மாடு** - *பெ.* ***சரியாக மேயாமல் இளைத்துக் கிடக்கும் மாடு.*** 'இந்தக் கொட்டப்பொச்சு மாட்ட வெச்சுக்கிட்டு எதுக்கு அழுவுற. வித்துப்புடு.

**கொட்டம்** - *பெ.* ***1. மாடுகளுக்கு மருந்து ஊற்றப் பயன்படும் மூங்கில் குழாய்.*** 'கொட்டத்துல ஊத்துனா குடிச்சுரும்.' ***2. குழந்தைகள் சேர்ந்து சத்தம் போட்டு விளையாடுதல்.*** 'அடேங்கப்பா... எல்லாஞ் சேந்துக் கிட்டுக் கொட்டமடிக்குதுங்க.'



கொட்டம்

**கொட்டமுத்து** - *பெ.* ***ஆமணக்கு விதை.*** 'கொட்டமுத்துப் பொறுக்கி ஒருமூட்ட சேத்துட்டா.'

**கொட்டமுத்து எண்ணெய்** - *பெ.* ***விளக்கெண்ணெய்.*** 'கொட்டமுத்து எண்ணெ ஆட்டியாரக் கொண்டோரன்.'

**கொட்டலா** - *பெ.* ***புளியைக் கொட்டி உள்ளிருக்கும் கொட்டையை நீக்க உதவும் மரப்பிடியும் இரும்புச் சிறு உருளையும் கொண்ட கருவி.*** 'கொட்டலா இருந்தாக் குடு. புளி, கொட்ட வாங்கீட்டுத் தர்ரேன்.'

**கொட்ட வாங்குதல்** - *வி.* ***புளியைக் கொட்டி உள்ளிருக்கும் விதையை நீக்குதல்.*** 'புளி கொட்ட வாங்கியாச்சா.'

**கொட்டாப்புடி** - *பெ.* ***முளை அடிப்பதற்காக வைத்திருக்கும் முன்பக்கம் உருளையும் பின்பக்கம் கைப்பிடியும் கொண்ட மரத்தாலான கருவி.*** 'கொட்டாப் புடியில அடி. சீக்கிரம் எறங்கும்.'

**கொட்டாப்புளி** - ***காண்க:*** **கொட்டாப்புடி.**

**கொட்டாய்** - *பெ.* ***கொட்டகை; ஓலை வேயப்பட்ட வீடு.*** 'எங்க வீடு சின்னக் கொட்டாய்தான்.'

**கொட்டான்** - *பெ.* ***வெற்றிலை பாக்கு இடிக்கும் பாத்திரம்.*** 'கொட்டான எங்க வச்சனோ தெரீல.'

**கொட்டு** - ***காண்க:*** **குருட்டுப் பருத்தி.**

**கொட்டுமொழக்கு** - *பெ.* **மேளதாளம்.** 'கொட்டு மொழக்குச் சத்தம் கேக்குது.'

**கொட்டேர்** - *பெ.* ***வீட்டுக்கு எடுத்துச்செல்லும்போது சாய்த்துக்கட்டி மாடுகள் இழுத்துக் கொண்டு போகும் ஏர்.*** 'கொட்டேர் கட்டி எடுத்தா.'

**கொடங்கு** - *பெ.* ***கிணற்றுக்குள் இருக்கும் பொந்து.*** 'அந்தப் பக்கம் கொடங்கிருக்கிது. போவாத.'

**கொடம்பை** - *பெ.* ***துவரங்கோல்களால் பின்னி ஓலை வேயப்பட்ட குறுகிய வாயிலை உடைய (குச்சுவீடு போன்ற அமைப்புடைய்) சிறு தீவன வகைகள் போட்டு வைத்துக்கொள்ளும் அமைப்பு.*** 'கொடம்பையில தெவரம் பொட்டுப் போட்டிருக்குது. அள்ளியா.'

**கொடல்சாறு** - *பெ.* ***ஆட்டுக்குடல் கறியில் வைக்கும் குழம்பு.*** 'கொடல்சாறு கொஞ்சம் ஊத்திக்க.'

**கொடவேலமுள்** - *பெ.* ***குடைவேலமுள். சீமைக்கருவேலமுள்.*** 'கொடவேலமுள் ஏறிரப் போவுது.'

**கொடாப்பு** - *பெ.* ***ஆட்டுக்குட்டிகளை அடைக்கும் சிறுபட்டி.*** 'குட்டியக் கொடாப்புல உட்டுரு. ஆட்டோட வந்தரப் போவுது.'



கொடாப்பு

**கொடி** - *பெ.* ***1. தாலிக்கொடி.*** 'கலியாணத்துக்கு மாப்பிள்ள வீடு கொடிப் பண்ணிப் போட்டறாங்க.' ***2. காளை, கிடா போன்றவற்றின் ஆண்குறி.*** 'கொடி உள்ள போறாப்புல மாடு நின்னால்ல ஆவும்.'

**கொடுக்குச் செடி** - *பெ.* ***கொடுக்குப் போல வளைந்த இரு முட்கள் கொண்ட காயுடைய செடி.*** 'கொடுக்குச் செடி இருக்குது பாத்துப் போ.'

**கொடுங்கோல்** - *பெ.* ***வைக்கோல் உதறவிட இழுக்கும் வகையில் நுனியில் கொக்கி போன்றமைந்த கம்பு.*** 'கொடுங்கோல எடுத்தா. வக்கிப்பில்ல இழுத்து உடலாம்.'

**கொடும்பு** - *பெ.* ***செடியைச் சுற்றி அடைக்கும் கூண்டு.*** 'செடிய ஆடு கடிச்சிரப் போவுது. ஒரு கொடும்பு அடச்சி உடு.'



கொடும்பு

**கொடுவாள்** - *பெ.* ***வெட்டும் அரிவாள்.*** 'கொடுவாள்ல வெட்டறதுதானே சீக்கிரம் ஆவுமே.'

**கொண்டயம்** - *பெ.* ***போர், வீட்டுக்கூரை, மரம் போன்றவற்றின் உச்சி.*** 'கொண்டயம் மேயோனும்' 'கொண்டயத்துல ஏறிக்கிட்டான்.'

**கொடிக்காய்** - *பெ.* ***நிலக்கடலையில் ஒருவகை; கொடியாக அகன்று படரும் நிலக்கடலைப் பயிர்.*** 'ஒரு மாசத்துக்கு மழ இல்லீனாலும் கொடிக்காய்னா தாங்கும்.'

**கொடிக்குத்து** - *பெ.* ***நிலக்கடலையில் ஒருவகை; ஓரளவுக்கு அகன்று படர்ந்து செடி போல மேல் நோக்கி வளரும் நிலக்கடலைப் பயிர்.*** 'அந்தக்காட்ல போட்டிருக்கறது கொடிக்குத்தாட்டம் இருக்குது.'

**கொண்டி** - *பெ.* ***வாசற்காலில் கதவு மாட்டுவதற்காக மேலும் கீழும் அடிக்கப்படும் இரும்புக் கம்பி.*** 'கொண்டி கழண்டுக்கப் போவுது.'

**கொணை** - *பெ.அ.* ***நுனிப்பகுதி.*** 'கொணத் துணியக்கிழி.'

**கொத்துக்காரன்** - *பெ.* ***வேலைக்கு அழைத்து வரும் ஆட்களுக்குப் பொறுப்பானவன்.*** 'நீதான் கொத்துக்காரனா, சொன்னா கேக்கறதுக்கு?'

**கொத்துக்காரி** - *பெ.* ***வேலைக்கு அழைத்துவரும் ஆட்களுக்குப் பொறுப்பான பெண்.*** 'கொத்துக்காரிகிட்டக் கேட்டுக்கோ.'

**கொதவல்** - *பெ.* ***1. சொட்டை.*** 'காட்டக் கொதவல் இல்லாத நடவு நடு.' ***2. பாக்கி; மீதி.*** 'தம்பி... கொதவல் இல்லாத படிச்சிட்டயா.'

**கொதவு** - *பெ.* ***நிலத்தை அடகு வைத்தல்.*** 'காடு கொதவுல இருக்குது.'

**கொந்தாளம்** - *பெ.* ***ஆழமாகப் பறிக்கப் பயன்படும் (கோடாலி போன்ற) கருவி.*** 'கொந்தாளத்த எடுத்துத் தோண்டு.'

**கொந்து** - *வி.* ***புண் நொதித்துச் சீழ் வடிதல்.*** 'முந்தியே பாக்கறதில்ல, புண்ணுக் கொந்திப் போச்சு.'

**கொப்பத்து வெல்லம்** - *பெ.* ***உருண்டையான வெல்லம்.*** 'கொப்பத்து வெல்லம் போட்டு ஒப்புட்டுச் சுடோனும்.'

**கொப்பு** - *பெ.* ***1. வயல்களுக்குள் செல்லும் சிறிய வாய்க்கால்.*** 'அந்தக் கொப்பச் சீவி உடு.' ***2. காதின் மேல் பகுதியில் அணியும் காதணி.*** 'கொப்பக்கூட கழட்டி வித்துப்புட்டாங்க.' ***3. கதவில் வைக்கப்படும் குமிழ்.*** 'கொப்பு வெச்ச கதவு இப்பல்லாம் ஏது.' ***4. மாடுகளின் கொம்பு நுனியில் பொருத்தப்படும் அணிகலன்.*** 'மாட்டுக்குக் கொப்பச் செரியாப் போடு.'

**கொம்புக்கட்டி** - *பெ.* ***மாடுகளின் இரண்டு கொம்புகளையும் சுற்றிவருவது போல் போடும் கயிறு.*** 'கொம்புக் கட்டி மாத்தோனும்.'

**கொம்புக் கவுறு** - ***கொம்புக் கயிறு. காண்க:*** கொம்புக்கட்டி.



கொம்புக் கயிறு

**கொம்புச்சீர்** - *பெ.* ***அழகான கொம்புடைய மாடு.*** 'அந்தக் கொம்புச் சீர்தான் கட்டுத்தரைக்கே அழகு.'

**கொம்மை** - *பெ.* ***1. தானியம் நீக்கப்பட்ட கம்மங்கதிர்.*** 'கொம்மையக் கொண்டோயிக் கொட்டு.' ***2. சேலையில் இருக்கும் விளிம்புச் சித்திரம்.*** 'இந்தச் சேலைக்குக் கொம்ம நல்லா இருக்குது.'

**கொயக்கன்** - *பெ.* ***வலிமை இல்லாதவன்.*** 'அந்தக் கொயக்கனப் . போயி வேலக்கிக் கூப்பட்டீங்களா'

**கொருப்பு** - *பெ.* ***நெருப்புத் துண்டம்.*** 'அடுப்புல கொருப்புக் கெடக்குது. ஊதுனாப் புடுச்சுக்கும்.'

**கொல** - *பெ.* ***வயிறு.*** 'கொழந்தைக்கிக் கொல காயுது.'

**கொழா** - *பெ.* ***ஆடு, மாடுகளின் பெண்குறியில் வடியும் ஒருவிதக் கெட்டியான (பசை போன்ற) நீர்.*** 'ஆடு கொழா அடிச்சுக்கிட்டுக் கெடக்குது.'

**கொழி** - *வி.* ***1. கையால் மணல் போன்றவற்றைச் சலித்தல்.*** 'கொழிச்சு எடுத்துரு. தூள் மணலா வரும்.' ***2. அரிசியிலிருந்த குறுணையைப்***

பிரித்தெடுத்தல். 'கொழிச்செடுத்தா குறுண அரப்படி ஆவும்.'

**கொழிமாங்கல்** - பெ. **உடைத்துச் சலிக்கும் அளவு மாவுத் தன்மை கொண்ட கல்.** 'கொழி மாங்கல்லாப் பாத்து எடுத்தா.'

**கொழுக்கட்டைப் புல்** - பெ. **ஒரு வகைப் புல்.** 'கொழக்கட்டைப் புல்லு நெறைய வளர்ந்திருக்குது.'

**கொழுந்தனார்** - பெ. **கணவரின் தம்பி.** 'உங்க கொழுந்தனாரு இருக்கறாரா.'

**கொழுந்தியாள்** - பெ. **மனைவியின் தங்கை.** 'கொழுந்தியா இருக்கற :ஊடாப் பாத்துக் கலியாணம் பண்ணோனும்.'

**கொள்ளுப் பட்டாசு** - பெ. **தனித்தனியாக சிறுபொட்டுப்போல இருக்கும், குழந்தைகள் வெடிக்கும் பட்டாசு (Cap).** 'கொழந்தைங்களுக்கு கொள்ளுப்பட்டாசு வங்கிக் குடுத்தாப் போதும்.'

**கொள்ளுப்புடி** - பெ. **கொள்ளால் செய்யப்பட்ட (உணவில் கலந்து உண்ணும்) பொருள்.** 'கொஞ்சம் கொள்ளுப்புடி போடு.'

**கொளச்சி** - பெ. **மண்வெட்டியின் மரக்காம்பைச் சுற்றியுள்ள இரும்புப்பூண்.** 'மமட்டிக் கொளச்சி பெரிசா இருக்குது.'



கொளச்சி

**கொளுஞ்சி** - பெ. **(நெல் வயல்களுக்கு உரமாகும்) களைச் செடி.** 'கொளுஞ்சி ஒரு கத்தையாவுமாட்டம் கெடக்குது.'

**கொளுஞ்சித்தும்பி** - பெ. **கொளுஞ்சி என்னும் களையில் இருக்கும் (பொன் வண்டு போன்ற) சிவப்பு நிறத்தில் கறுப்புப் புள்ளிகளை உடைய சிறு வண்டு.** 'கொளுஞ்சித் தும்பி பறக்குது பாரு.'

**கொளுவு** - பெ. **கலப்பையில் நிலத்தைப் பிளந்து செல்லும் இரும்பாலான பட்டை.** 'கலப்பக் கொளுவுல இருக்கற மண்ணத் தள்ளிவுடுடா.'

**கொறக்குளி** - பெ. **நீட்ட முடியாமல் மடக்கிய நிலையிலேயே வைத்திருக்கும்படி விரலில் ஏற்படும் பிடிப்பு.** 'கொறக்குளி புடுச்சுக்கிச்சு. நீட்டவே முடியல.'

**கொறக்கூடை** - பெ. **(தானியம் போன்றவை அள்ளுவதற்கான) அளவான கூடை.** 'கொறக்கூடையில கம்பு அள்ளிக்கிட்டுவா.'

**கொறங்காடு** - பெ. **பயிர் செய்யாமல் போட்டு இறுகிப் போன (மேய்ச்சலுக்கு உதவும்) நிலம்.** 'கொறங்காட்டுல பில்லு நெறையாக் கெடக்குது.'

**கொறாத்துக் கிடு(தல்)** - வி. **கோழி, ஆடு போன்றவை மேயாமல் (நோயால்) குறுகி ஒருபுறமாக நிற்றல்:**'. 'கோழி ஏனோ கொறத்துக்கிடுச்சு. என்னன்னு பாரு.'

**கொறை** - பெ. **தகராறின் காரணமாகப் பயன்படுத்தாமல் போட்டு வைத்திருக்கும் நிலம்.** 'அந்தக் கொறை ஆருது?'

**கொறைசேறு** - பெ. **முதல் நாள் நடவு முடிந்தபின் அடுத்த முழுநாள் நடவுக்குப் போதாத அளவு சேற்றுப் பகுதி உள்ள வயல்.** 'இன்னிக்கிக் கொஞ்ச நேரத்துல ஆயிடும். கொறசேறுதான.'

**கொறை ஒழவு** - பெ. **உழாமல் கெட்டித்துப் போன நிலத்தில் செய்யும் உழவு.** 'கொறை ஒழவு போட்டு வெச்சிருக்கறம்.'

**கொறைக்கடை** - *காண்க:* **கொறக்குளி.**

**கொன்னவாக் குருவி** - *பெ.* ***வாயின் ஓரம் லேசாக வெளுத்திருக்கும் ஒரு வகைக் குருவி.*** 'கொன்னவாக் குருவீங்க போடற சத்தம் காதடைக்குது.'

**கொன்னவாய்** - *பெ.* ***திக்குவாய்.*** 'அவனுக்குக் கொஞ்சம் கொன்ன வாய்.'

**கொன** - *பெ.* ***நுனி.*** 'கொன நல்ல கூரா இருக்குது'

**கொனை(த்தல்)** - *வி.* ***உற்சாகத்தில் துள்ளுதல்.*** 'எல்லாக் கொக்கும் கொனக்குதுன்னு குருட்டுக் கொக்கும் கொனச்சுதாம்.' (பழமொழி)

## கோ

**கோக்காலிப் பலகை** - *பெ.* ***சுவரில் சிறிது உயரத்தில் பொருட்கள் வைப்பதற்காகப் பொருத்தப்படும் பலகை.*** 'போவுனிய கோக்காலிப் பலவ மேல கமுத்து.'



கோக்காலிப் பலகை

**கோசக்காய்** - *பெ.* ***தர்ப்பூசணிக்காய்.*** 'வெய்யிலுக்குக் கோசக்கா நல்லது.'

**கோட்டை** - *பெ.* ***கள், பதநீர் ஆகியவற்றை ஊற்றிக் குடிக்கும் வகையில் பனை ஓலையில் செய்யப்பட்ட பொருள்.*** 'மரத்தடியில் கோட்ட கெடக்கும் எடுத்தா.'



கோட்டை

**கோட்டேர்** - *காண்க:* **கொட்டேர்.**

**கோடாலிக் கொண்டை** - *பெ.* ***ஒருபுறமாகச் சாய்த்துப்போட்டுக் கொள்ளும் கொண்டை.*** 'கோடாலிக் கொண்ட போட்டுக்கிட்டுப் போறா பாரு.'

**கோடித்துணி** - *பெ.* ***புதுத்துணி.*** 'கோடித்துணிய நனைக்காத கட்டக் கூடாதுடா.'

**கோடி** - *பெ.* ***இறந்தவர்களுக்கு அவரது உறவினர்கள் எடுத்துக் கொண்டு வந்து போடும் புதுத்துணி.*** 'எங்க பாட்டஞ்செத்தப்ப பதினஞ்சு கோடி வந்துச்சு.'

**கோடு** - *பெ.* 1. ***கற்களைக் கூட்டிப் பிரித்து எண்ணிப் பார்க்கும் ஒரு வகை ஜோசியம்.*** 'அந்தண்ணன் கோடு பாத்துச் சொல்லுவாரு.' 2. ***கடைசி.*** 'அந்தக் கோட்டுல நிக்கறாம் பாரு.'

**கோத்துப் போடு(தல்)** - *வி.* ***கறியை நூலில் கோர்த்துக் காய வைத்தல்.*** 'கறிய கோத்துப் போட்டுக்கிட்டுத் திங்கறான்டா.'

**கோதானம்** - *பெ.* **மாட்டு வண்டியில் குப்பை முதலியவை கொண்டு செல்ல ஏற்ற வகையில் கூடை போலப் பின்னப்பட்ட (நீண்ட அரை உருளை வடிவிலான) சாதனம்.** 'கோதானத்த வண்டில போடு. மண்ணள்ளப் போவோனும்.'



கோதானம்

**கோது**[1] - *வி.* **சீவு.** 'வாய்க்கால கோதி உடு.'

**கோது**[2] - *பெ.* **புளியில் இருக்கும் நார்ப்பகுதி.** 'புளில இன்னம் கோது எடுக்கலியா?'

**கோதும்பி** - *பெ.* **கடித்தால் மனிதர் இறந்துவிடுமளவு மிகுந்த விஷம்கொண்ட பின்பக்கம் மஞ்சள் நிறமுடைய கருவண்டு.** 'கோதும்பி கடிச்சா செத்தே போயிருவாங்க.'

**கோதும்பிச்சரம்** - *பெ.* **கழுத்தில் அணியும் அணிகலன்.** 'அந்தக் கோதும்பிச்சரம் புதுசா.'

**கோந்தாளை** - *பெ.* **நுனிக்கரும்பு.** 'கோந்தாளய வெட்டி எறிஞ்சிடு.'

**கோபுரப் பூடு** - *பெ.* **சிறு கோபுரம் போன்ற வடிவுடைய பூண்டு.** 'கோபுரப்பூட்ட வெட்டி எறி.'

**கோம்பு** - *பெ.* **சுரை, பூசணி முதலிய காய்களின் காம்பு.** 'சொரக்காய்க்குக் கோம்ப அரிஞ்சு வெச்சிரு. அப்பத்தான் முத்தாது.'

**கோம்பை** - *பெ.* **மாட்டு மல்.** 'கொஞ்சம் கோம்பை புடிச்சாந்து தொளிக்கோனும்.'

**கோம்பைச் சுவர்** - *பெ.* **வீட்டின் அகலப் பகுதியில் முக்கோண வடிவில் வைக்கும் சுவர்.** 'கோம்பச் செவுத்துக்குச் சுண்ணாம்பு பூசு.'

**கோம்பை நாய்** - *பெ.* **உயரமான கால்கள் உடைய ஒருவகை நாய்.** 'கோம்ப நாய் எங்கூட்ல இருக்குது.'

**கோயக்கீரை** - *பெ.* **கீரை வகைகளில் ஒன்று.** 'கோயக்கீரை பொறிச்சாந்திருக்கறான்.'

**கோயிலில் விழு(தல்)** - *வி.* **திருட்டுப் போன பொருளுக்காகவோ பிற காரணங்களுக்காகவோ கோயில் வாசலில் விழுந்து முறையீடு செய்தல் (சம்பந்தப்பட்டவர்களைத் தெய்வம் கொன்றுவிடும் என்று நம்பிக்கை).** 'அவ போயி கோயில்ல உழுந்திட்டா.'

**கோரி** - *பெ.* **மூடுபனி, மேகமூட்டம்.** 'இன்னிக்கி ஒரே கோரியா இருக்குது.'

**கோரை** - *பெ.* **சிறு கிழங்கு இருக்கும் ஒருவகைப் புல்.** 'கோரை ஏறிப் போச்சு.'

**கோரைக்கிழங்கு** - *பெ.* **கோரைப் புல்லில் காணப்படும் சிறு கிழங்கு.** 'கோரைக் கிழங்கு புடுங்குனாத் திங்கலாம்.'

**கோவாழை** - *பெ.* **நீர்ப் பகுதியில் வளரும் (ஆகாயத் தாமரை போன்ற) களைத் தாவரம்.** 'கோவாழ நெறஞ்சி கெடக்குது.'

**கோளாறு** - *பெ.* **ஒரு செயலை எளிமையாகச் செய்யும் வழி.** 'எதாச்சும் நல்ல கோளாறாச் சொல்லு.'

**கோழிக்கூண்டு** - *பெ.* **ஓலை வேயப்பட்ட (குடிசை போன்ற) கோழி அடையும் கூண்டு.** 'கோழிக்கூண்டுல பீ சேந்து போச்சு. கூட்டோனும்.'

**கோழை** - *பெ.* **1. பிறந்த குட்டி, கன்றுகளின் மேலிருக்கும் பசை போன்ற பொருள்.** 'கோழய நக்கினாத்தான குட்டி எந்திரிக்கும்.' **2. கரும்புப் பாகு காய்ச்சுகையில் மேல் மிதக்கும் கழிவுப் பொருள்.** 'கோழய அள்ளி எறி.'

**கோனக்கிளி** - *பெ.* **குழந்தைகள் சிணுங்கலோடு கொள்ளும் கோபம்.** 'அவன் கோனக்கிளி போட்டுக்கிட்டான்.'

**கோனப்புளிய மரம்** - *பெ.* **கொடுக்காப்புளி எனப்படும் மரம்.** 'கோனப்புளிய மரத்துல காய் நெறைய இருக்குது.'

**கோனவாக்கு** - *பெ.* **தலையின் பக்கவாட்டில் எடுக்கும் வகிடு.** 'கோனவாக்கு எடுத்துத் தல சீவு.'

**கோனா** - *பெ.* **எருமைக்கிடா.** 'எருமக்கிக் கோனா சேத்திக்கிட்டுவா.'

**கோனை** - *பெ.* **வளைவு.** 'தடம் நேராவே இல்ல. கோன கோனயாப் போவுது.'

## ச

**சக்கு** - *பெ.* **வண்டிச் சக்கரத்திற்கும் அச்சுக்கும் இடையில் இருக்கும் 'வாசர்' போன்ற பொருள்.** 'சக்குத் தேஞ்சு போச்சு. மாத்தோனும்.'



சக்கு

**சக்வாரெட்டு** - *பெ.* **சிக்கலான சூழல்.** 'ஊட்டுல ஒரே சக்வாரெட்டா இருக்குது.'

**சங்கட்டம்** - *பெ.* **நோய் முற்றி உயிர் போகும் நிலையில் இருத்தல்.** 'அவுங்கப்பன் சங்கட்டமாக் கெடக்கறாரு. போய்ப் பாக்கப் போறம்.'

**சங்கடை** - *பெ.* **குழந்தைக்குப் பால் வார்க்கும் சங்கு போன்ற பாத்திரம்.** 'பிள்ளக்கி ரண்டு சங்கட பாலு எச்சா ஊத்து.'



சங்கடை

**சங்கமுள்** - *பெ.* **புதர்ச்செடியாக வேலிகளில் இருக்கும் முள் செடி.** 'சங்கமுள்ளு கையில குத்தீருச்சு.'

**சங்காயம்** - *பெ.* **நெல் தூற்றுகையில் சிறிதளவு நல்ல நெல்லும் கூளமும் கலந்து விழும் பாளை (கருக்காய்).** 'இதென்ன சங்காயம் இவ்வளவு சேந்திருக்குது.'

**சங்கிலி** - *பெ.* **கதவை நாதாங்கியில் மாட்ட உதவும் இரும்பு வளையம்.** 'கதவச் சங்கிலி போட்டயா பாரு.'

**சங்கு(தல்)** - *வி.* **வேலை செய்து களைத்தல்.** 'நாள் முழுசுனாலும் சங்காத வேல செய்வான்.' 'ஆள் சங்கீட்டான்.'

**சட்டமாடு** - *பெ.* **இரண்டு மூன்று நிறங்கள் கலந்திருக்கும் மாடு.** 'சட்டமாட்டப் புடிச்சுக் கட்டு.'

**சட்டு** - *பெ.* **கிணறு வெட்டும்போது நீர் இருப்பதை உறுதிப்படுத்தக் கிடைக்கும் மண்.** 'சட்டுக் கெடச்சிருச்சு. இன்னமே தண்ணி வந்திரும்.'

**சட்டை** - *பெ.* **காய்ந்த மஞ்சளின் நூறு கிலோ அளவு.** 'தோட்டத்துல மஞ்சள் நூறு சட்டையாச்சு.'

**சடவு** - *பெ.* **சலிப்பாக இருத்தல் (போர் அடித்தல்).** 'என்னமோ ஒரே சடவா இருக்குது, எங்காச்சும் போலாமா.'

**சடி(தல்)** - *வி.* ***மரத்தில் காய்கள் ஒன்றன் மேல் ஒன்றாகக் குலை குலையாகச் சரிந்து கிடத்தல்.*** 'அந்த மரத்துல நொங்கு சடிஞ்சு கெடக்குது.'

**சண்டிவலி** - *பெ.* ***தொடங்கியது முதல் சிறிதாக இருந்து கொண்டேயிருக்கும் பிரசவ வலி.*** 'இப்பத்தான் சண்டிவலி கண்டிருக்குது. கொழந்த பொறக்க இன்னம் நேரமாவும்.'

**சத்துமானம்** - *பெ.* ***சக்தி; பலம்.*** 'ஒடம்புல சத்துமானம் கொறச்சலா இருக்குது.'

**சந்தவக்கட்டை** - *பெ.* ***இடியாப்பம் (சந்தவம்) பிழியும் எந்திரத்தின் மேல் பகுதிக் கட்டை.*** 'சந்தவக் கட்டைய நல்லா அழுத்து.'

**சந்தவம்** - *பெ.* ***இடியாப்பம்; வேக வைத்த அரிசி மாவு உருண்டையை எந்திரத்தில் போட்டுப் பிழிந்தெடுக்கும் உணவுப் பொருள்.*** 'சந்தவம் நெரிக்கிறவ சமுத்தாளி.' (பழமொழி)

**சந்தவ மரம்** - *பெ.* ***இடியாப்பம் (சந்தவம்) பிழியும் எந்திரம்.*** 'சந்தவ மரம் ஊங்கூட்ல இருக்குதா.'

**சந்துப்பல்** - *பெ.* ***பற்களுக்கு இடையே இடைவெளி கொண்ட பல்வரிசை.*** 'மாப்பிள்ளைக்கு ஒரே சந்துப்பல்லா இருக்குது.'

**சந்துப்பல்லன்** - *பெ.* ***பற்களுக்கு இடையே இடைவெளி உடைய பல்வரிசையைக் கொண்டவன்.*** 'அந்தச் சந்துப்பல்லனோட எப்பப்பாரு ஒரே சண்டைதான்.'

**சந்துப்பல்லி** - *பெ.* ***நிறைய இடைவெளியைக் கொண்ட பல்வரிசையை உடையவள்.*** 'அந்தச் சந்துப்பல்லிதான் குசலம் வெச்சிருப்பா.'

**சப்பட்டை** - *பெ.* ***தட்டை வடிவம்.*** 'கல்லு சப்பட்டையா இருந்தா உட்காரலாம்.'

**சப்பா** - *பெ.* ***குறிகள் பொறித்துக் காவலுக்காக வைக்கப்படும் பலகை.*** 'சப்பாவ எங்க வெச்சிருக்கற கண்ணுக்கே தெரீலே.'

**சப்பாப் பலகை** - ***காண்க: சப்பா.***

**சப்பை** - *பெ.* *1.* ***தட்டை வடிவம்.*** 'நல்ல சப்பயாப் பாத்துக் கல்லெடுத்தா.' *2.* ***தொடைப் பகுதி.*** 'பாட்டிக்குக் கீழ உழுந்து சப்ப நமுவீருச்சு.'

**சப்பைக்கல்** - *பெ.* ***தட்டை வடிவிலான கல்.*** 'நல்லா சப்பக் கல்லா எடுத்துப் போடு உக்கோரலாம்.'

**சப்பைக்கறி** - *பெ.* ***தொடைக்கறி. (வேண்டுதலுக்காகச் சாமிக்கு வெட்டும் கிடாக்கறியில் தொடைக்கறியை மறுநாளுக்காக எடுத்து வைப்பர்).*** 'கொஞ்சம் சப்பக்கறி எடுத்து வெச்சிருக்கறன்.'

**சம்படம்** - *பெ.* ***குழாய் வடிவிலான மூடியுடன் கூடிய பாத்திரம்.*** 'சம்படம் அங்க இருக்குதா பாரேன்.'



சந்தவ மரம்



சம்படம்

**சம்பல்** - *பெ.* ***சகாயம்; விலைக்குறைவு.*** 'இந்த வாரம் சந்தையில வெங்காயம் சம்பலா வித்துது.'

**சம்பு** - *பெ.* ***நீர் ஓடும் பகுதியில் வளரும் ஒரு வகைக் கோரைப்புல் (வீடு வேய்வதற்குப் பயன்படும்).*** 'சம்பு அறுத்துப் போட்டாக் காயும். ஊட்டுமேல போடலாம்.'

**சம்மணங்கால்** - *பெ.* ***கால்களை மடித்து ஒன்றுக்குள் ஒன்றைச் செருகி உட்காரும் நிலை; அட்டணங்கால்.*** 'சம்மணங்கால் போடறதுக்கு கால் மடிய மாட்டீங்குது.'

**சம்மணம்** - **காண்க: சம்மணங்கால்.**

**சமுத்தாளி** - *பெ.* ***பலமுள்ளவள்/ன்.*** 'சத்துவ நெரிக்கறவ சமுதாளி' - பழமொழி.

**சமுத்து** - *பெ.* ***பலம்.*** 'வேல செய்யறதுக்குச் சமுத்து வேணுமில்ல. நல்லாச் சாப்புடு.'

**சயனம்** - *பெ.* ***சகுனம்.*** 'கலியாணக் காரியத்துக்குப் போறவுங்க சயனம் பாக்காத போலாமா.'

**சரடு** - *பெ.* ***பதக்கம் வைத்துக் கழுத்தோடு ஒட்டியிருக்கும்படி பெண்கள் அணியும் நகை.*** 'அந்தப் பாட்டி இன்னஞ் சரடு போட்டிருக்குது.'

**சரம்** - *பெ.* ***தொண்டையின் உட்பகுதி.*** 'சரமெல்லாம் ஒனந்துபோச்சு.'

**சரல்** - *பெ.* ***பாகற்கொடி முதலிய கொடி வகைகள் படருவதற்காக நடப்படும் (முட்கள், கணுகள் உள்ள) கோல்.*** 'பாகச் செடிக்குச் சரல் நடு.'

**சரளை** - *பெ.* ***சல்லிக் கற்கள் நிறைந்திருக்கும் நிலம்.*** 'அந்த நிலம் சரள, ஆரு ஓட்டுவா.'

**சரளைக்கல்** - *பெ.* ***விரைவில் உடையாத சிறுகல்.*** 'அந்தக் காட்டுல சரளக்கல்லா கெடக்குது.'

**சருவச்சட்டி** - **காண்க: அரிக்கஞ்சட்டி.**

**சரவடை** - *பெ.* ***சார்பு.*** 'மூஞ்சியப் பாத்தா அவுங்க சரவடையாத்தான் தெரியுது.'

**சருவம்** - *பெ.* ***பொங்கல் வைப்பதற்கான பித்தளைப் பானை.*** 'சருவத்துல பொங்க வெச்சா நல்லாப் பொங்கும்.'

**சல்லை** - *பெ.* ***கத்தி அல்லது கொக்கி கட்டிய தழை ஒடிக்கப் பயன்படும் பெரிய மூங்கில் அல்லது தடி.*** 'சல்லய எடுத்தா ஆட்டுக்குத் தழ ஒடிச்சுப் போடலாம்.' *2.* ***கரும்புத் தட்டை.*** 'நாலு சல்ல கரும்பு வாங்கியா.' *3.* ***தொந்தரவு.*** 'இதோட சல்ல தாங்க முடியில.'

**சல்லக்கத்தி** - *பெ.* ***ஆடுகளுக்கு இலை, தழை ஒடித்துப்போடும் மூங்கில் (அல்லது கோலில்) கட்டப்பட்டிருக்கும் கத்தி.*** 'சல்லக்கத்திய கம்பிபோட்டு நல்லாக் கட்டு.'

**சல்லக்கொக்கி** - *பெ.* ***ஆடுகளுக்கு இலை, தழை ஒடித்துப்போடும் மூங்கிலில் (அல்லது கோலில்) மாட்டப்பட்டிருக்கும் கொக்கி.*** 'சல்லக்கொக்கி கழகண்டு போச்சு. நல்லாப் போடு.'

**சலகை** - *பெ.* ***முப்பது வள்ளம் கொண்ட நெல் அளவு.*** 'நெல் எத்தன சலகையாச்சு.'

**சலகையெருது** - *பெ.* ***பொங்கலின் போதான பூ நோன்புக்குப் பின் ஜல்லிக்கட்டுப் போல ஓடவிடும் மாடு.*** 'அந்தச் சலகயெருது என்னமா ஓடுது.'

**சலதாரை** - *பெ.* ***வீட்டுக்குள்ளிருந்து கழிவுநீர் வெளியேற வைக்கும் சிறுதுளை.*** 'சலதாரய அடச்சுவெய்யி, பூச்சி பொட்டு வந்தரப் போவுது'

**சலம்** - *பெ.* ***கிணற்றில் நீர் ஊற்று வரும் இடம்.*** 'எங்க கெணத்துல ரண்டு சலம் வருது'

**சலவாதி** - *பெ.* ***நீராகக் கழியும் வயிற்றெடுப்பு; மலம் கழிக்கும் செயல்.*** 'சலவாதிக்குப் போயிட்டு வந்தேன்.'

**சலவாய்** - *பெ.* ***எச்சில் ஒழுக்கு.*** 'இந்தக் கொழந்தக்கு இப்பிடிச் சலவாய் வருது.'

**சலி(த்தல்)** - *வி.* ***குழம்பு, ரசம் போன்றவை கெட்டுப் போதல்.*** 'தேங்கா போட்டாக் கொழம்பு

சலிச்சுப் போயிடும்.'

**சலுவு** - *பெ.* **பயிர் நடவு முடிந்து மூன்று நாட்கள் வாடவிட்டபின் பாய்ச்சப்படும் முதல் நீர்.** 'பயிருக்குச் சலுவு கட்டோனும்.'

**சலுவுதண்ணி** - **காண்க:** **சலுவு.**

**சவாரித்தப்பை** - *பெ.* **சவாரி வண்டியில் ஆள் உட்காரப் போடப்படும் பலகை.** 'சவாரித் தப்ப மேல உக்கோந்துக்கோ.'

**சவாரி வண்டி** - *பெ.* **பயணம் போவதற்கான மூடாக்குப் போடப்பட்ட வண்டி.** 'சவாரி வண்டி அப்பெல்லாம் நெறய இருக்கும்.'

**சள்ளக்கூடை** - *பெ.* **அறுவடை செய்த தானியக் கதிர்களை நிறைத்து எடுத்துச் செல்வதற்கான பெரிய கூடை.** 'உங்கூட்ல சள்ளக்கூட இருந்தாக் குடு.'

**சன்னக்கோல்** - **காண்க.** சன்னக்கட்டை.



சன்னக்கோல்

## சா

**சாக்கனாக்கடை** - *பெ.* **சாராயக் கடைக்கு அருகிலோ அதனுள்ளோ வைக்கப்படும் அசைவ உணவுக் கடை.** 'அவங்க சாக்கனாக்கடை வெச்சிருக்கறாங்க.'

**சாக்காடு** - *பெ.* **ஒன்றிலிருந்து தப்பித்துக் கொள்ளக் கூறும் (பொருந்தாத, மேலோட்டமான) காரணம்; சாக்கு.** 'மழ வந்திடுச்சிங்கறது அவங்களுக்கு சாக்காடாப் போச்சு.'

**சாக்கு** - *பெ.* **கோணிப்பை; மூட்டை.** 'கடலக்கா எத்தன சாக்கு ஆச்சு.'

**சாக்குருவி** - *பெ.* **நடு இரவில் கத்திப் போகும் குருவி (இதுபோகும் திசையில் சாவு நடக்கும் என்பது நம்பிக்கை).** 'ராத்திரி கெழக்குப் பக்கமா சாக்குருவி கத்திட்டுப் போச்சு.'

**சாங்கியம்** - *பெ.* **சடங்கு.** 'கலியாணத்துல அளவத்த சாங்கியம் இருக்குதப்பா.'

**சாஞ்சோறு** - *பெ.* **குழம்போடு சேர்த்துப் பிசைந்த உணவு.** 'இன்னக்கிஉங்கூட்டுல சாஞ்சோறா கரச்சோறா?'

**சாட்டு** - *வி.* **1. பொது நிகழ்ச்சி ஒன்றைப் பறை அறைந்தோ வேறு வகையிலோ ஊராருக்கு அறிவித்தல்.** 'கோயில் திருநா சாட்டியாச்சு.' **2. வேலைக்கு ஆள் நியமித்தல்.** 'அந்த வேலைக்கு அவனைச் சாட்டி உட்டுட்டன்.'

**சாடு**[1] - *பெ.* **குதி; தாண்டு.** 'ஒரே சாடா அந்தப் பக்கம் போயிட்டான்.'

**சாடு**[2] - *பெ.* **1. புளி, மஞ்சள் ஆகியவற்றின் அளவுப் பெயர்; ஏழரை வள்ளம் கொண்டது சாடு.** 'புளி எத்தன சாடு ஆவும்.' **2. புளி, மஞ்சள் ஆகியவற்றை அளப்பதற்கான மூங்கிலால் பின்னப்பட்ட பெரிய கூடை; இதுவும் ஏழரை வள்ளம் பிடிக்கும்.** 'அந்தப் பக்கந்தான் சாடு கவுத்தியிருக்குது.'

**சாணி** - *பெ.* **மாட்டு மலம்; சாணம்.** 'சாணி அள்ளிக் கொட்டியாச்சா?'

**சாணித்துணி** - *பெ.* **சாணிக்கரைசலில் நனைத்து எடுத்து வழிக்க (துடைக்கப்) பயன்படுத்தும் துணி.** 'சாணித்துணிய நல்லா நனச்சுத் தொடை'

**சாணிப்புல்** - பெ. ***நிலத்தில் அப்பிப் படரும் அடர்த்தியான புல்.*** 'சாணிப்புல்லு வளந்து கெடக்குது. மாட்ட உட்டா நல்லாக் கரளும்.'

**சாணிப்புழு** - பெ. ***காண்க:*** குப்பப்புழு.

**சாணிப்பூரான்** - பெ. ***காய்ந்த சாணத்திற்கு அடியில் (பெரும்பாலும்) வசிக்கும் பூரான்.*** 'சாணிப் பூரான் கடிச்சிரப் போவுது. தூரவா.'

**சாணிப்பொணம்** - பெ. **சாணிப்பிணம். ஒரே இடத்தில் எப்போதும் உட்கார்ந்து கொண்டோ, படுத்துக் கொண்டே இருக்கும் சோம்பேறியைக் குறிக்கும் திட்டுச்சொல்.** 'அந்தச் சாணிப்பொணம் திண்ணையிலதான் கெடக்கும்.'

**சாணை** - பெ. ***கோயில் திருவிழாவில் எடுத்துச் செல்லும் மாவிளக்குக்காகப் பிடித்து வைக்கப்படும் மாவு.*** 'சாணை புடிச்சு வச்சுட்டு அப்புறம் மாவத் திங்கக் குடு.'

**சாப்பல்** - வி.அ. ***சாய்வு.*** 'போர் கொஞ்சம் சாப்பலா இருக்குது.'

**சாப்பு** - பெ. ***வீட்டை ஒட்டிப் பக்கவாட்டில் சாய்வாகக் கூரை அமைக்கப்பட்டுள்ள பகுதி (இது சில்லரைச் சாமான்கள் போட்டு வைக்கவோ மாடுகளுக்குத் தேவையான பொருட்கள் வைக்கவோ பயன்படும்).*** 'இந்தப் பக்கம் ஒரு சாப்புப் போட்டாத்தான் நல்லது'.

**சாப்பை** - பெ. ***பெண்கள் போடும் ஒருவகைக் கொண்டை.*** 'மயிரச் சுருட்டிச் சாப்ப போடு.'

**சாமிசாட்டு** - வி. ***கோயில் திருவிழா தொடங்குதல்.*** 'எங்க ஊர்ல போனவாரம் சாமிசாட்டுனாங்க.'

**சாய்திண்ணை** - பெ. ***படுத்துக் கொள்ள வசதியாக ஒருபுறம் தலையணை போன்ற திண்டு வைத்துக் கட்டப்பட்டிருக்கும் திண்ணை.*** 'எந்நேரமும் அவனுக்குச் சாய்திண்ணையிலதான் கெடக்க.'



சாய்திண்ணை

**சாரமண்** - பெ. ***சோப்புக்குப் பதிலாக வண்ணார் துணி துவைக்கப் பயன்படுத்தும் மண்.*** 'சாரமண்ணு எங்க போயிக் கொண்டாருவீங்க.'

**சாரணை** - பெ. ***படரும் ஒருவகைக் களை. (இதைக் கீரையாகவும் பயன்படுத்துவர்).*** 'காட்டுல சாரணை ஏறிப்போய்க் கெடக்குது.'

**சாரணைப்புழு** - பெ. ***சாரணை என்னும் களைச் செடியில் இருக்கும் புழு.*** 'சாரணப்புழுவு உழுந்து காடே மொட்டயாயிடுச்சு.'

**சால்** - பெ. ***விதையைக் கையிலெடுத்து ஏருக்குப் பின்னால் போட்டுச் செல்லும் வரிசை.*** 'இன்னும் ஒரு சால் பாக்கியிருக்குது.'

**சால்ப்பறி** - பெ. ***ஏற்றத்தில் நீர் அள்ளிவரும் மிகப்பெரிய, இரும்பினால் ஆன சால் (பை).*** 'சால்ப்பறி அவுங்ககிட்ட இருக்குது.'

**சால்போடுதல்** - வி. ***உழுது செல்லும் ஏரின் பின்னால் விதையை வரிசையாகப் போட்டுக் கொண்டே செல்லுதல்.*** 'கல்லப்பருப்பு சால்போடப் போவோனும்.'

**சால்விடுதல்** - ***காண்க:*** சால்போடுதல்.

**சாலக்கம்** - *பெ.* ***திமிர் நிறைந்த ஏமாற்றுச்செயல்.*** 'இந்த சாலக்கமெல்லாம் எங்கிட்ட வெச்சுக்காத.'

**சாலாக்கம்** - **காண்க: சாலக்கம்.**

**சாலாணி** - *பெ.* ***நீர் நிறைத்து வைக்கும் பெரிய தவலையைத் (சாலு) தாங்கி நிற்க மரத்தால் செய்யப்பட்ட உயரமான தாங்கி (ஸ்டேண்ட்).*** 'சாலாணிய செவுத்தோரமாத் தள்ளிப்போடு.'



சாலாணி

**சாலு** - *பெ.* *1.* ***நீர் நிறைத்து வைக்கும் பெரிய தவலை.*** 'சாலுல தண்ணி ஊத்தி வையி.' *2.* ***தானியங்கள் நிறைத்து வைக்கும் மண்ணால் ஆன மிகப்பெரிய மிடா.*** 'சாலு நெறயண கம்பு இருக்குது.'

**சாலுக்குழி** - *பெ.* ***மிகப்பெரிய மிடாவான சாலில் தண்ணீர் நிரப்பி ஆடாமல் வைப்பதற்காகச் சிறிது உயர்ந்த மேடையில் அமைக்கப்படும் சிறுகுழி.*** 'சாலுக்குழியில தண்ணி வடிஞ்சு கெடக்குது.'

**சாலுக்குழித் தண்ணீர்** - *பெ.* ***சாலில் தண்ணீர் எடுக்கும் போது வடிந்து சாலுக்குழியில் தேங்கி நிற்கும் தண்ணீர். இதைக் குழந்தைகள் குடித்தால் நெஞ்சு உரம்பெறும் என்பது நம்பிக்கை.*** 'சாலுக்குழித் தண்ணியப் பையனுக்கு குடுக்கறதுதான.'

**சாவக்கட்டு** - *பெ.* ***பந்தயக் கோழிச் சண்டை.*** 'சாவக்கட்டுப் பாக்கப் போறம்.'

**சாவகாசம்** - *பெ.* ***சகவாசம்.*** 'அவனோட சாவகாசமே வெச்சுக்கக் கூடாது.'

**சாவட்ட ஈர்** - *பெ.* ***எடுத்து நசுக்கினாலும் சாகாத, வெண்ணிறத்தில் மிகச் சிறிதாக மயிரோடு ஒட்டிக்கொண்டிருக்கும் இளம் பருவம். பேன்*** 'கோதுனாலும் வரமாட்டீங்குது. சாவட்ட ஈராப் புடிச்சிருக்குது.'

**சாவடி** - *பெ.* ***(பேருந்து நிறுத்தம். மணியக்காரர் அலுவலம், ஊர்க்கூட்டம் நடக்கும் இடம் போன்ற) பொது இடம்.*** 'சாவடியில என்ன இன்னைக்கு இத்தன கூட்டம்.'

**சாவை** - *பெ.* ***பாளையாகிப் போன நெற்கதிர்.*** 'வெளச்சலு ஒண்ணுமில்ல சாவையாப் போச்சு.'

**சாளேசரம்** - *பெ.* ***பார்வைக் குறைபாடு.*** 'பாட்டிக்குக் கண்ணுல சாளேசரம் வந்திருச்சு.'

**சாளை** - *பெ.* ***துணைப் பயன்பாட்டிற்காக அமைக்கப்படும் கொட்டகை; சிறுவீடு; குடிசை.*** 'மம்மட்டி சாளையில கெடக்கும் பாரு.'

**சாறு** - *பெ.* ***குழம்பு.*** 'இன்னக்கி உங்கூட்டுல என்ன சாறு?'

**சாறு வடிதல்** - *பெ.* ***முகத்தில் அழுக்கோடு சேர்ந்து வேர்வை வடிந்திருத்தல்.*** 'அவனோட மூஞ்சியில சாறு வடிஞ்சுக்கிட்டுக் கெடக்குது.'.

## சி

**சிக்கு** - *பெ.* *1.* ***எண்ணெய் கெட்டுப்போனதால் வரும் நாற்றம்.*** 'இது சிக்கு புடுச்ச எண்ணெய்.' *2.* ***தலை மயிர் ஒன்றோடு ஒன்று சேர்ந்து முறுக்கிக் கொள்ளுதல்.*** 'மயிரு சிக்கு உழுந்திருச்சு.'

**சிக்கு(தல்)** - *வி.* *1.* ***மாட்டிக் கொள்ளுதல்.*** 'ஆளு வசமாச் சிக்கிக்கிட்டான்.' *2.* ***கிடைத்தல்.*** 'மைகோதியத் தேடித்தேடி இப்பத்தான் சிக்குச்சு.'

**சிங்கலாட்டம்** - பெ. **தீச்செயல்.** 'அவம் பண்ற சிங்கலாட்டம் ஆருக்குத் தெரியாத கெடக்குது.'

**சிட்டாள்** - பெ. **வேலைக்கு உதவி செய்யும் சிறுவன் / சிறுமி.** 'எட்டாளு வேலய ஒரு சிட்டாளு செய்யுமாம்.' (பழமொழி)

**சிட்டி மூங்கில்** - பெ. **கனமும் வலுவும் கொண்ட மூங்கில்.** 'சிட்டி மூங்கலாப் பாத்துக் கூரைக்குப் போடு.'

**சித்த** - பெ.அ. **சிறிது.** 'சித்த நேரம் பொறுடா.'

**சித்தாலச் சுவர்** - பெ. **சுற்றுச் சுவர் (காம்பவுண்ட் சுவர்).** 'சித்தாலச் செவரு கட்டீட்டாத்தான் வூடு அந்துசா இருக்கும்.'



சித்தாலச் சுவர்

**சிந்து கள்ளன்** - பெ. **ஒன்றும் தெரியாதவன் போல் நடிக்கும் விபரமானவன்.** 'இவன் ஒன்னுந் தெரியாத சிந்து கள்ளன்டா.'

**சிந்துகள்ளி** - பெ. **ஒன்றும் தெரியாதவள் போல் நடிக்கும் விபரமறிந்த பெண்.** 'அடடா... சிந்து கள்ளிக்கு ஒண்ணுந் தெரியாது போ.'

**சிம்பு(தல்)** - வி. **கோபத்தில் அதிரக் கத்துதல்.** 'இப்ப என்ன நடந்திருச்சு, இப்படிச் சிம்பற.'

**சிம்பு** - பெ. 1. **பட்டிக்குடிசை, குடிசை போன்றவற்றில் மேல்பகுதியில் கட்டப்பயன்படும் வளைதல் தன்மையுடைய சிறுகுச்சி.** 'இன்னம் ரண்டு சிம்புவெச்சு நல்லாக் கட்டு.' 2. **புகையிலைக் கொழுந்து.** 'ஒரு சிம்பு கிள்ளிக் குடு.'

**சிறுவத்து** - பெ.அ. **குட்டையான கால்களையுடைய (கோழி).** 'சிறுவத்துக் கோழியாப் போச்சு.'

**சில்** - பெ. **கருப்பட்டி எண்ணிக்கையில் ஒன்று.** 'கருப்பட்டி ஒரு சில் எவ்வளவு.'

**சில்லாந்தட்டியா** - பெ.அ. **காண்க: ஒடுஞ்சுளுவா.**

**சில்லி மூஞ்சி** - பெ. **கோபமும் எரிச்சலும் வெளிப்படும் முகம்.** 'எதுக்கெடுத்தாலும் இப்படி சில்லி மூஞ்சியக் காட்டாத.'

**சிலுப்பு(தல்)** - வி. **(தயிர் கடைதல், உடலை ஆட்டுதல் போன்ற பொருளில் வரும்) அசைத்தல்.** 'மோர் சிலுப்பீட்டியா.' 'உடம்ப இந்தச் சிலுப்புச் சிலுப்பறா.'

**சிலுவாடு** - பெ. **இனாம்.** 'நோம்பீன்னாப் போதும். இந்த ஆளுவ சிலுவாட்டுக்கு வந்தர்றானுவ.'

**சிவனை** - பெ. **(குருவி போன்ற மிகச்) சிறு பறவைகள்.** 'சிவன ரவுசே பொறுக்க முடியல.'

**சிறுசெலவு** - பெ. **கடுகு, சீரகம், மிளகு முதலிய சமையலுக்கான சிறு பொருட்கள்.** 'சந்தைக்குப் போனா சிறு செலவாச்சும் வாங்கிட்டு வரலாம்.'

**சிறுநாக்கு** - பெ. **தொண்டைப் பகுதியில் நாக்கு போல் சிறிதாக இருக்கும் பகுதி.** 'சிறுநாக்கு வளந்திடுச்சாட்டம் இருக்குது. தொண்ட வலிக்குது.'

**சிறுமைக்கூத்து** - பெ. **நான்கைந்து பேர் சேர்ந்து கலகலப்பாகப் பேசும் சிரிப்புப் பேச்சு.** 'அவங்கெல்லாம் சேந்துட்டா ஒரே சிறுமக் கூத்துத்தாம் போ.'

**சின்னப்படு(தல்)** - வி. **தொடர்ச்சியாகத் துன்பப்படுதல்.** 'இவனக் கட்டிக்கிட்டு போதும் போதுங்கிற அளவுக்குச் சின்னப்பட்டாச்சு.'

**சின்னரேசு** - வி.அ. **மிக எளிதில்.** 'அவங்க சின்னரேசுல உடமாட்டாங்க.'

**சின்னாளு** - **காண்க: சிட்டாள்.**

**சினுக்கு** - பெ. **நூலோ கயிறோ பிரித்தெடுக்க முடியாதபடி மாட்டிக்கொள்ளும் சிக்கல்.** 'சினுக்கு உழுந்திருச்சு எடுக்க முடியமாட்டீங்குது.'

**சீக்காடி** - பெ. **கொசு.** 'மழகாலத்துல சீக்காடி எங்கிருந்து தான் வருமோ.'

**சீடை** - பெ. **உழும் முன் நிலத்தைப் பண்படுத்தப் பாய்ச்சும் நீர்.** 'நேத்தே சீட பாச்சாச்சு.'

**சீத்தக்கொடி** - பெ. **ஒரு வகைக் கொடி.** 'காட்டுல சீத்தக்கொடி படந்து கெடக்குது.'

**சீதளம்** - பெ. **மரப் பொந்துகளில் வாழும் வெண்மை நிறம் கொண்ட ஒருவகை எட்டுக்கால் விஷப் பூச்சி.** 'சீதளம் தீண்டுனா நொங்கும் நுரையும் தள்ளி செத்துருவோம்டா.'

**சீந்து(தல்)** - வி. **கண்டு கொள்ளுதல்.** 'என்னய எந்த நாயி சீந்துது.'

**சீப்படு(தல்)** - வி. **அளவற்ற துன்பங்கள் அனுபவித்தல்.** 'இன்னம் எத்தன காலத்துக்கு இப்பிடிச் சீப்படோனுமோ.'

**சீம்பு** - பெ. 1. **மாடு, எருமை முதலியவை ஈன்றவுடன் வரும் பாலைக் கறந்து, இனிப்புப் பொருட்கள் சேர்த்து வேகவைத்துப் பெறப்படும் பண்டம்.** 'மாடு கன்னு போட்டிருக்குது. சீம்பு தின்னு பாருங்க.' 2. **முளைப்பு வந்த பனங்கொட்டையின் உள்ளிருக்கும் (தின்னப் பயன்படும்) மாவுப் பொருள்.** 'ரண்டு பனங்கொட்ட புடுங்கியா. சீம்பு திங்கலாம்.'

**சீமாரு** - பெ. **வீடு சுத்தம் செய்யும் துடைப்பம்.** 'அந்தச் சீமாத்த எடுத்துக் கூட்டு.'

**சீமக்கருவை** - பெ. **வெளிநாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட விறகுக்குப் பயன்படும் மரம்; வேலிக்கருவை.** 'சீமக்கருவேல மரத்த வெட்டி எறி.'

**சீமச்சாராயம்** - பெ. **வெளிநாட்டு மதுபான வகை.** 'கையில காசிருந்தா சீமச்சாரயம் குடிக்கலாம்.'

**சீமநாய்** - பெ. **வெளிநாட்டு நாய் வகை; சீமை நாய்.** 'சீமநாய வளத்தரதுன்னா சும்மாவா.'

**சீமமாடு** - பெ. **வெளிநாட்டு மாட்டுவகை; சீமை மாடு.** 'சீமமாடு வெய்யிலுக்குத் தாங்காது.'

**சீமெண்ணெய்** - பெ. **மண்ணெண்ணெய்.** 'கூப்பன் கடையில சீமெண்ண ஊத்தறாங்களா.'

**சீமெண்ணெப்பூடு** - பெ. **ஆடுகள் தின்னும் ஒருவகைப் பூண்டு.** 'சீமெண்ணெப் பூட்டுல உடு. மேயட்டும்.'

**சீர்** - பெ. **பனைமரத்தில் முதலாவதாக வரும் பாளை.** 'ரண்டு பனையில சீர் வந்திருக்குது.'

**சீரணம்** - பெ. **மரத்தில் துளையிட உதவும் கருவி.** 'சீரணத்த எடுத்தா. இதுல ஒரு ஓட்ட போடோணும்.'

**சீரழி(தல்)** - வி. **சிறப்புக் கெட்டுத் துன்பப்படுதல்.** 'அவனோட எத்தன நாளக்கிச் சீரழியறது.'

**சீராட்டுதல்** - வி. **குழந்தை அல்லது உறவினர் மீது அதிக அன்பினால் மிகச் சிறப்பாகக் கவனித்துக் கொள்ளுதல்.** 'கொழந்தயச் சீராட்டாம கெழவியவா சீராட்டு வாங்க.'

**சீராடுதல்** - வி. **கணவன் மனைவிக்குள் வரும் சண்டையாலோ உறவினர்களுக்குள் வரும் சண்டையாலோ கோபித்துக் கொண்டு பேசாமல் இருத்தல் (பெண்கள் தாய் வீட்டுக்குப் போய்விடுவதும் உண்டு).**

'ஏண்டா உம் பொண்டாட்டி சீராடிக்கிட்டுப் போனாளே திரும்பி வந்தாளா?'

**சீவக்கட்டை** - பெ. 1. **நெற்பயிரை வளரவிடாமல் தாக்கும் நோய்.** 'இந்த வயல்ல சீவக்கட்ட தாக்கீடுச்சு.' 2. **வீடு கூட்டும் துடைப்பம்.** 'சீவக்கட்டய எடுத்தா. ஊடு கூட்டலாம்.'

**சீவனாத்தி** - பெ. **ஜீவனாம்சம்; குழந்தைப் பேறு இல்லாமலே கணவனை இழந்துவட்ட பெண்ணுக்கு கணவன் வீட்டார் கொடுக்கும் உதவித்தொகை.** 'அவளுக்குன்னு ஒரு கொழந்த இருந்தா சீவனாத்தி வாங்கிக்கிட்டுப் போம்பாங்களா.'

**சீன்றம்** - பெ. **ஒழுங்கற்றுப் புதர், சாக்கடை கழிவுகள் முதலிய வற்றால் குறிப்பிட்ட பகுதியில் சூழ்ந்திருக்கும் அசுத்தம்.** 'இந்த எடத்தச் சுத்தம் பன்றதுதான சீன்றமாக் கெடக்குது.'

## சு

**சுக்கடா** - பெ. **மிகச் சிறிய பையன்.** 'அவன் இன்னம் சுக்கடா என்ன தெரியும்.'

**சுக்கிட்டி** - பெ. **மிகச் சிறிய பெண்.** 'சுக்கிட்டிக்கு அதுக்குள்ள என்னடா கலியாணம்.'

**சுக்குட்டிச்செடி** - பெ. **மணத்தக்காளிச் செடி.** 'சுக்குட்டிச் செடி நல்லா வளர்ந்திருக்குது.'

**சுக்குப்பரி** - பெ. **'கோகோ' விளையாட்டு.** 'இன்னக்கிச் சுக்குப்பரி வெளையாடலாமா.'

**சுக்குள்** - பெ. **மனதில் இருப்பதை மறைத்துப் பேசும் பேச்சு.** 'சுக்குள் வெச்சுப் பேசறாம் பாரு.'

**சுங்கம்** - பெ. **வேட்டி கட்டும் போது கொசுவம் போல விட்டுக்கட்டும் பகுதி.** 'சுங்கம் வெச்சு வேட்டி கட்டத் தெரிஞ்சால்ல.'

**சுட்டி** - பெ. **மிகச் சிறிய முகத்தலளவைக் கருவி (உழக்கு).** 'சுட்டியெடுத்து அளந்து போடு.'

**சுட்டித் தலையன்** - பெ. **குறும்பு செய்யும் சிறுவன்.** 'அந்தச் சுட்டித் தலையனப் பாத்துப் புடுச்சா.'

**சுண்டாச் சட்டி** - பெ. **மிஞ்சும் குழம்பை ஊற்றி அடுப்பில் சுண்ட வைக்கப் பயன்படும் சட்டி.** 'மிச்சமிருக்கறத சுண்டாச்சட்டியில ஊத்தி வெய்யி.'

**சுண்டுகாய்** - பெ. **மழை போதாமையால் (நிலக்கடலை போன்றவற்றின்) நன்கு முதிராமல் வற்றிப் போன காய்.** 'இந்த வருசம் நெறைய சுண்டுகாயாப் போச்சு.'

**சுண்டுகால்** - பெ. **நரம்புப் பிடிப்பால் காலை இழுத்து நடக்கும் நடை.** 'அந்தச் சுண்டுகால் எருமைக்கு டாக்டர் நரம்பு வெட்டோனும்னாரு?'

**சுண்டுவேரச் செலவு** - பெ. **வால் மிளகு, கருஞ்சீரகம், கசகசா, சோம்பு பொருள்கள் சேர்ந்தது. இதனை அரைத்து ரசம் வைக்கப் பயன்படுத்துவர்.** 'சந்தைக்குப் போனவ சுண்டுவேரச் செலவு வாங்கியார மறந்துட்டா'

**சுண்டுவேர அம்மி** - பெ. **(சுண்டு வேரச் செலவுப் பொருட்களை அரைக்க உதவும்) சிறு அம்மி.** 'சுண்டுவேர அம்மியில் ரண்டு மொளக வெச்சு நுணுக்கியா.'

**சுண்ணாம்புத் தெளுவு** - பெ. **பதநீர்.** 'சுண்ணாம்புத் தெளுவு இப்பயாரு கட்டறா எல்லாம் கள்ளுத்தான்.'

**சுத்துக் கூடைவுடு(தல்)** - வி. **சுற்றுக்கூடை விடுதல். கல், குறுணை இவற்றைப் பிரிக்கத் தூற்றுக் கூடையின் உதவியால் சுற்றித் தூற்றுதல்.** 'நல்லா சுத்துக்கூட உட்டுத் தூத்து.'

**சுத்திப்போடு(தல்)** - வி. **அளக்கும் படி ஒன்றில் தெரு மண் கூரை, ஓலை, சிறிது மிளகாய் போன்றவற்றைப் போட்டுத் திருஷ்டி கழிக்க வேண்டிய நபரை உட்கார்த்தி வைத்துத் தலைக்கு மேல் சுத்திப்பின் தீயில் போடும் கண்ணேறு கழித்தல்.** 'பையனுக்கு இன்னைக்காச்சும் சுத்திப் போடோனும்.'

**சுத்தொழவு** - பெ. ***வயலின் வடிவத்திற்கேற்ப முழுப்பகுதியையும் சேர்த்து உழும் உழவு முறை.*** 'சுத்தொழவு போட்ரலாம். அப்பத்தான் சீக்கிரம் ஆவும்.'

**சுப்பை** - பெ. ***(குச்சி, தோல் போன்ற) சிறுவிறகு.*** 'ரண்டு சுப்பைய அள்ளி வெய்யி நல்ல எரியும்.'

**சுமை** - பெ. ***104 வெற்றிலை கொண்ட அளவுப் பெயர்.*** 'வெத்தல எத்தன சுமயாச்சு.'

**சுரத்து** - பெ. ***உற்சாகம்.*** 'என்னடா சுரத்தில்லாத பேசற.'

**சுரவை** - பெ. ***ஆடு, மாடுகளின் முலைக்காம்புகளில் பால் சுரந்து நிற்கும் நிலை.*** 'சொரவ மாறிப் போறதுக்குள்ள பால் பீச்சு.'

**சுரவைமாறு (தல்)** - வி. ***ஆடு மாடுகளின் முலைக்காம்புக்களில் பால் சுரந்து நிற்கும் நிலையில் உடனே கறக்கத் தொடங்கிவிட வேண்டும். சிறிது தாமதித்தாலும் அந்நிலை மாறிவிடுதல். (பின்னர் பால் கறக்க இயலாது).*** 'கன்ன அவுத்துட்டுட்டுப் பேசிக்கிட்டிருந்தன். சொரவ மாறிப்போச்சு.'

**சுருக்குப்பை** - பெ. ***பெண்கள் இடுப்பில் சொருகிக் கொள்ளும் (சுருக்கம் வைத்துத் தைத்த) பணப்பை.*** 'சுருக்குப்பையில பணத்த வெச்சிக்கிட்டு என்ன பன்ற. எங்களுக்குத்தான் குடேன்.'



சுருக்குப் பை

**சுருள் கேப்பு** - பெ. ***சுருட்டி வைக்கப்பட்டிருக்கும் சிறு பட்டாசு (roll Cap).*** 'துப்பாக்கில போட்டு வெடிக்க சுருள்கேப்பு வாங்கிக் குடுத்திரு.'

**சுருளித்தடி** - பெ. ***இரும்புக் கம்பிகளால் இருபுறமும் சுற்றப்பட்ட கனமான தடி.*** 'எதுக்கும் சுருளித்தடிய கையில வெச்சுக்க.'

**சுழி சுத்தம்** - பெ. ***மாடு வாங்கும் போது, அதன் உடம்பில் இருக்கும் சுழிகளைப் பார்த்து வாங்குவர். நல்ல சுழிகளைக் கொண்ட மாடு - சுழி சுத்தம்.*** 'இது சுழி சுத்தம்டா.'

**சுள்ளாணி** - பெ. ***மரத்தால் செய்யப்படும் ஆணி.*** 'ரண்டு சுள்ளாணி வெச்சு அடி.'

**சுள்ளி** - பெ. ***சிறு விறகுக் குச்சி.*** 'சுள்ளி ஒரு கத்த பொறுக்கியாந்தன்.'

**சுள்ளெறும்பு** - பெ. ***சிவப்பும் வெளுப்பும் கலந்த நிறம் கொண்ட (சுள்ளென்று வலிக்கும் விதத்தில் கடிக்கும்) சிறு எறும்பு.*** 'சுள்ளெறும்பு எங்கிருந்து வந்துதோ இப்பிடி ஏறிடுச்சு.'

**சுளுவு** - வி.அ. ***எளிதாக, சுலபமாக.*** 'வேல சுளுவா முடிஞ்சிருச்சு.'

**சுளுக்கெறும்பு** - பெ. ***(கடித்தால் சுளுக்குப் பிடித்தது போல வலிக் கும்) ஒரு வகை எறும்பு.*** 'அந்த மரத்துல சுளுக்கெறும்பு இருக்குது. ஏறாத.'

## சூ

**சூட்டடுப்பு** - பெ. ***மண்ணால் செய்து சுடப்பட்ட அடுப்பு.*** 'கால சூட்டடுப்பு மேல வெச்சு வெச்சு எடு. முள்ளுக் குத்துன வலி போயிடும்.'

**சூட்டிப்பு** - *பெ.* ***சுறுசுறுப்பும் விபரமும் கொண்ட தன்மை.*** 'பையன் நல்லா சூட்டிப்பு.'

**சூட்டுத்தழும்பு** - *பெ.* ***(மஞ்சள்காமாலை, ஜன்னி போன்ற நோய்களுக்காக) கெண்டைக் காலில் போடப்பட்ட சூட்டின் வடு.*** 'அவனுக்கு இத்தாப் பெரிசு சூட்டுத்தழும்பு இருக்குது பாரு.'

**சூட்டு மயிர்** - *பெ.* ***கண்ணிமை முடி.*** 'சூட்டு மயிரில பூளைக் கட்டிக் கெடக்குது.'

**சூட்டுமை** - ***காண்க: சூட்டிப்பு.***

**சூடு** - *பெ. 1.* ***கண்ணிமை.*** 'சூடு வீங்கியிருக்குது.' *2.* ***வைக்கோல் தலையிலடித்துத் தாம்போட்டிய பின் சூடாகும் வகையில் அடுக்கிப் போட்டிருத்தல்.*** 'பில்லு சூட்டுல கெடக்குது.'

**சூந்து** - ***காண்க: கூம்பு*** - 2.

**சூரநாத்தம்** - *பெ.* ***ஒரு வகைத் துர்நாற்றம்.*** 'அங்க என்ன கெடக்குது. சூர நாத்தம் இப்பிடி அடிக்குது.'

**சூரி** - *பெ.* ***சிறிய நீண்ட மடக்குக் கத்தி.*** 'அவம் மடியில எப்பவும் சூரி இருக்கும்.'

**சூரை** - *பெ.* ***அசுத்தம் (பிடித்தவன் / ள்).*** 'அவங்கெடக்கறான் சூர பிடிச்சவன்.'

**சூலவேரிக்காத்து** - *பெ.* ***கோடைக்காலத்தில் மண்ணையும் புழுதியையும் வாரிவரும் சிறு சுழல் காற்று. (இது பேய்க்காற்று என்கிற நம்பிக்கை உண்டு).*** 'சூலவேரிக் காத்து வருது பாரு.'

## செ

**செக்காந்தம்** - *பெ.* ***கிண்டல்.*** 'கேலியும் செக்காந்தமும் களை கட்டீரும்.'

**செகுதி** - *பெ.* **பயன்படுத்த இயலாத பாளை போன்ற தானியம்.** 'செகுதி நெறையாக் கெடக்குது.'

**செகை** - *பெ. 1.* ***அனல்.*** 'தீச்செகை அடிக்குது.' ***2. பலம்.*** 'செகையறியாம திரியறான்.'

**செகைப் (பிடித்தல்)** - *பெ.* ***சிறுநீர் சூடு (பிடித்தல்).*** 'ரண்டுநாளா செகை பிடிச்சுக்கிட்டு ஒன்னுக்கே போக முடியல.'

**செங்கட்டை** - *பெ.* ***செம்மண் நிலம்.*** 'அவுங்க காடு செங்கட்ட.'

**செங்காயன்** - *பெ.* ***சிவந்த நிறமுடையவன்.*** 'செங்காயனுக்குக் கூப்படக் கூப்படக் காது கேக்குதா.'

**செட்டு** - *பெ. 1.* ***குழு.*** 'ரண்டு பேரும் ஒரு செட்டு.' *2. - வி.அ.* ***சிக்கனம்.*** 'அவங்க செட்டாப் பொழைக்கறாங்க.'

**செட்டுக்காரர்** - *பெ.* ***குயவர்.*** 'செட்டுக்காரமூட்ட போயி ரண்டு சட்டி வாங்கியா.'

**செடுவு** - *பெ.* ***கவலை.*** 'எப்பத்தான் செடுவில்லாம இருக்குது.'

**செத்த** - ***காண்க: சித்த.***

**செத்தை** - *பெ.* ***இலைச் சருகு, தானியத் தட்டைகளின் காய்ந்த தோகைகள் முதலியவை.*** 'கொஞ்சம் செத்தை அரிச்சாந்தா தீப்பத்தப் போடலாம்.' ***2. ஆடு, மாடு ஈன்றபின் போடும் நஞ்சுக்கொடி.*** 'குட்டி போட்டு எவ்வளவு நேரமாவுது. இன்னஞ் செத்த போடுலியா.'

**செதுக்கால்** - *பெ.* ***அடி, உதை.*** 'அவனுக்கு செதுக்கால் குடுத்தாத்தான் ஆவும்.'

**செந்தேள்** - *பெ.* ***சிவப்பு நிறமுடைய சிறிய தேள் வகை.*** 'கல்லுக்கடிய செந்தேளு இருக்கும். மெதுவாப் பொரட்டு.'

**செம்பங்குச்சி** - *பெ.* ***வரிசைக்குச்சியாகப் பயன்படும் ஒருவகை மரம்.*** 'செம்பங்குச்சிய வெட்டிக்கிட்டுவா. வரியலாம்.'

**செம்பாடு** - *பெ.* ***விதைத்த பின் சில நாட்களுக்கு மழை பெய்யாமல் மண் உலரும் தன்மை.*** 'நாலு நாளுக்குச் செம்பாடாக் கெடந்தா பயிர் நல்லா மொளைக்கும்.'

**செம்மாலி** - பெ. ***கோயில் திருவிழாக் காலங்களில் சாமிக்குச் செய்து வைக்கும் காலணி.*** 'செம்மாலி கொண்டாந்தாச்சா.'

**செமத்தி** - பெ.அ. ***பலமாகவும் அதிகமாகவும்.*** 'செமத்தியா ஓத போடோனும்.'

**செய்யான்** - பெ. ***சிவந்த நிறமுடைய பூரான் வகை.*** 'செய்யான் கடிச்சதுன்னா ஆளே அவ்வளவுதான்.'

**செய்வினை** - பெ. ***மந்திரத்தாலோ பொம்மை, மயிர் முதலிய சிலவற்றைப் புதைத்து வைப்பதாலோ ஒருவருக்குக் கேடு செய்யத் தீய சக்திகளை ஏவுதல்.*** 'அவுங்கூட்டுக்கு எவனோ செய்வினை செஞ்சிட்டான்.'

**செரகு** - பெ. 1. ***ஒரே வாய்க்கால் வழியாக நீர் பாயும் படி வரிசையில் அமைந்த பல பாத்திகள் சேர்ந்த பகுதி.*** 'இன்னம் எத்தன செரகு பாயோனும்.' 2. ***துணிகளின் நுனிப்பகுதி.*** **காண்க: செரகு அடித்தல்.**

**செரகடித்தல்** - வி. ***நோய் குணமாக நோயாளியின் முன் துண்டின் நுனிப்பகுதியை வீசிக்கொண்டே மந்திரம் முணுமுணுத்தல்.*** 'இதுக்கு எதுக்கு ஆஸ்பத்திரி போவோனும். ரண்டு தடவ செரகடிச்சாப் போதும்.'

**செரவு** - ***காண்க:*** **செரகு[1].**

**செரா** - பெ. ***மரம் செதுக்கும் போது விழும் பட்டையான துகள் (களைக்கொத்து, மண்வெட்டி ஆகியவற்றில் பிடிப்புக்காக இவற்றை வைப்பர்).*** 'மம்மட்டி கழ்டுது... ஒரு செரா வெச்சு அடி.'

**செரிமானம்** - பெ. ***ஜீரணம்.*** 'திங்கற சோறு செரிமானம் ஆவோனுமில்ல.'

**செருப்பத்தொடு** - வி. ***செருப்பைக் காலில் போடு.*** 'செருப்பத் தொட்டுக்கிட்டு வர்றன்.'

**செருமாறுதல்** - வி. ***மாடு, எருமைகள் தண்ணீர் குடிக்கும்போது தவிட்டு உமி முதலியன மூக்குள் சென்றுவிடாமல் அதை வெளியேற்ற அவை மேற்கொள்ளும் முயற்சி.*** 'எருமை செருமாறிக்கிட்டே இருக்குது.'

**செருமுதல்** - ***காண்க:*** **செருமாறுதல்.**

**செருவினி** - ***திட்டுச்சொல்! தன்னை முதன்மையாகக் கருதும் இயல்புடையவன்.*** 'அந்தச் செருவினிகிட்ட நமக்கென்ன பேச்சு.'

**செல்லு** - பெ. ***தானியங்களைத் துளைத்துத் தின்னும் சிறு பூச்சிவகை.*** 'சோளத்துல செல்லு இத்தன ஊருது.'

**செலந்தி** - பெ. ***சூத்தாம்பட்டையில் புடைத்து வரும் வலி நிறைந்த கொப்புளப் புண்.*** 'ஒரு செலந்தி வந்திருச்சு. எங்கயும் உக்கோர முடியல.'

**செலக்கா** - வி.அ. ***தடவை.*** 'ஒரு செலக்கா வந்துட்டுப்போ.'

**செலவாங்குதல்** - வி. ***குறிப்பிட்ட இடத்திலிருந்து மிகுதியாக ஆரவாரச் சத்தம் வருதல்.*** 'அங்க என்ன சத்தம் இப்படி செலவாங்குது.'

**செலவாந்தரம்** - (***பழமொழி***) 'ஊம ஊரக் கெடுக்கும்னு செலவாந்தரம் சொல்றது செரியாத்தான் இருக்குது.'

**செலவுப்பெட்டி** - பெ. ***சமையலுக்குத் தேவைப்படும் சிறு பொருட்கள் போட்டு வைத்திருக்கும் பெட்டி (அஞ்சரைப் பெட்டி).*** 'செலவுப் பொட்டியில் கொஞ்சம் கடுகு அள்ளியா.'

**செலாக்கு** - பெ. ***பட்டை, மரம் போன்றவற்றில் இருக்கும் முள் போன்று கூர்மையான செதில்.*** 'கையில ஒரு செலாக்கு ஏறிடுச்சு.'

**செலாம்பு** - பெ. ***மீன் செதில்.*** 'செலாம்பத் தேச்சு எடு'

**செலையோடு(தல்)** - வி. ***ஆரவாரச் சத்தம் எதிரொலித்துப் பரவுதல்.*** 'அவஞ் சத்தந்தான் செலையோடுது.'

**செவ்வெறும்பு** - பெ. **சிவப்பு நிறமுடைய ஒருவகை எறும்பு.** 'செவ்வெறும்புக் குழியுல கால வெச்சாப்பல எரியுது.'

**செவப்புச் சீலை** - பெ. **சிவப்புச் சேலை. சுமங்கலிப் பெண்கள் அணியும் வெள்ளையல்லாத பிற நிறச் சேலைகள். (வெள்ளை நிறத்தைத் தவிர மற்ற அனைத்து நிறச் சேலைகளும் சிவப்புச் சேலைதான்).** 'அறுத்துப் போயிட்டாக்கூட இப்பத்த பொண்ணு செவப்புச்சீல கட்டுது.'

**செவலை** - பெ. **தனிச் சிவப்பு நிறக்காளை.** 'அந்தச் செவல வேலக்கி ஆவும்.'

**செவலைக் காளை** - **காண்க: செவலை.**

**செவுனி** - பெ. **காதிற்குக் கீழ்ப்பகுதி:** 'செவினியிலயே அறஞ்சிட்டான்.'

**செறகு** - பெ. **மாட்டின் இரு முலைக்காம்புகளில் மட்டும் கறக்கும் பாலின் அளவு.** 'என்ன பண்றம். ஒரு செறகு கறந்தாப் போதும்.'

**செறை** - பெ. **தென்னை, பனை மரங்கள் ஒழுங்கு செய்யப்படாமல் ஓலை, பட்டை முதலியவை அடர்ந்து கிடத்தல்.** 'அந்த மரத்துல ஏறி நொங்கு வெட்ட முடியுமா இப்பிடிச் செறப் பிடிச்சுக் கெடக்குதே.'

**செறையடு(த்தல்)** - வி. **செறை பிடித்துக் கிடக்கும் பனை, தென்னை மரங்களை ஒழுங்கு செய்தல்.** 'பனமரம் செறையெடுத்தொடன பாக்கறதுக்கு எப்பிடி இருக்குது?'

**செனம்** - வி.அ. **சீக்கிரம்.** 'கூப்பட்டா செனம் பொறப்பட்டிருவான்.'

**செனக்கொழா** - பெ. **சினைக்கொழா. எருமை மாடுகள் சினையாகும் பருவத்தில் அவற்றின் உறுப்பில் வடியும் கெட்டியான திரவம்.** 'எரும செனக்கொழா அடிக்குது. காளைக்குக் கொண்டோ.'

## சே

**சேகு** - பெ. **முற்றி வளர்ந்த மரத்தின் வைரம் பாய்ந்த / சிவந்த நிறத்தில் காணப்படும் உள்பகுதி.** 'மரம் முத்துனாச் சேகு. மனுசன் முத்துனாக் கொரங்கு.' (பழமொழி)

**சேங்கன்று** - பெ. **காளைக்கன்று.** 'மாடு சேங்கன்னுப் போட்டிருக்குது.'

**சேடை** - **காண்க: சீடை.**

**சேடைத்தண்ணி** - **காண்க: சீடைத்தண்ணி.**

**சேத்தாளி** - பெ. **நண்பன்.** 'உன்னோட சேத்தாளி எங்கடா.'

**சேத்தொழவு** - பெ. **சேற்றுக்குள் உழும் உழவு.** 'சேத்தொழவு இன்னம் எத்தன நாளாவும்.'

**சேந்து கிணறு** - பெ. **கயிறு கட்டி நீர் மொள்ளும் வகையில் ராட்டினம் போன்றவற்றோடு அமைந்த கிணறு.** 'சேந்து கெணத்துல பக்கெட் உழுந்திடுச்சி'.

**சேமெலை** - பெ. **நீர்ப் பகுதியில் வளரும் அகன்ற இலை கொண்ட ஒரு வகைத் தாவரம்.** 'அந்தச் சேமெலைய அறுத்தா. சாப்பாடு போடலாம்.'

**சேர்க்கை** - பெ. **நட்பு.** 'இப்பக் கொஞ்சநாளா அவனோட சேர்க்க சரியில்ல.'

**சேரை** - பெ. **ஒரு கை அளவு (தானியம்).** 'ஒரு சேர அரிசி எச்சாப் போடு.'

**சேவா** - பெ. **நன்றாக பழுக்கும் முன் பறித்த பனம் பழத்தில் நீள்வாக்கில் சீவி எடுக்கும் துண்டு. (இதை வேகவைத்துத் தின்பர்).** 'கொஞ்சம் சேவா சீவுனா வேவிக்கலாம்.'

**சேவாக்காய்** - பெ. **நன்கு கனியாத பனம்பழம்.** 'சேவாக்காய வெட்டிப் போட்டிருக்கறான்.'

**சேவாக்கொட்டை** - பெ. **நன்கு கனியாத பனம்பழத்தில் சதைப்பகுதி சீவி**

***வைக்கப்பட்ட பின் (கிராப் வெட்டியது போலக் காணப்படும்) இருக்கும் கொட்டை.*** 'சேவாக்கொட்டைய குட்டானாக் குமிச்சு வெய்யி.'

**சேவு** - *பெ.* ***காண்க: 1. சேகு. 2. பற்களில் படியும் சிவப்பு நிற அழுக்கு.*** 'பல்லு சேவேறிக் கெடக்குது. வெலக்கலாமில்ல.'

## சை

**சைமாண்டு போ(தல்)** - *வி.* ***நோயாலோ, முதுமையினாலோ உடல் தளர்ந்து விடுதல்.*** 'அப்பிடி இருந்த ஆளு.. சைமாண்டு போயிட்டான்.'

## சொ

**சொக்குதல்** - *பெ.* ***ஆமணக்குக் கொழுந்து போன்ற சில தழைகளைத் தின்பதால் வயிறு உப்பி ஆடுகளுக்கு ஏற்படும் மயக்கம் / நோய்.*** 'கொழுந்துல உட்டா ஆடு சொக்காத என்ன பண்ணும்.'

**சொக்குப் பாடம்** - *பெ.* ***சேராத உணவினால் நோய் கொண்ட ஆடுகள் பிழைக்க மந்திரம் போல் ஓதும் பாடம்.*** 'ஒரு சொக்குப்பாடம் போட்டா நல்லாயிரும்.'

**சொக்குப்பூடு** - *பெ.* ***ஆடுகள் தின்றால் மயக்கம் கொள்ளும் ஒரு வகைப் பூண்டு.*** 'சொக்குப் பூட்டக் கீது கடிச்சிரப் போவுது.'

**சொண்டு** - *பெ.* ***பெருஞ்செலவு.*** 'கலியாண சொண்டோட சொண்டா இன்னும் ரண்டு சீல எடுத்துரு.'

**சொதும்ப** - *வி.அ.* ***இடைவெளியின்றி (எல்லா இடத்திலும் பரவும்படியாகத் தடவு).*** 'எண்ணெயச் சொதும்பத் தடவுடா.'

**சொப்பு** - *பெ.* ***(கள் குடிக்க,நீர் பருக உதவும்) மண்ணாலான சிறு கலயம்.*** 'எத்தன சொப்புக் கள்ளு அடிச்ச.'

**சொய்யாமா** - *பெ.* ***அரிசி மாவு, பழம், இனிப்பு ஆகியவை கலந்து எண்ணெயில் போட்டு எடுக்கும் பலகாரம்.*** 'உங்கூட்ல இன்னிக்கி சொய்யாமா சுட்டுட்டீங்க.'

**சொரண்டி** - *பெ.* ***கொப்பரையில் படிந்துள்ள சர்க்கரைப் பாகைச் சுரண்டி எடுக்கும் தகடு.*** 'இப்பிடிப் படிஞ்சு கெடக்குது. சொரண்டிய எடுத்தா.'

**சொரவை** - *பெ.* ***1. லேசான வீக்கம்.*** 'தால்ல சொரவை எறங்கீட்டுது.' ***2. காண்க: சுரவை.***

**சொல்லை** - *பெ.* ***மாட்டின் மேலிருக்கும் பெரிய ஈ.*** 'அந்தச் சொல்லைய நசுக்கு.'

**சொலமாட்டம்** - *பெ.* ***திருட்டுத்தனமான நடமாட்டம்.*** 'இந்தப் பக்கத்துல பெருக்கான் சொலமாட்டம் இருக்குது டோய்.'

**சொலமாடு** - *வி.* ***திருட்டுத் தனமாக நடமாடு.*** 'இங்க என்னடா சொலமாடிக்கிட்டு இருக்கற.'

**சொலுக்கு மல்லு** - *பெ.* ***துளித் துளியாக விட்டு விட்டுப் போகும் மூத்திரம்.*** 'இந்த மாடு சொலுக்கு மல்லு மல்லுது இப்பத்தான்.'

**சொள்ளை** - *பெ.* ***கொசு.*** 'இந்தச் சொள்ள கருமம் எங்கிருந்து வருதோ.'

**சொறை** - *பெ.* ***1. ஒருவகை வண்டு.*** 'வெத்தலயில சொற வண்டு உழுந்திருக்குது.' ***2. புனல்.*** 'சொறைய எடுத்த எண்ணய ஊத்து.'

**சொன்னாங்கை** - ***காண்க. ஒரட்டாங்கை.***

**சொன்னாங்கையன்** - *பெ.* ***இடதுகைப் பழக்கம் உடையவன்.*** 'சொன்னாங்கையன் அறுஞ்சான்னா கன்னம் வீங்கீரும்.'

**சொனத்தண்ணி** - *பெ.* ***சொனத் தண்ணீர். தோலில் லேசாகக் கீறினால் (ரத்தத்திற்கு முன்) வரும் நீர்.*** 'சொனத் தண்ணிதான் வருது. காயம் ஆழமில்ல.'

## சோ

**சோகை** - *பெ.* ***தானியத் தட்டைகளின் தோகை.*** 'கரும்புச் சோகைய உரிச்சுப் போடு.'

**சோகை உரி(த்தல்)** - *வி.* **கரும்புப் பயிரின் காய்ந்த தோகைகளை உரித்துச் சுத்தம் செய்தல்.** 'கரும்புக்காடு சோகை உரிச்சாச்சா.'

**சோடுபோவனி** - *பெ.* **பித்தளை, சில்வர் இவற்றால் ஆன சிறு பாத்திரம்.** 'சோடு போவனியில சோத்தக் கரச்ச .'

**சோடை** - *பெ.* **இயலாமை.** 'அந்த ஆளு வேலையில சோடை போயிட்டான்.'

**சோத்தாங்கை** - *பெ.* **வலதுகை.** 'சோத்தாங்கையில பணத்த வாங்கு.'

**சோத்துப்புறம்** - *பெ.* **பனைநாரின் (அவுனி) உள்பக்கம்.** 'அவுனிய சோத்துப்புறம் திருப்பிக் கட்டு.'

**சோப்பலாங்கி** - *பெ.* **சோம்பேறி.** 'சுத்த சோப்பலாங்கியா இருக்கறாண்டா.'

**சோமாரம்** - *பெ.* **திங்கட்கிழமை.** 'அடுத்த சோமாரத்தன்னிக்கு வர்றன்.'

**சோவை** - *காண்க:* **சோகை.**

**சோளக்குழி** - *பெ.* **சோளம் போட்டு வைக்கப் பயன்படும் குழி.** 'அந்தக் காலத்துல சோளக்குழியில தான் கொட்டி வெப்பாங்க.'

**சோளரட்டு** - *பெ.* **சோளத்தவிடு.** 'சோளரட்ட ஆட்டுக்குத்தான் வெக்கோனும்.'

**சோற்றுப்பாடை** - *பெ.* **திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் சோற்றைக் கொட்டி வைப்பதற்கு வைக்கோல் அல்லது சோளத்தட்டைப் பரப்பி அதன் மேல் துணி விரித்த அமைப்பு.** 'சோத்துப் பாடையில கொட்டி நல்லா மூடிவெய்யிங்க. இல்லீனா ஆறி வெரச்சுப் போயிடும்.'

**சோறு** - *பெ.* **பனை, தென்னை இவற்றின் குருத்தில் உள்ள உண்ணுவதற்கேற்ற மென்மையான பகுதி.** 'அந்தப் பனங்கருக்க வெட்டி இன்னக்கிச் சோறெடுத்தறலாம்.'

**சோறெடுத்தல்** - *காண்க:* **சோறு.**

## ட

**டவ்வு** - *பெ.* 1. **ஏரில் நுகத்தடியையும் கருக்குத்தடியையும் சேர்த்துக் கட்டும் கயிறு.** 'டவ்வக் கொஞ்சம் இறுக்கிக் கட்டு.' 2. **குழந்தைகள் சண்டையிட்டுக் கொள்ளும் போது இனி உன்னோடு பேசமாட்டேன் என்பதை விரலால் காட்டும் குறியீடு.** 'அவனோடு டவ்வு உட்டுட்டன்.'



டவ்வு

## டா

**டாப்பு** - *காண்க:* **சாப்பு.**



டாப்பு

## டு

டுவ்வு - *காண்க:* டவ்வு.

## டொ

**டொக்கை** - பெ. *தாய விளையாட்டில் காய் பழத்திற்கு உள்ளே போகுமுன் இருக்கும் கடைசி வெளிக்கட்டம்.* 'டேய் நீ இன்ன வெட்டுல, போயி டொக்கைலதான் காயெல்லாம் நிறுத்தோனும்.'

## த

**தகடை** - பெ. *நன்றாகப் புடைக்கப்படாத தானியம்.* 'நல்லாப் பொடச்சுப் போடு. தகடையாகக் கெடக்குது.'

**தகுப்பு** - பெ. *வேலை செய்த களைப்பு.* 'கொஞ்சம் உக்கோர்றன். தகுப்பா இருக்குது.'

**தகுமானம்** - பெ. *தகுந்த காரணம்; சமாதானம்.* 'அவனுக்கு என்ன தகுமானம் சொல்ல முடியும்.'

**தங்குண்டி** - பெ. *கட்டுப்பாடற்றுத் தன் விருப்பப்படி நடத்தல்.* 'அந்தப் பையனை ஆரு கேக்கறா, தங்குண்டியாத் திரியறான்.'

**தசுக்கன்** - பெ. *கஞ்சத்தனம் நிறைந்த ஏமாற்றுப் பேர்வழி.* 'அவங்கிட்டக் கேக்காதீங்கடா... அவன் தசுக்கன்டா.'

**தட்டச்சட்டி** - பெ. *மண்ணால் செய்த மூடப்பயன்படும் தட்டையான பாத்திரம்.* 'தட்டச்சட்டிய வெச்சு சோத்த மூடு.'



தட்டச்சட்டி

**தட்டம்** - பெ. *பெண்கள் பூப்பு நன்னீராட்டின் போது உறவினர்கள் எடுத்து வரும் சீர்வரிசை.* 'தெரட்டிக்கு எத்தன தட்டம் வந்தது.'

**தட்டி** - பெ. *கோல்கள் வைத்து ஓலையால் கட்டப்படும் மறைப்பு.* 'இங்க ஒரு தட்டி வெச்சா, மறப்பா இருக்குமில்ல.'

**தட்டு** - பெ. *தானியத் தட்டை.* 'சோளத்தட்டு போர் போட்டாச்சா.'

**தட்டுக்கரயான்** - பெ. *சிறுவர் விளையாட்டுக்களில் ஒன்று.* 'பசங்க தட்டுக்கரையான் கட்டிக்கிட்டு இருக்கறாங்க.'

**தட்டுக்கெடு(தல்)** - வி. *பயனற்ற ஒன்றுக்காகப் பெருமுயற்சி செய்தல்.* 'இதுக்கா இப்பிடி தட்டுக்கெடற'

**தட்டுச்சிட்டு** - பெ. *கம்பு, சோளம் போன்றவற்றின் தட்டைத் தோகைகளில் கூடு கட்டி வாழும் மிகச் சிறிய சிட்டுக்குருவி.* 'டேய்... தட்டுச்சிட்டப் புடிச்சாந்து எதுக்காவுது - உட்ரு.'

**தட்டுப்படு(தல்)** - வி. *பார்வையில் படுதல்.* 'கூடையா... அந்தப் பக்கந்தான் தட்டுப்பட்டாப்பல இருக்குது.'

**தட்டூடு** - பெ. *தானியத் தட்டைகளைக் கொண்டு கூரை வேயப்பட்ட வீடு.* 'அங்கொரு தட்டூடு தெரியுதுல்ல.. அதுக்கும் பக்கத்திலதான்.'

**தட்டைக்காய்** - பெ. *காராமணி.* 'தட்டக்காய் கொஞ்சம் பறிச்சாரேன்.'

**தடச்சட்டி** - *காண்க:* தட்டச்சட்டி.

**தடித்த** - பெ.அ. *குண்டாக உள்ள.* 'அந்தத் தடிச்ச பையனா.'

**தடுக்கு** - பெ. *ஓலையால் (படுக்க, உட்காருவதற்காகப்) பின்னப்பட்ட கீற்று.* 'அந்தத் தடுக்க எடுத்துப் போட்டு உக்கோரு.'

**தடுப்பு** - பெ. *குளிப்பதற்காகவோ, சுவரில்லாத கொட்டகையைச் சுற்றிலுமோ*

ஓலைகளால் கட்டப்படும் மறைப்பு. 'தண்ணி ஊத்திக்க ஒரு தடுப்புக் கட்டுனா ஆரு கேக்கறா.'

**தடுதலை** - பெ. தடை. 'இதுக்கு யாரு தடுதல சொல்லப் போறா.'

**தண்டி** - பெ. சிறுவர் / சிறுமியர் விளையாட்டில் இரு அணிகளாகப் பிரிப்பதற்கு இரண்டு இரண்டு பேராகச் சென்று பூ, மரம், காய் போன்றவற்றின் பெயர்களை வைத்துக்கொண்டு, அணித்தலைவர் களிடம் வந்து 'எது வேண்டும்' எனக் கேட்பர். அவ்விதம் பிரிக்க ஏற்ற சம வயது, உடல் பலமுடைய இருவர். 'நானும் அவனுந் தண்டிடா.'

**தண்டுவன்** - பெ. திருமணமாகாதவன்; செய்து கொள்ளாதவன் (பிரம்மச்சாரி). 'அவந்தான் தண்டுவன். கேக்கறதுக்கு ஆளில்ல, அவனோட உனக்கென்ன சேர்க்கை.'

**தண்டை** - பெ. சிறு குழந்தைகளுக்குக் காலில் போடும் செம்பும் இரும்பும் சேர்த்துப் பின்னப்பட்ட சிறு கம்பி வளையம். 'கொழந்த காலப் பாக்கறதுக்கு நல்லாவே இல்ல. ஒரு தண்ட வாங்கிப் போடு.'

**தண்ணி அடுப்பு** - பெ. தண்ணீர் அடுப்பு; வெந்நீர் தயாரிப்பதற்கான அடுப்பு. 'தண்ணி அடுப்புக்குக் கொஞ்சம் தீயிட்டுப் போடு.'

**தண்ணி ஊத்திக் கொள்ளு(தல்)** - வி. தண்ணீர் ஊற்றிக் கொள்ளுதல்; குளித்தல். 'பையன் தண்ணி ஊத்திக்கிட்டானா.'

**தண்ணிக்காத்தான் பூடு** - பெ. சிறு பை போன்ற மலர்ப் பையுள் தண்ணீர் நிறைந்திருக்கும் ஒருவகைப் பூண்டு. 'தண்ணிக் காத்தான் பூட்டப் புடுங்கு.'

**தண்ணி கட்டு** - வி. (வயலுக்கு) நீர் பாய்ச்சுதல். 'பருத்திக் காட்டுக்கு இன்னக்கித் தண்ணிகட்டோனும்.'

**தண்ணிக் கொட்டம்** - பெ. குளியலறை. 'துண்டு தண்ணிக் கொட்டத்துல கெடக்கும்.'

**தண்ணி மாறுதல்** - வி. வயலுக்கு நீர் பாய்ச்சும் போது மடை மாற்றுதல். 'தண்ணி மாற ஆரு போறது.'

**தண்ணி மொறை** - பெ. ஒரு கிணற்றில் பாகம் உள்ளவர்கள் தண்ணீரை வயலுக்குப் பாய்ச்சப் பிரித்துக் கொள்ளும் நாள் பங்கு. 'இன்னிக்குத் தண்ணிமொறை எங்களுது. நாளக்கி அவுங்களுக்கு.'

**தண்ணி வார்த்துக் கொள்ளு(தல்)** காண்க: தண்ணி ஊத்திக்கொள்ளுதல்.

**தத்தேரி** - பெ. பொறுப்பற்றவள் / ன். 'அவ தத்தேரியாத் திரியறா.'

**தப்பட்டை** - பெ. தட்டையாக உள்ள இசைக்கருவி; பறை. 'எங்கயோ தப்பட்டச்சத்தம் கேக்குது. என்னவா இருக்கும்.'

**தப்பை** - பெ. பட்டையாக வெட்டிச் சீவப்பட்ட மூங்கில் அல்லது பனை மரத் துண்டம் (வீடுகளில் கூரை அமைக்கப் பயன்படும்). 'கொட்டாய்க்குதப்ப நல்லதா பாதது வெய்யி.'

**தமுரு** - பெ. 1. ஆடு, மாடுகளின் முலைக்காம்பு. 'மாட்டுக்கு என்னமோ தெரீல. ஒரு தமுருல பாலே வா்ல. வீக்கமா இருக்குது.' 2. துளை. 'குத்துக்கால்ல தமுரு கொஞ்சம் பெரிசாப் போச்சு.'

**தயிர்க்கொழா** - பெ. மாடுகள் சினையாகிச் சில மாதங்கள் கழிந்ததும் அவற்றின் உறுப்பிலிருந்து தயிர் போன்று வெண்மை நிறத்துடன் வெளியாகும் கெட்டியான திரவம் (இதைக் கொண்டு சினையை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்). 'மாடு செனைடா, தயிர்க்கொழா அடிக்குது பாரு.'

**தயிர்ப்பசண்டை** - பெ. தயிரிலிருந்து கைகளில் ஒட்டிக் கொள்ளும் வெண்ணெய்ப் பசை. 'தயிர்ப் பசண்ட கையில ஒட்டிக்கிடுச்சு.'

**தரம்பக்கட்டை** - பெ. காற்றில் சாய்ந்துவிடாமல் இருக்க, பட்டிப் படல்களுக்கு முட்டுக்கொடுக்கும் மூன்றாகப்

**பிளவுபட்ட கோல்.** 'படலுச் சாயுது. ஒரு தரம்பக்கட்டை இருந்தா முட்டுக்குடு.'

**தரித்தல்** - வி. **குச்சிகளைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டிப் பிரித்தல்:** 'கெழங்குக் குச்சி ஊன்றதுக்குத் தரிக்கோனும்.'

**தருசு** - பெ. **சட்னி, மிளகாய்ப் பொடி போன்றவை நன்கு அரைபடாமல் இருக்கும் தன்மை.** 'நல்லா அரைக்கறதுதான. சட்னி தருசு தருசா இருக்குது.'

**தலக்கட்டு** - பெ. **பரம்பரை.** 'எங்க தலக்கட்டுல ஆருக்கும் இந்த நோவு கெடையாது.'

**தலக்கவுறு** - பெ. **ஆடு, மாடுகளைக் கட்டுவதற்காக அதன் தலைப் பகுதியோடு கோர்க்கப்பட்ட கயிறு.** 'தலக்கவுத்தப் புடுச்சிக் கட்டுடா.'

**தலக்கறி** - பெ. **ஆட்டுத் தலையை வெட்டி அரிந்த கறி.** 'தலக்கறி எடுத்தாந்திருக்கறன்.'

**தலச்சங்குட்டி** - பெ. **ஆட்டின் முதல் குட்டி.** 'தலச்சங்குட்டி, கெடாயாப் போட்டிருக்குது.'

**தலச்சன்** - பெ. **முதல் குழந்தை.** 'இவந்தான் எங்களுக்குத் தலச்சன்.'

**தலச்சுழிப்பு** - பெ. **தலைவிதி / தலை எழுத்து.** 'எந் தலச்சுழிப்பு அப்பிடி இருக்குது.'

**தலதட்டி** - பெ. **சிறுவர் (ஓடித் தொடும்) விளையாட்டு. (தொடுபவர் அருகில் வந்தால் உடனே ஓடுபவர் உட்கார்ந்து கொள்ளலாம். தொடுபவர் தலையைத் தட்டி விட்டால், ஓடுபவரில் உட்காராமல் இருக்கும் வேறு யாராவது வந்து தொட்டு உயிர் கொடுக்கும் வரை எழக்கூடாது).** 'இன்னிக்கித் தலதட்டி வெளையாடலாம்.'

**தலமடை** - பெ. **மதகின் கீழ் வயலிலுள்ள முதல்மடை.** 'அவனது தலமடைக்கிட்ட இருக்கற வயலு.'

**தலமடை வயல்** - பெ. **தலைமடையிலிருந்து வரும் நீர் பாயும் வயல்.** 'தலமடை வயல்ல சீக்கிரம் தண்ணி பாஞ்சுரும்.'

**தலமாடு** - பெ. **கட்டிலில் தலை வைத்துப் படுக்கும் பகுதி.** 'ஏண்டா தலமாடு கூடத் தெரியிலயா உனக்கு.'



தலமாடு

**தலமார்** - பெ. **உழவில் ஏர் திரும்பும் இடம்.** 'தலமாருல திரும்பி ஓட்டத் தெரியிலியா இன்னம்.'

**தலவாரி** - பெ. **மாடு இழுத்துச் செல்லும் ஏற்றப் பாதையின் (வாரி) தொடக்கப் பகுதி.** 'தலவாரிக்கிட்டப் போயி நிக்காத.'

**தலையீத்து** - பெ. **மாடுகள் முதல் சினையாகிக் கன்று ஈனும் பருவம்.** 'இது தலையீத்துக் கெடாரி.'

**தலையுமாரு** - பெ. **வெள்ளை வெற்றிலை, கருப்பு வெள்ளை வெற்றிலை இரண்டையும் கிள்ளிச் சேர்த்து அடுக்குவது.** 'தலையுமாரு இன்னிக்கி என்ன வெல.'

**தவக்கா** - பெ. 1. **தடவை.** 'இந்தத் தவக்கா வெளச்சலு பரவால்ல.' 2. **தவளை.** 'கல்லுக்கடிய இத்தன தவக்கா இருக்குது.'

**தவசம்** - பெ. **தானியம்.** 'இருக்கற தவசம் இந்த வருசம் சோத்துக்கு ஆயிரும்.'

**தவிட்டுச் செல்லு** - பெ. **தவிட்டில் பிடித்திருக்கும் பூச்சி.** 'தவுட்டுச்செல்லு ஏறி ஊடு முழுக்க ஊருது.'

**தவிட்டுப் புறா** - *பெ.* ***கிணற்றுப் பொந்துகளில் கூடு கட்டும் ஒருவகைப் புறா.*** 'அந்தக் கெணத்துல தவுட்டுப்புறா கூடு கட்டியிருக்குது.'

**தழுங்குதல்** - *பெ.அ.* *1.* ***எஞ்சுதல்.*** 'நேத்துத் தழுங்குன மனை. இன்னிக்கி அரநாளுக்குத்தான் வரும்.' *2.* ***பின்தங்குதல்.*** 'வேகமா வாடா, தழுங்காத.'

**தழை** - *பெ.* *1.* ***மூலிகை மருந்து.*** 'ஏங்கலுக்கு அந்தப்பாட்டி தழ குடுக்கும்.' *2.* ***இலைக்கொத்து.*** 'ஆட்டுக்குத்தழை ஒடிச்சிப் போடு.'

**தள்ளி வைத்தல்** - *வி.* ***உடன் வாழப் பிடிக்காமல் மனைவியைப் பிறந்த வீட்டுக்கோ, தனியாகவோ அனுப்பி விடுதல்.*** 'எதுக்குப் பொண்டாட்டியைத் தள்ளி வெச்சானாமா.'

**தளக்கம்** - *பெ.* ***தளர்ச்சி.*** 'கயித்த நல்லாத் தளக்கமாக் கட்டு.'

**தளயலு** - *பெ.* ***கழுத்தில் கயிறு போடாமல், கன்றுக் குட்டிகளுக்கு முன்னங்காலில் கட்டும் கட்டு.*** 'தளயலுப் போட்டுக் கட்டி வெய்யிடா.'

**தளவார்** - *பெ.* ***காளைக் கன்றுகளுக்குத் நடை நன்கு வருவதற்காக இரும்புச் சங்கிலியில் சேர்த்துக் கட்டும் தோல்வார்.*** 'அந்தக் கன்னுக்குத் தளவார் போட்டுக் கட்டு.'

**தளவிசா** - *வி.அ.* ***தளர்வாக.*** 'கவத்த நல்லா தளவிசாக் கட்டு.'

**தளவு** - *பெ.* ***நுனி; உச்சி.*** 'சொக்காத் தளவ எதுக்குடா கடிக்கற.' 'மரத்துத் தளவுல ஏறிக்கிட்டு என்ன வெளையாட்டு.'

**தளுக்கு** - *பெ.* ***ஒருவகைக் காதணி.*** 'காதுல தளுக்குப் போட்டிருக்கறா.'

**தளுக்குப் பூடு** - *பெ.* ***காதில் அணியும் தளுக்கு என்னும் அணிகலன் போலக் காய் காய்க்கும் பூண்டு.*** 'தளுக்குப் பூடு ஊட்டோரத்துலயே மொளச்சிருக்குது.'

**தளுகு** - *பெ.* ***கோயில் பூசையில் படைக்கப்படும் சோறு.*** 'ஆண்டி தளுகு கொண்டாந்து குடுத்திருக்கறான்.'

**தளுகு சோறு** - ***காண்க: தளுகு.***

**தளைக்கயிறு** - *பெ.* ***மரம் ஏறும்போது இரண்டு கால்களையும் சேர்த்துப் போட்டுக் கொள்ளும் கால் கயிறு.*** 'கால்ல தளக்கவுறு மாட்டிக்கிட்டான்னா நிக்காம ஏறி ஏறங்குவான்.'

**தளையல்** - *பெ.* ***ஆடு, மாடுகளை மேய அவிழ்த்து விடும் போது குனிந்து நடக்கும் விதத்தில் இரு கால்களையும் சேர்த்துப் போட்டுவிடும் முடி.*** 'தளையல் போட்டுக் கூட இந்த ஓட்டம் ஓடுது.'

**தறுதலை** - *பெ.* ***போக்கிரி (திட்டுச் சொல்).*** 'அவன் கெடக்கறான் தறுதல.'

**தன்னப்பால** - *வி.அ.* ***தனக்குத்தானே.*** 'தன்னப்பால சிரிக்கறான். பேசறான்.'

## தா

**தாக்கு**[1] - *வி.* ***இடித்துக் கொள்:*** 'புண்ணத் தாக்கிக்கிட்டியா.'

**தாக்கு**[2] - *பெ.* *1.* ***பகுதி; வயலின் குறிப்பிட்ட ஒரு பகுதி.*** 'நடக்கப் போறதை எல்லாம் தாக்குத் தாக்காச் சொல்றாளாம்.' 'அந்தத் தாக்குல ஒழவு ஓட்டோனும்' -

**தாக்குப்பிடி** - *பெ.* ***சமாளித்துக் கொள்.*** 'பசின்னாக்கூட தாக்குப் புடிப்பான்.'

**தாக்கோழி** - *பெ.* ***தாய்க்கோழி; அடைகாத்துக் குஞ்சு பொறிக்கும் பெட்டைக் கோழி.*** 'அந்தத் தாக்கோழி கழுகையே பறந்து அடிக்கும்.'

**தாங்கு(தல்)** - *வி.* ***குழந்தைகளுக்கு அதிகச் செல்லம் கொடுத்துக் கவனித்தல்.*** 'அவன இந்தத்தாங்குத் தாங்காட்டி சோறு திங்க மாட்டானா.'

**தாட்டி** - *பெ.* ***தடவை.*** 'இந்தத் தாட்டி பாஸாயிருவியா.'

**தாட்டு** - பெ. **அனுப்பு.** 'அவன மொதத் தாட்டு.'

**தாட்டுமை** - பெ. **காரியம் சாதிக்கும் சாமர்த்தியம்.** 'அவன் தாட்டுமை உள்ள ஆளு.'

**தாட்ரிக்கம்** - பெ. **பலத்தோடு அழகாக அமைந்த உடல்.** 'ஆளு நல்லா தாட்ரிக்கமா இருப்பான்.'

**தாண்டிக்கெணறு** - பெ. **விவசாயத்திற்குப் பயன்படுத்த முடியாத சிறு கிணறு.** 'தாண்டிக் கெணத்துத் தண்ணியில நெல்லா நட முடியும்.'

**தாண்டுகால்** - பெ. **ஏதாவதொன்றில் இருபுறமும் கால்களைத் தொங்க விட்டபடி இருத்தல்.** 'எரும மேல தாண்டுகால் போட்டு உக்காந்திருக்கறான்.'

**தாத்தன்** - பெ. **அப்பாவின் அப்பா.** 'எங்க தாத்தனூட்டுக்குப் போறன்.'

**தாதரா** - பெ. **புன்செய் நிலங்களில் இருக்கும் ஒருவகைக் களை.** 'தாதி இருக்கிறஊடும் தாதரா இருக்கிற காடும் உருப்படாது.' (பழமொழி)

**தாதராப் புழு** - பெ. **தாதரா என்னும் களைச் செடியில் இருக்கும் புழு; (பசு நிறத்தில் பெரு உருண்டையாகச் சுருண்டு கிடக்கும்).** 'காடு முழுக்கத் தாதராப் புழுவேறிக் கெடக்குது.'

**தாம்பு** - பெ. **தானியக் கதிர்களைப் பரப்பி அதன்மேல் மாடுகளை நடக்கவிட்டுக் கதிரையும் தானிய மணிகளையும் தனித்தனியாகப் பிரித்தல்; போரடிப்பு.** 'நாளைக்கு கம்மம்பூட்டை தாம்பு ஓட்டீரலாம்.'

**தாம்புக்கண்ணி** - பெ. **போராடிக்கும் களத்தில் மாடுகளைப் பிணைக்கும் கயிறு.** 'தாம்புக் கண்ணிய இன்னங் குறுகலாக் கட்டு.'

**தாம்புக்கயிறு** - பெ. **காண்க: தாம்புக்கண்ணி.**

**தாம்பு மாடு** - பெ. **தானியக் கதிர்கள் போரடிப்பதற்காகப் பயன்படுத்தும் மாடு.** 'தாம்புமாட்டுக்கு வாக்கூடையக் கட்டி உடு.'

**தாயக்கரம்** - பெ. **தாயம் விளையாடப் போடப்படும் கட்டம்.** 'அவுங்கூட்டுல காரையிலயே தாயக்கரம் போட்டிருக்கறாங்க.'

**தாயம்** - பெ. **தாய விளையாட்டில் ஒன்றுபோடும் எண்ணிக்கை.** 'தாயத்துக்கு மட்டுந்தான் தொவையோனும்.'

**தார்க்குச்சி** - பெ. **வண்டியில் மாட்டை அடித்து ஓட்டப் பயன்படும் கோல்.** 'தார்க்குச்சி எதுக்குடா வெச்சிருக்கற, ஓட்டு.'

**தார்க்கோமணம்** - **காண்க. உருட்டுக்கோமணம்.**

**தார்சு** - பெ. **கான்கிரீட்.** 'தார்சு போட்டா ஊடு கட்டறீங்க.'

**தார்சூடு** - பெ. **தார்சு வீடு; கான்கிரீட் தளம் போடப்பட்ட வீடு.** 'அவுங்களுக்கென்ன தார்சூடு கட்டிப்புட்டாங்க.'

**தார்ப்பாய்** - பெ. **வண்டியில் பாரத்திற்கு மேல் (மழை போன்றவற்றால் பாதிக்காமல் இருப்பதற்காகப்) போடப்படும் மூடு துணி.** 'தார்ப்பாய நல்லா மூடிக் கட்டுனியா.'

**தாரளன்** - பெ. **தாராளமாகச் செலவு செய்பவன்.** 'தாராளனுக்கு ஒரு செலவு' - பழமொழி.

**தாரை** - பெ. **மனிதன், ஆடு, மாடு போன்ற அனைத்தின் கால் சுவடு.** 'இந்தப் பக்கம் ஆட்டுத் தாரை தெரியுது. பார்க்கலாம் வா.'

**தாலி பெருகு(தல்)** - வி. **தாலிக்கயிறு நைந்து போதல்.** 'தாலி பெருகிப் போச்சு. மாத்தோனும்.'

**தாவாக்கட்டை** - பெ. **முகத்தின் (வாய்க்குக் கீழுள்ள) அடிப்பகுதி.** 'தாவாக்கட்டையத் திருப்பீடுவன்.'

**தாவு** - பெ. 1. **இரு கைகளாலும் சேர்த்து அள்ளும் தீவன அளவு.** 'ஒரு தாவு பில்லு அள்ளி மாட்டுக்குப் போடு.' 2. **ஓர் இடத்தின் பகுதி.** 'அந்தத் தாவுல பாரு. கெடக்கும்.'

**தாழ்மடம்** - *பெ.* **கதவிலிருந்து சுவரில் தாழ்ப்பாள் போய்ப் பொருந்தும் பகுதி.** 'அந்தக் காலத்துல தாழ்மடம் நல்லா பெரிசா வெச்சிருப்பாங்க.'

**தானாவதி** - *பெ.* **இருவீட்டாருக்கும் இடையில் தூது சென்று பேசித் திருமணத்திற்கு ஏற்பாடு செய்பவர் (இப்போது இருக்கும் தரகர் போன்றவர் என்றாலும், பணம் வாங்குவதில்லை).** எங்கலியாணத்துக்கு அவருதான் தானாவதியா இருந்தாரு.'

## தி

**திக்கசம்** - *பெ.* **மிகப் பெரிய உருவம்.** 'அவரு ஆளு திக்கசமாட்டம் இருப்பாரு.'

**திக்கத்த சாத்தரம்** - *பெ.* **போக்கிடமற்றவள் / ன் (திட்டுச் சொல்).** 'இந்தத் திக்கத்த சாத்தரம் எங்க வந்து சேந்தது.'

**திட்டி** - *பெ.* **கண் திருஷ்டி.** 'கொழந்தைக்கித் திட்டி பட்டிருச்சாட்டம் இருக்குது. சுத்திப் போடோணும்.'

**திட்டி(த்தல்)** - *வி.* **ஒன்றை வேறொன்றாக (அமானுஷ்ய சக்திகொண்டு) மாற்றுதல்.** 'சாமி திருடங்களயெல்லாம் கல்லாத் திட்டிச்சுட்டாரு.'

**திட்டு** - *பெ.* **1. சிறு மண்மேடு.** 'திட்டு மேல ஏறி நின்னு பாரு.' **2. வசை.** 'என்னயத் திட்டிக்கிட்டே இருக்கறான்.'

**திடுமுட்டி** - *பெ.* **ஊருக்கு ஒரு விசயத்தை அறிவிப்பதற்காகத் தொடைகளுக்கு நடுவில் வைத்து ஓசை எழுப்பும் இசைக்கருவி.** 'ஒன்னு தெரிஞ்சா ஒடனே திடுமுட்டி அடிச்சிரு.'

**திடுமுட்டு(தல்)** - *வி.* **ஊர்முழுக்கவும் ஒரு விசயத்தைப் பரப்புதல்.** 'இவனுக்குத் தெரிஞ்சிடுச்சா. ஊரே திடுமுட்டிருவான்.'

**திண்டுமல்லன்** - *பெ.* **உருவத்தில் பெரியவன்.** 'திண்டுமல்லனாட்டம் இருக்கறான் ஒரு வேலைக்கும் ஆவறதில்ல.'

**திப்பி** - *பெ.* **இடிபட்ட மாவில் ஜலித்துப் பிரித்து எடுத்த சரியாக இடிபடாத மாவு.** 'இன்னம் இடிக்கோணும். திப்பி திப்பியா இருக்குது.'

**திராணி** - *பெ.* **வலு.** 'எங்கிட்ட பேச உனக்குத் திராணி இருக்குதாடா.'

**திருகாணி** - *பெ.* **முறுக்கிக் கொள்ளாமல் இருப்பதற்காக ஆடு மாடுகளின் கழுத்துக் கயிற்றில் பிணைத்திருக்கும் '8' வடிவிலான இரும்பு வளையம்.** 'வெள்ளாட்டுக்கு ஒரு திருகாணியோட கவுறு போடு.'

**திருகினி** - *பெ.* **காண்க: திருகாணி.**

**திருகினிச் சொம்பு** - *பெ.* **திருகி மூடும்படி மேல்மூடி அமைந்த சொம்பு.** 'திருகினிச் சொம்புல பால் வாங்கியா.'

**திருகுதண்டம்** - *பெ.* **பிறரிடம் செய்தியைச் சொல்லாமல் மறைத்தல்.** 'ஆளு ஏதோ திருகுதண்டம் பண்றாண்டா.'

**திறவை** - *பெ.* **பிரம்பு, கொடிகள் போன்றவற்றால் பின்னப்பட்ட பிரிமணை.** 'இந்தக் கொடியில ரண்டு திறவ பின்னீரலாம்.'

**திறவைக்கொடி** - *பெ.* **காண்க: திறவை.**

## தீ

**தீட்டூடு** - *பெ.* **இழவு வீடு.** 'தீட்டூட்டுக்குப் போய்ட்டு வந்து தண்ணி ஊத்திக்காத இருக்கறாம் பாரு.'

**தீட்டுச்சோறு** - *பெ.* **இழவு வீட்டிலும் பூப்பு நன்னீராட்டு செய்யும் வீட்டிலும் பரிமாறப்படும் சோறு. (பக்தி, விரதம் போன்றவற்றைக் கடைபிடிப்பவர்களும் சாமியாடுபவர்களும் இதனை உண்ணமாட்டார்கள்).** 'தீட்டுச் சோறு திங்கறத உட்டு வருசமாச்சு.'

**தீம்பு** - பெ. ***தீங்கு; கெடுதல்.*** 'ஊட்டுக்குத் தீம்பக் கொண்டாந்துட்டான்.'

## து

**துக்கிலியூண்டு** - பெ. ***மிகமிகச் சிறியது.*** 'துக்கிலியூண்டு சுண்ணாம்பு குடு.'

**துக்கெரகம்** - பெ. ***ஆகாதவள் / ன் (திட்டுச்சொல்).*** 'இந்தத் துக்கெரகம் எங்க வந்திச்சு.'

**துச்சணக்காரன்** - பெ. ***கெடுதி செய்பவன்; துடுக்குத்தனம்.*** 'துச்சணக்காரனுக்குப் பொச்சுல செலந்தி.' (பழமொழி)

**துடுமுட்டி** - ***காண்க: திடுமுட்டி.***

**துத்தாரி** - பெ. ***அறுப்புக் காலத்தில் எல்லோரையும் எழுப்ப (அதிகாலையில்) ஊதும் சிறு இசைக் கருவி.*** 'துத்தாரி ஊதியாச்சி, எந்திரி.'

**துப்பட்டி** - பெ. ***போர்வை.*** 'வெய்யக்கூட வந்திருச்சி. துப்பட்டிய இன்னம் எடுக்க மாட்டீங்கற.'

**துப்புட்டு** - ***காண்க: துப்பட்டி.***

**தும்பி** - பெ. ***ஏற்றம் இறைக்கப்படுகையில் நீர்மொண்டு வரும் தோலால் ஆன கூடை (பறி)யின் (நீர் வெளியேறுவதற்காக வால் போலிருக்கும்) பகுதி.*** 'தும்பிய இன்னங் கொஞ்சம் இழுத்துக் கட்டு.'

**தும்பிக்காது** - பெ. ***தும்பியில் கயிறு கோர்த்துக் கட்டுவதற்காக வைக்கப்பட்டிருக்கும் தோல் வளையம்.*** 'தும்பிக்காது அறுந்து போச்சு. தைக்கோனும்.'

**தும்பு** - பெ. ***ஆடுகளைக் கட்டும் கயிற்றில், அவற்றின் கழுத்தில் போடும் பகுதியில் இருபிரிவு இருக்கும். ஒருபுறம் இறுகிய முடி. எதிர்ப்புறம் அந்த முடியை நுழைத்து மாட்டிவிடுவதற்கேற்ற கயிற்றுப் பிளவு.*** 'குட்டிக்குத் தும்பக் கழட்டி உடு. போய் மேயட்டும்.'

**துலுக்கு** - வி. ***சாமிக்குப் பலியிடும்போது ஆட்டுக் கிடாய்கள் தீர்த்தம் தெளித்ததும் தலையை அசைத்து, உடலைச் சிலிர்த்து உதறுதல்.*** 'அவங்க கெடா துலுக்கறதுக்குத்தான் ரொம்ப நேரமாச்சு.'

**துள்ளுகெடா** - பெ. ***வெட்டுக்கிளி.*** 'துள்ளுகெடா மேல உழுந்ததுக்கா இப்பிடி கத்துன.'

**துளியூண்டு** - பெ.அ. ***மிகச் சிறியது.*** 'துளியூண்டு வெத்தல குடு.'

## தூ

**தூக்கப்பொணம்** - பெ. ***பிணம்போல் எந்நேரமும் தூங்குபவர் (திட்டுச் சொல்).*** 'இந்தத் தூக்கப்பொணத்தக் கட்டிக்கிட்டு அழுவ முடியில.'

**தூக்கு** - பெ. ***துணி உலர்த்த, தொங்க விட கட்டப்படும் கயிறு அல்லது கம்பி.*** 'தூக்குல சொக்கா காயப் போட்டிருக்கறன்.'

**தூக்குப் பை** - பெ. ***கையில் பிடித்துச் செல்லும் துணிப்பை.*** 'தூக்குப் பை இருந்தாக் குடு.'

**தூக்குப்போசி** - பெ. ***கையில் பிடிக்கும் வளையமுடைய சோறு எடுத்துச் செல்லும் பாத்திரம்*** 'தூக்குப் போசியில சோறு ஊத்தி வெய்யி.'

**தூக்குப்போணி** - **காண்க. தூக்குப்போசி.**

**தூக்குவாளி** - **காண்க. தூக்குப்போசி.**

**தூத்துகூடை** - பெ. ***தானியம் தூற்றுவதற்காகப் பயன்படும் கூடை.*** தூத்து கூடைய எடுத்தா.'

**தூமை** - பெ. ***மாதவிலக்கின்போது வெளியாகும் ரத்தக்கழிவு.*** 'அவன் என் தூமையைக் குடிச்சானாமா.'

**தூரி** - பெ. ***ஊஞ்சல்.*** 'மரத்துல தூரி கட்டியிருக்கறம்.'

**தூரிக்கல்லு** - *பெ.* **கோயிலில் நிறுத்தப்பட்டிருக்கும் கல்லால் ஆகிய ஊஞ்சல்.** 'கோயில்ல தூரிக்கல்லு பேந்து போச்சு.'

## தெ

**தெகை(தல்)** - *வி.* **அமைதல்.** 'இந்தப் பொண்ணாச்சும் தெகஞ்சுதுன்னாப் பரவால்ல.'

**தெங்கோடி** - *பெ.* **தெற்கு மூலை.** 'தெங்கோடியில கெடக்குது பாரு.

**தெணாசு** - *பெ.* **மாட்டின் மேலிருக்கும் ஈ வகை.** 'அந்தத் தெணாச அடிச்சு எறி.'

**தெத்தலு** - *பெ.* **எலும்பும் தோலுமான மாடு.** 'அந்தத் தெத்தலப் புடிச்சுக் கட்டு.'

**தெப்பலம்** - *வி.அ.* **உடல் மெலிவு.** 'ஆளு தெப்பலமாப் போயிட்டான்.'

**தெரக்கா** - *வி.அ.* **மும்முரம்.** 'வேல தெரக்கா நடக்குது.'

**தெரகோல்** - *பெ.* **மயிர்கோதும் நீளக்கோல்.** 'தெரகோலு எங்க வெச்சனோ தெரீல.'

**தெரட்டி** - *பெ.* **பூப்பு நன்னீராட்டு விழா.** 'பொண்ணுக்குத் தெரட்டி. கண்டீப்பா வந்தரோனும்.'

**தெவை** - *வி.* 1. **தானியங்களின் தோல் நீக்குதல்.** 'கம்ப நல்லாத் தெவச்சு வெய்யி.' 2. **மழுங்கிய அரிவாள் வாயைக் கூராக்குதல்.** 'அரிவாளத் தெவையோனும்.'

**தெவையச் சோறு** - *பெ.* **விரதமிருப்பவர்கள் சாப்பிட உப்பில்லாமல், சோற்றில் செய்யப்படும் பண்டம்.** 'வயிறு ரொம்ப தெவையச் சோறு தின்னுட்டான்.'

**தெவையம்** - *காண்க:* **தெவையச் சோறு.**

**தெள்ளுமணி** - *பெ.* **பிள்ளைகளைக் குறித்துக் கிண்டலாகச் சொல்லும் பெயர்.** 'இந்தத் தெள்ளுமணி எனக்குப் பொறந்திருக்குதே.'

**தெளுவு** - *பெ.* **பனை, தென்னை மரங்களில் இருந்து பெறப்படும் பானம்; கள்; பதநீர்.** 'அந்தப் பனையில தெளுவு பரவால்லயா.'

**தென்னநதடுக்கு** - *பெ.* **தென்னோலையால் பின்னப்பட்ட உட்காரும் கீற்று.** 'அந்தத் தென்னநதடுக்க எடுத்துப் போடு.'

**தென்னமட்டை** - *பெ.* **தென்னை ஓலை.** 'ரண்டு தென்னமட்டை வெட்டிப் போடு.'

**தெனுசு** - *காண்க:* **தெணாசு.**

## தே

**தேக்குருட்டு** - *பெ.* **ஓலைக் கொட்டகையின் உச்சியில் பொருத்தப்படும் உருண்டையான தேக்குமரக் கட்டை.** 'தேக்குருட்டுல கரையான் ஏறுது.'

**தேக்குருள்** - *காண்க:* **தேக்குருட்டு.**

**தேங்காத்தொட்டி** - *பெ.* **சிரட்டை; பருப்பை எடுத்தபின் இருக்கும் தேங்காய் ஓடு.** 'தேங்காத் தொட்டிய அடுப்புல போடு.'

**தேசப்புளியங்காய்** - *பெ.* **சீனிப் புளியங்காய்.** 'தேசப் புளியங்கா கொத்துக் கொத்தாக் காச்சிருக்குது.'

**தேட்டம்** - *பெ.* **விருப்பம்.** 'அவனுக்கு அதுல தேட்டமில்ல.'

**தேய்ப்புமுட்டி** - *பெ.* **வெல்லப்பாகை உலர்த்துவதற்காகத் தேய்க்கப் பயன்படும் நீண்ட காம்புடைய உருளையான மரத்துண்டு.** 'தேய்ப்பு முட்டில சக்கரையத் தேச்சு உடு.'

**தேரைக்காய்** - *பெ.* **மரத்திலிருக்கும் போதே கெட்டுப்போன தேங்காய் (தேரை அதன் மேல் உட்கார்ந்தால் அவ்விதம் கெட்டுப்போகும் என்பது நம்பிக்கை).** 'இந்தத் தேங்கா ஆவாது. தேரக்காயாப் போச்சு.'

**தேவை** - பெ. ***திருமணக் காரியம்***. 'பொண்ணுக்கு ஒரு தேவை பண்ணிட்டாப் போதும்.'

**தேன்சிட்டு** - பெ. ***பூக்களில் தேன் உறிஞ்சும் சிட்டுக் குருவி வகை***. 'தேன்சிட்டுப் பாரு, கருப்பா மினுமினுன்னு அழகா இருக்குது.'

## தொ

**தொக்கடவு** - பெ. ***மனிதர்கள் செல்லும் அளவுக்கு வேலியில் உருவாக்கப்படும் சிறு வழி***. 'எதுக்குத் தடுமாரற. வேலியில தொக்கடவு இருக்குது அதுல போ.'

**தொக்கடா** - வி.அ. ***உடல் உறுதியற்றுச் சோர்வுடன் (நடத்தல்)***. 'அவம்பாரு தொக்கடா தொக்கடான்னு நடக்கறான்.'

**தொங்குவாது** - பெ. ***சிறுவர்கள் மரத்திலேறிப் பிடித்துத் தொங்கிக் கீழே குதிக்கப் பயன்படும் கிளை***. 'தொங்குவாது வெளையாட்டு வெளையாடலாம்.'

**தொங்குனி** - பெ. ***திட்டுச்சொல். மிக அதிகமாகப் பொய் சொல்லுபவன்***. 'அந்தத் தொங்குனிகிட்டப் போய் நெசத்த கறக்க முடியுமா?'

**தொச்சம்** - பெ. ***உடல் ஊனம்; அம்மா, அப்பா யாரேனுமோ இருவருமோ இல்லாத குறை***. 'பையனுக்குக் காலுக் கொஞ்சம் தொச்சம்.' 'எதாச்சும் தொச்சமிருக்கற ஊடாப் பாத்துத்தான் பொண்ணக் குடுக்கோனும்.'

**தொசக்கான்** - பெ. ***குண்டாக இருந்தும் உடல் பலமற்றவள் / ன்***. 'அவன் ஒரு தொசக்கான்.'

**தொட்டி உருளை** - பெ. ***கிணற்றில் ஏற்றக்கால்களை இணைத்து இருக்கும் உருளை***. 'ஏத்தம் எறச்சு முடிச்ச ஓடன தொட்டி உருளயக் கழட்டி வெச்சரோனும்.'

**தொட்டிக்கட்டு வீடு** - பெ. ***நாற்புறக் கூரைகளிலிருந்தும் நீர் வந்து விழும்படி மையம் கொண்ட வீடு***. 'அவுங்களுது அந்தக் காலத்துத் தொட்டிக் கட்டு வீடு.'

**தொட்டு** - பெ. ***நிலக்கடலைத் தோல் பகுதி***. 'கல்லக்காத் தொட்ட அள்ளிக் கொட்டு.'

**தொடக்கறி** - பெ. ***ஆட்டுத் தொடை இறைச்சி***. 'தொடக்கறிய மிச்சம் வெச்சா நாளக்கி கொழம்பு வெச்சுக்கலாம்.'

**தொடம்** - பெ. ***எண்ணெய் போன்றவற்றை எடுக்கப் பயன்படும் நீண்ட கம்பியுடன் கூடிய கிண்ணம்***. 'தொடத்த எடுத்து எண்ணெ மொள்ளு.'

**தொடற விளையாட்டு** - பெ. ***சிறுவர் ஓடித் தொட்டு விளையாடும் விளையாட்டு***. 'தொடற விளையாட்டுப் போடலாமா.'

**தொடு(தல்)** - வி. ***செருப்பைக் காலில் அணிதல்***. 'செருப்பத் தொட்டுக்கிட்டு வா.'

**தொடுப்பு** - பெ. ***முறையற்று ஆணும் பெண்ணும் கொள்ளும் உறவு***. 'அவுங்களுக்குள்ள ஏதோ தொடுப்பு இருக்குது.'

**தொண்டி** - காண்க: **தொட்டி உருளை**.

**தொண்டு** - பெ. ***ஒழுக்கமற்ற ஆண்/பெண்; பலரோடு உறவு கொள்ளும் ஆண் / பெண்***. 'அவ சுத்தத் தொண்டு.' 'இந்தப் பையன் தொண்டாப் போயிட்டானே.'

**தொண்டுப்பட்டி** - பெ. ***மாடு கட்டும் தொழுவம்; தீவனப் போர், சிறு பொருட்கள் வைக்கும் குடிசை போன்ற அனைத்தும் (ஒரு சில குறையலாம்) சேர்ந்த இடம்***. 'தொண்டுப்பட்டியில மாட்டக் கொண்டோயிக் கட்டு.'

**தொண்டு மண்டி** - பெ. ***இரண்டு முழங்கால்களையும் நிலத்தில் ஊன்றிக்கொண்டு நிற்கும் நிலை***. 'அப்பெல்லாம் பண்ணயக்காரனுக்கு முன்னால தொண்டுமண்டி போட்டுக்கிட்டுத்தான் நிப்பாங்க.'

**தொண்டு முட்டி** - பெ. ***எருமையோ மனிதனோ விரைந்து ஓடாமலிருப்பதற்காக முன்னங்கால்களுக்கிடையே கட்டப்படும் சாமான்***. 'அவனுக்குத் தொண்டுமுட்டி கட்டியுட்டாத்தான் சரிப்படுவான்.'

**தொத்துகால்** - *பெ.* **எட்டாத வேலி, செடி கொடிகளை மேய முன்னங்கால்களைஅவற்றின் மேல் வைத்துக் கொண்டு வெள்ளாடுகள் நேராக நிற்கும் நிலை.** 'அங்க பாரு தொத்துகாலுப் போட்டுக்கிட்டு மேயுது.'

**தொப்பக்கட்டை** - *பெ.* **வண்டியில் பாருக்குக் கீழ் இரு சக்கரங்களையும் இணைக்கும் கட்டை.** 'தொப்பக் கட்டையில ஆரோ மையில எழுதியிருக்கறான்.'

**தொப்பல்** - *வி.அ.* **முழுவதும், சிறிதும் இடைவெளி இன்றி.** 'எங்காச்சும் நின்னு வரக்கூடாது... தொப்பலா நனஞ்சு போயிட்டயே.'

**தொப்பை** - *பெ.* **புளியம்பழத் தோல்.** 'தொப்பைய உறிச்செரி.'

**தொம்பை** - *பெ.* **தானியங்களைச் சேகரித்து வைக்க மூங்கிலால் பின்னப்பட்ட (மூடியுடன் கூடிய) பெரிய கூடை.** 'தொம்பையில, கொஞ்சம் கம்பள்ளியா.'

**தொய்யல்** - *பெ.* **ஒரு வகைக் கீரை.** 'கொஞ்சம் தொய்யப் பொறிச்சாந்தாக் கடையலாம்.'

**தொல்லி** - *பெ.* **காய்களின் தோல்.** 'சொரக்காத் தொல்லிய அரிஞ்செறி.'

**தொலவு** - *பெ.* **பெருஞ்சண்டையின் விளைவாய்ப் பங்காளிக் குடும்பங்களிடையே தெய்வ சாட்சியாய் நிகழும் தொடர்பு அறுதல் (மீறுவது தெய்வ குற்றம். மீண்டும் இணைவது என்றால் தெய்வ சந்நதியில் நடக்கும்).** 'அவுங்களுக்கும் எங்களுக்கும் தொலவு. அவுங்க ஊட்டுச் சோற நாந்திங்க மாட்டன்.'

**தொலாக்கட்டை** - *பெ.* **வீட்டுக் கூரையில் விட்டமல்லாத சிறுகட்டை.** 'தொலாக்கட்டைக்கு நேராப் பாரு. எலி ஓடுது.'

**தொலாவு(தல்)** - *வி.* **தேடுதல்.** 'எவ்வளவு நேரமா உன்னயத் தொலாவறம்.'

**தொலித்தல்** - *வி.* **உரித்தல்.** 'கல்லக்கா தொலிக்க வாறியா.'

**தொலை** - *பெ.* **ஏற்றம் உள்ள கிணற்றுப் பகுதி.** 'தண்ணி கொண்டார தொலைக்குப் போனா.'

**தொலைமேடு** - *பெ.* **கிணற்றில் ஏற்றம் அமைந்துள்ள மேட்டுப் பகுதி.** 'தொல மேட்டுல நின்னு பாத்தன்.'

**தொவை** - *பெ.* **தாய விளையாட்டில் காயை வெளியே நகர்த்தத் தொடங்குதல்.** 'நீ இன்னம் தொவையவே இல்லயா.'

**தொளக்குழி** - *பெ.* **கிணற்றினுள் ஏற்றச்சால் வந்து நீர் மொள்ளும் (மற்ற பகுதிகளை விட ஆழமாக்கப்பட்டிருக்கும்) குழிப்பகுதி.** 'தொளக்குழியில முழுகி மண்ணெடுக்கோனும்.'

**தொழுவாடு** - *பெ.* **வழக்கம்.** 'அவனுக்குப் பொய்ப் பேசறதே தொழுவாடாப் போச்சு.'

**தொளைக்கல்** - *பெ.* **ஏற்றக்கால் செருகும்படி துளையிடப்பட்டு கிணற்றுக்குள் லேசாக நீட்டிக் கொண்டு இருக்கும் வகையில் பதிக்கப்பட்ட கல்.** 'தொளக்கல்லு மேலு இருந்து குதிக்காதடா.'



தொளைக்கல்

**தொறப்பு** - *பெ.* **பூட்டு.** 'தொறப்ப எங்க வெச்சனோ தெரீல.'

**தொறப்புக்குச்சி** - *பெ.* **சாவி.** 'தொறப்புக்குச்சி எங்கட்டத்தான் இருக்குது.'

**தொறப்புக்கை - காண்க: தொறப்புக்குச்சி.**

**தோனை** - *பெ.* **வெண்குட்டம். உடலில் தோல் வெள்ளை நிறமாக இருத்தல்.** 'அவனுக்கு ஒடம்பெல்லாம் தோன பரவது.'

## தோ

**தோடு** - *பெ.* **நுங்கு, பனம்பழம் இவற்றின் மேலிருக்கும் மூடி; பருத்திப் பஞ்சு எடுத்த அடிப்பகுதி.** 'தோட்டப் பிச்சு எறிஞ்சுட்டு பனங்காயச் சுடு.'

**தோண்டு** - *பெ.* **மண்ணின் மேற்பகுதி நீரை வடித்து விடுவதற்காக ஆழமாகத் தோண்டப்படும் வாய்க்கால்.** 'மஞ்சக் காட்டுக்குத் தோண்டு புடிச்சு உடு.'

**தோணி** - *பெ.* **மழைநீர் கீழே போய் விழும்படி இரு கூரைகளுக்கிடையே சொருகும் தகரம்.** 'தோணி ஓட்டையாப் போச்சு. ஒழுவுது.'

**தோது** - *பெ.* **வசதி; விபரம்.** 'எடம் தோதா இருக்குதா.' 'பையன் நல்ல தோது.'

**தோப்பரை** - *பெ.* **தோலால் செய்த (சக்கிலியர் தம் கருவிகளை வைத்துக் கொள்ளும்) பெரிய பை.** 'சொக்கா என்னடா தோப்பரையாட்டம் இருக்குது.'

**தோரணப்பலகை** - *பெ.* **ஏற்றக் கால்களை இணைக்கும் மேல் பலகை.** 'தோரணபலவ இத்துப்போச்சு.'

**தோவ மொட்டு** - *பெ.* **ஓடு முதிராத முட்டை (அடுத்த நாளுக்கான முட்டையை முதல் நாளே கோழி வைத்துவிட்டால் இவ்விதமான முட்டை கிடைக்கும். இந்த முட்டை இடும் கோழியை உடனே கொன்று சமைத்து விடுவர்).** 'இந்தக் கோழி தோவமொட்டு இட்டிருக்குது.'

**தோலான் துருத்தி** - *பெ.* **அடியாட்கள்; கீழானவர்கள்.** 'தோலான் துருத்தி எல்லாம் எனக்குப் புத்தி சொல்ல வந்துட்டாங்க.'

## ந

**நக்கிரி** - *பெ.* **கீரை.** 'இன்னக்கி நக்கிரி கடைஞ்சிருக்கறன்.'

**நங்கு** - *பெ.* **எல்லாவற்றையும் உண்ணாமல், நாக்குச் சுவை பார்த்து, பலவற்றை உண்ணாமல் ஒதுக்கி விடும் தன்மை.** 'இப்படி நங்கு பாத்தா வவுறு நெறையுமா?'

**நங்கை** - *பெ.* **அண்ணனின் மனைவி (அண்ணி); கணவனின் அக்கா, மனைவியின் அக்கா.** 'உங்க நங்க கூப்புடுதுடா.'

**நங்கையா - காண்க: நங்கை**

**நச்சுதல்** - *வி.* **எதையாவது கேட்டு இடைவிடாமல் குழந்தைகள் தொந்தரவு செய்தல்.** 'சும்மா நச்சிக்கிட்டே இருக்காதடா.'

**நசியம்** - *பெ.* 1. **மாடுகள் சினையாவதற்கான பருவ அறிகுறி (அதன் பெண் குறியைக் கையால் தொட்டால் அசையாமல் நிற்றல், பெண் குறியிலிருந்து ஒருவகை திரவம் வடிதல் போன்றன).** 'மாட்டுக்கு இதுதான் நல்ல நசியம். காளைக்குக் கொண்டோ.' 2. **விருப்பு எனப்படும் ஒருவகை நோய் கண்ட மாடுகளுக்க குறுமிளகு, வெற்றிலை, சீரகம், பூண்டு ஆகியவற்றின் சாறு கலந்து கொடுக்கும் மருந்து.** 'மாட்டுக்கு நசியம் குடித்திருக்கறன். நல்லாப் போயிரும்.'

**நஞ்சசோறு** - *பெ.* **நைந்த சோறு, கெட்டுப் போன சோறு.** 'நஞ்ச சோத்தத் தின்னிருக்கரென். வவுறு வலிக்குமா.'

**நஞ்சு** - *பெ.* **ஆடு, மாடுகள் ஈன்றதும் சில மணி நேரம் கழித்து வரும் உதிரமும் சதையும் கலந்த, கொடி போன்ற நீளமான**

சதைக்கே காளம். (இதை ஆடு, மாடுகள் தின்றுவிட்டால், பால் இல்லாமல் போய்விடும்). 'குட்டிபோட்டு இவ்வளோ நேரமாச்சு. இன்னம் நஞ்சு போடலியா.'

நஞ்சுக் கொடி - காண்க: நஞ்சு

நட்டம் - பெ. செங்குத்து. 'படி நட்டமாப் போய்க்கிட்டே இருக்குது.'

நட்டு - பெ. தழைந்து வருவதற்காக வெட்டி நடப்படும் மரப்போத்து. 'ரண்டு நட்டு கொண்டாந்து நடு.'

நடமாத்து - பெ. நடை மாற்று (நடை விரிப்பு); மணப்பெண், மண மகன் நடப்பதற்காக விரிக்கப்படும் துணி. 'நடமாத்து நல்லதாப் போடு.'

நடநட்டம் - காண்க: நட்டம்.

நடவை - பெ. கதவு. 'அந்த நடவையத் தொற.'

நடுக்காதுத் தளுக்கு - பெ. காதின் நடுப்பகுதியில் பெண்கள் அணியும் நகை. 'இந்த நடுக்காதுத் தளுக்கு கலியாணத்தப்பப்போட்டது.'

நடுப்பாரு - பெ. வண்டியின் நடுப்பகுதியில் போடப்பட்டிருக்கும் நீள மரச் சட்டம். 'நடுப்பாரப் புடுச்சுக்கிட்டுத் தொங்கறான்.'

நடுவலவ - பெ. அண்ணன் அல்லது அக்கா, தம்பி அல்லது தங்கை எனத் தனக்கு முன்னும் பின்னும் உறவுகளைக் கொண்டு இடையில் பிறந்த பெண். 'உங்க நடுவலவ எங்க போய்ட்டா.'

நடுவலவன் - பெ. தனக்கு முன்னும் பின்னும்பிறந்த அண்ணன் அல்லது அக்கா, தம்பி அல்லது தங்கை என உறவுகளைக் கொண்டு இடையில் பிறந்த ஆண். 'நடுவலவனுக்கு எங்க பொண்ணுக் கட்டியிருக்குது.'

நடை - பெ. எதிரெதிராக வீடுகளமைத்து இரண்டுக்கும் பொதுவாக இடையில் நுழைவாயில் கொண்டிருக்கும் பகுதி. 'வெய்யக் காச்சுது. நடைக்குப் பந்தல் போடோணும்.'

நடைக்கதவு - பெ. எதிரெதிராக அமைந்து வீடுகளுக்குப் பொதுவான பகுதியான 'நடை'யின் நுழைவாயில் கதவு. 'நடக்கதவ நல்லாச் சாத்துனியா.'

நடை தடம் - பெ. நடப்பதற்கு மட்டும் உதவும் சிறிய இடம்; ஒற்றையடிப் பாதை. 'அந்தக் காட்டுக்குப் போறதுக்கு நடதடந்தான் இருக்குது.'

நடைவீடு - பெ. எதிரெதிராக வீடமைந்து, இரண்டும் பொதுவான மையப் பகுதியில் இணைக்கப்பட்டு, அதில் நுழைவாயில் அமைக்கப்பட்ட வீடு. 'அவுங்களுக்கென்ன நடையூட்டுக்காரங்க.'

நத்தக்காடு - பெ. நீர்நிலையை ஒட்டிய பகுதியில் உள்ள நிலம். 'நத்தக்காட்டுக் கம்பு வந்து எத்திப் போச்சாம்' - பழமொழி.

நத்தம் - பெ. 1. நீர் நிலைக்கு அருகிலுள்ள புறம்போக்கு நிலம். 'நத்தத்துல போயி ஊடு கட்டியிருக்கறான்.' 2. இரத்தம். 'நண்டுக்கு நத்தமில்லை' - பழமொழி.

நத்தப் பொறம்போக்கு - பெ. நீர்நிலைக்கு அருகில் உள்ள புறம்போக்கு நிலம். 'நத்தப் பொறம்போக்குக்கு நாங்க கந்தாயம் கட்டறம்.'

நத்து(தல்) - வி. தின்பண்டம் கிடைக்காததால் குழந்தைகள் ஏக்கம் கொள்ளுதல். 'நத்தி நத்தியே எளச்சுப் போயிட்டான்.'

நப்பாலக் கொடி - பெ. சளியினால் ஏற்படும் மூக்கடைப்பைப் போக்கப் பயன்படும் கொடி (இதன் சிறிய தண்டைப் பறித்து மூக்கில் நுழைத்தால் பொடி போட்டது போலத் தொடர்ச்சியாகத் தும்மல் வந்து கொண்டே இருக்கும்). 'நப்பாலக் கொடி இருந்தாப் பறிச்சு மூக்குல உடு.'

நப்பு - பெ. 1. லேசான ஈரம். 'துணி இன்னம் நப்பா இருக்குது.'

*2. தின்பண்டத்தைக் கொடுப்பது போலக் காட்டி ஏமாற்றுதல்.* 'இவம் பாரும்மா நப்புக் காட்டறான்.' *3. வளம்.* 'மண்ணு நல்ல நப்புத்தானுங்க.'

**நரச்சுப் போதல்** - பெ. *பதநீர் கெட்டுப் போதல்.* 'தெளுவு நரச்சுப் போச்சு.'

**நரிப்பயிறு** - பெ. *பாசிப் பயிறு போன்ற பயறு வகை.* 'நரிப்பயிறு கொஞ்சம் வெதச்சிருக்கறன்.'

**நரையான்** - பெ. *வேம்பை வெட்டுவதால் சேவேறாமல் மரத்தில் ஏற்படும் மாற்றம்.* 'வேம்ப வெட்டாத, நரையான் உழுந்திடும்.'

**நல்ல காளான்** - பெ. *வரப்புகளில் முளைக்கும் நச்சுத் தன்மையற்ற (சமைத்து உண்ணக்கூடிய) காளான் வகை.* 'நேத்து நல்ல காளான் அஞ்சாறு கெடச்சுது. அதுலதான் சாறு காச்சனம்.'

**நல்ல பிள்ளை நாச்சி** - பெ. *கேலியாகக் கூறும் திட்டுச்சொல்.* 'எனக்குன்னு வந்து பொறந்திருக்கறான் பாரு. நல்ல பிள்ள நாச்சி.'

**நலக்கம்** - பெ. *குழந்தைகளுக்கு உடல்நலமின்மை.* 'கொழந்தைக்கு நலக்கம். மருந்து குடு.'

**நலங்குதல்** - வி. *குழந்தைக்கு உடல்நலமில்லாமல் போதல்.* கொழந்த நலங்கிரிச்சு.'

**நவ்வாலு** - பெ. *நந்நான்கு. நான்கு நான்காக.* 'ஆளுக்கு நவ்வாலாக் குடு.'

**நவண்டு** - பெ. *கீழ் உதடு.* 'எப்பப்பாரு நவண்டக் கடிச்சுக்கிட்டே இருக்கறான்.'

**நவுப்பு** - பெ. *லேசான ஈரத் தன்மை.* 'தட்டு இன்னம் நவுப்பா இருக்குது. போர் வெக்க வேண்டாம்.'

**நவுறு** - காண்க: நவுப்பு

**நறுவிசு** - பெ. *தூய்மை.* 'ஊட்ட நறுவுசா வெச்சிருக்கறா.'

**நன்னி** - பெ. *நன்றி.* 'கொஞ்சமாச்சும் நன்னி இருக்குதா.'

## நா

**நாதாங்கி** - பெ. *பூட்டு முன் கதவை நிலையுடன் இணைக்கும் இரும்பு வளையம்.* 'பூட்டாம நாதாங்கியப்போட்டுட்டு வந்திருக்கறான்.'

**நாம்பு**[1] - வி. *விரல்களை மடக்கி அழுந்தப்பிடித்தல்.* 'நல்லா நாம்பிப் பிடிச்சு உடு.'

**நாம்பு**[2] - பெ. *ஒரு கைப்பிடி அளவு.* 'ஒரு நாம்பு சோறு கூடத் திங்கல.'

**நாய்க்காசு** - பெ. *சிறு குழந்தைகளின் அரை ஞாண் கயிற்றில் கோர்க்கும் நாய்ப்பீடம் போட்ட சிறு செம்புத் தகடு.* 'கொழந்தைக்கு நாய்க்காசு ஒன்னு வாங்கிக் கோத்துப்போடு. நலக்கம் வராது.'

**நாய்ச்சட்டி** - பெ. *நாய்க்குச் சோறு போடும் சட்டி.* 'நாய்ச்சட்டியில கொண்டோயிப் போடு.'

**நாய்ச்சிலுவா** - பெ. *புலி வகையைச் சார்ந்த புலியை விடச் சிறிய, நாய்களை உண்ணும் மிருகம்.* 'அந்தக் காட்டுப்பக்கம் நாய்ச்சிலுவா இருக்குது.'

**நாலமாசம்** - பெ. *அடுத்த மாதம்.* 'நாலமாசம் நோம்பி வந்திரும்.'

**நாலவாரம்** - பெ. *அடுத்த வாரம்.* 'நாலவாரந்தான் சந்தைக்குப் போவோனும்.'

**நாவிட்டை** - பெ. *நாயின் மலம்.* 'அரளி வெதயத் தின்னுட்டான்னு நாவிட்டயக் கரச்சு ஊத்துனாங்கோ.'

**நாவேலப்பூடு** - பெ. *களைச் செடி. மஞ்சள் நிறத்தில் சிறு பூவுடைய பூண்டுச் செடி.* 'நாவேலப் பூட்டப் புடுங்கி அக்கட்ட போடு.'

**நாள் குறித்தல்** - வி. *திருமணத்திற்கு இருவீட்டாரும் பெரியவர்கள் முன்னிலையில் நல்ல நாள் பார்த்து முடிவு செய்தல்.* 'கலியாணத்துக்கு நாள் குறிச்சாச்சா?'

**நாளாவட்டம்** - வி.அ. *சிறிது நாள் (போகப் போக).* 'நாளாவட்டத்துல செரியாப் போயிரும், உடு.'

**நாளன்னை** - பெ. *நாளை மறுநாள்.* 'நாளன்னிக்கு வா. சினிமாவுக்குப் போகலாம்.'

## நி

**நிமட்டை** - பெ. **கஷ்டம்.** 'வேல இன்னிக்கி நிமட்ட வாங்கிடுச்சு.'

**நிலக்கறையான்** - பெ. **செடிகளின் வேரை அரிக்கும் கறையான்.** 'பருத்திச் செடி வேர நெலக்கரையான் அரிச்சிருச்சி.'

**நிலக்குடுசு** - பெ. **நிலக்குடிசை. சுற்றிலும் நிலத்தில் பதியும் வகையில், வட்ட வடிவில் அமைக்கப்பட்ட சிறு குடிசை.** 'நெலக்குடுசுல மம்முட்டி கெடக்கும். எடுத்தா.'



நிலக்குடுசு

**நிறத்தல்** - வி. **நிறம் உருவாகி வருதல்.** 'பாலூத்தி நெறக்கக் கலந்தாத்தான் காப்பி நல்லாருக்கும்.' 'மஞ்சள் நெறந்துக்கிச்சா.'

**நிறைபறி** - பெ. **ஏற்றத்தில் நிறைந்த நீருடன் மேல்வரும் சால்.** 'நெறைபறியோட கவுறு அந்து உழுந்திருச்சு.'

## நீ

**நீக்கு(தல்)** - வி. **திறத்தல்.** 'அவுங்க இன்னம் கடைய நீக்குல.'

**நீச்சம்** - பெ. **கெட்ட நாற்றம்.** 'என்னமோ நீச்சம் அடிக்குதே.'

**நீசம்புடுச்சவள் / ன்** - பெ. **குளிக்காமல் அழுக்காக உள்ளவள் / ன்.** 'அவன் நீசம்புடிச்சவன்.'

**நீட்டச்சட்டம்** - பெ. **கட்டிலின் நீளவாக்கில் பொருத்தப்பட்டிருக்கும் மரச்சட்டம்** 'நீட்டச்சட்டம் குருத்து ஒடிஞ்சி போச்சு.'

**நீர்ச்சீலை** - பெ. **கோவணம்** 'நீர்ச்சீலைய நல்லாப் புழிஞ்சு போடு.'

**நீர் விளாவு** - வி. **கடவுளுக்குப் பூஜை செய்யும்போது, நிறை சொம்பில் வைத்திருக்கும் நீரை வலக்கை விரல்களால் தொட்டு இட வலமாக மூன்று முறை தெளித்தல்.** 'நீர்வெளாவு, மறந்தராத.'

**நீலக்கொளுஞ்சி** - பெ. **நீல நிறமுடைய கொளுஞ்சிச் செடி.** 'நீலக் கொளுஞ்சி எங்காச்சும் ஒன்னுதான் இருக்கும்.'

## நு

**நுரைப்பீர்க்கு** - பெ. **பீர்க்கங்காயின் ஒருவகை (இதன் முற்றிய காயைக் காய வைத்து முதுகு தேய்க்கப் பயன்படுத்துவர்).** 'நுரைப் பீர்க்கங்காக் கொழம்பு நல்லாருக்கும்.'

## நூ

**நூட்டம்** - பெ. **வசதி, பணபலம்; செல்வாக்கு.** 'அலள் நூட்டமுள்ள ஆளு.'

**நூல்கவுறு** - பெ. **நூலால் பின்னப்படும் கயிறு.** 'நூல் கவுறு வாங்கிக் கட்டிலுக்குக் கட்டோனும்.'

## நெ

**நெகக்கண்ணு** - பெ. **விரல் சதையோடு ஒட்டியுள்ள நகப்பகுதி.** 'நெகக்கண்ணுல அழுக்குப் படாம வேல செய்ய முடியுமா?'

**நெகா** - *பெ.* ***ஒன்றைக் குறித்த யோசனையிலோ, இருட்டு அல்லது வழி தெரியாத இடங்களிலோ கிடைக்கும் சிறு பிடிப்பு; குறிப்பு.*** 'நானும் யோசுச்சுக்கிட்டுத்தான் இருக்கறன். நெகாச்சிக்க மாட்டீங்குது.' 'எப்பிடியோ அவனுக்கு நெகாத் தெரிஞ்சுதான் வந்திருக்கறான்.'

**நெகாவு** - ***காண்க:*** **நெகா.**

**நெஞ்சுக்கரிப்பு** - *பெ.* ***உண்ட உணவு செரிக்காமல் நெஞ்சில் அழுந்துவது போன்ற உணர்வு.*** 'ஒரே நெஞ்சுக்கரிப்பா இருக்குது. சோடாக் குடிக்கோனும்.'

**நெட்டாப்பு** - *பெ.* ***உயரமும் கம்பீரமும் கொண்ட தோற்றம்.*** 'மாடு நெட்டாப்பா இருக்குது.'

**நெட்டு** - *பெ.* ***1. மிக நீளம்.*** 'க(ெ)ர நெட்டாப் போயிக்கிட்டே இருக்குது.' ***2. செவ்வக வடிவிலான ஒரு வயல்.*** 'அந்த நெட்டு ஒழவு ஆயிருச்சா.' ***3. நேர்.*** 'அவம்பாட்டுக்கு நெட்டாப் போயிக்கிட்டே இருக்கறான்.'

**நெட்டுக்குத்து** - *பெ.* ***செங்குத்து.*** 'படி நெட்டுக்குத்தாப் போவுது.'

**நெட்டிமுறி** - *வி.* ***கை விரல்களைக் குவித்து மூடி, தலையில் வைத்து அமுத்திச்சொடக்கு எடுத்தல் (இதைச் சிறுவர்களுக்குத் திருஷ்டி கழிக்கப் பெரியவர்கள் செய்வர்).*** 'பேரனுக்குக் கண்ணுபடப் போவுதுன்னு நெட்டி முறிக்கறதப் பாரேன்.'

**நெட்டை** - *பெ.* ***விரல்களையும் மூட்டுக்களையும் மடக்கி அமுத்தினால் வரும் ஓசை; சொடக்கு.*** 'வெரல்ல சும்மா எதுக்கு நெட்டை எடுக்கற?'

**நெட்டொழவு** - *பெ.* ***வயலின் நீளவாக்கில் தொடங்கி உழும் உழவு.*** 'இந்தத் தடவ நெட்டொழவுதான் போடோணும்.'

**நெடுங்கண்ணி** - *பெ.* ***நெல்மணிக் கொத்துக்களுக்கிடையே இடைவெளி அதிகம்விட்டு நீண்டிருக்கும் நெற்கதிர்.*** 'இந்த நெடுங்கண்ணிய பாத்தயா.'

**நெத்து** - *பெ.* ***நன்கு முதிர்ந்து, மரத்திலிருந்து தானே விழுந்த தேங்காய்.*** 'அங்கொரு நெத்து உழுந்திருக்குது.'

**நெத்துத் தேங்காய்** - ***காண்க:*** **நெத்து.**

**நெத்திக்கட்டு நேரம்** - *பெ.* ***அண்ணாந்தோ, பார்வையைத் தாழ்த்தியோ பார்க்காமல், நேராக பார்க்கும் உயரத்திற்குக் கதிரவன் வரும் காலை நேரம்.*** 'நேத்துக் காத்தால நெத்திக் கட்டு நேரத்துக்கு வந்தாங்க.'

**நெமையூண்டு** - *பெ.அ.* ***மிகச் சிறிது.*** 'நெமையூண்டு பாக்குக் குடு.'

**நெய்ச்சுண்டுவேரம்** - *பெ.* ***குழந்தைகளுக்கு ஊற்றும் நெய் கலந்த சுண்டுவேரம் (காண்க. சுண்டுவேரம்).*** நெய்ச் சுண்டுவேரம் ஊத்தியிருக்கிறன்.'

**நெய்வாளை** - *பெ.* ***நெய் ஊற்றி அரிசி மாவில் செய்யும் இனிப்புப் பண்டம்.*** 'நேத்து ஓரம்பர வந்தாங்கன்னு நெய்வாள பண்ணுனம்.'

**நெரச்சல்** - *பெ.* ***மறைப்புக்காக மூங்கில் அல்லது முட்கோல்களால் செய்யப்படும் படல்.*** 'ஒரு நெரச்சலு கட்டி வெக்கோனும்.'

**நெரட்டைக் கொடி** - *பெ.* ***வெண்ணிறத்தில் சிறுபுனல் போலப் பூப்பூக்கும் களைக்கொடி.*** 'நெரட்டக் கொடி புடுங்கியாந்து எருமைக்குப் போடு.'

**நெலவு** - *பெ.* ***கதவைத் தாங்க செவ்வக வடிவில் சுவரில் பதிக்கப்பட்டிருக்கும் மரச்சட்ட அமைப்பு; கதவு நிலை.*** 'குனிஞ்சு வா. நெலவுல இடிச்சுக்காதே.'

**நெலவு கால்** - *பெ.* ***நுழைவாயிலில் கதவைத் தாங்கப் பொறுத்தப்படும் செவ்வகமான நிலையின் இரு பக்கத்திலும் நிறுத்தப்பட்டிருக்கும் மரச்சட்டம்.*** 'நெலவு கால்ல இடிச்சுக்கிட்டான்.'

**நெவுலு** - *பெ.* ***நிழல்.*** 'ஒரு மரமிருந்தா நெவுலு இருக்கும்.'

நெவா - *காண்க:* நெகா.

நெறப்பாளை - பெ. ***ஒருவருக்கு ஆகிவராத நிறம் கொண்ட மாடு.*** 'அது எங்களுக்கு நெறப்பாளை.'

நெறள்பயிறு - பெ. ***பயிறு வகைகளை ஊறவோ, வேகவோ வைக்கும் போது அதில் ஊறாமல், வேகாமல் கிடக்கும் பயிறுகள்.*** 'இதுல இத்தன நெறள்பயிறு வந்திருச்சு.'

நெறி - பெ. ***உடம்பின் ஓரிடத்தில் இருக்கும் புண்ணுக்காக அக்குள், தொடை இடுக்கு போன்ற இடங்களில் உருவாகும் சிறு கட்டி.*** 'நெறி கட்டிகிட்டு வலி உயிர் போவுது.'

நெறியேறுதல் - வி. ***(பூச்சிகள் கடித்ததும்) விஷம் விரைவாக உடம்பில் பரவுதல்.*** 'தேள் கடிச்சு நல்லா நெறியேற வரைக்கும் உட்டுட்டாங்க.'

நெறைமுட்டு - பெ. ***பெண்ணின் மாதவிடாய் நாட்களில் முதல் நாள்; குழந்தை பிறந்த முதல் மூன்று நாட்கள்.*** 'நெறமுட்ட வெச்சுக்கிட்டு வெளியே போலாமா.'

## நே

நேம்பு - வி. ***தானியத்தோடு கலந்திருக்கும் கொம்மை போன்ற வற்றைத் தனியாகப் பிரிக்க முறத்தைக் கைகளுக்கிடையில் பிடித்துக் கொண்டு இருபுறமும் ஒருவிதமாக அசைத்தல்.*** 'கம்ப நல்லா நேம்பி அப்புறம் பொடை.' 2. ***வேலை எதுவும் அதிகம் செய்யாமல் மேலோட்டமாக இருத்தல்.*** 'ஆளு நேம்பா இருக்கறான்.'

நேர் எளசு - பெ. ***தம்பி தங்கைகளில் தனக்கு அடுத்து உடன் பிறந்தவர்.*** 'எனக்கு இவந்தான் நேர் எளசு.'

நேர்வாக்கு - பெ. ***தலையில் மயிர்களை இருபுறமும் ஒதுக்கி நடுவில் நேராக எடுக்கும் வகிடு.*** 'எங்கப்பன் நேர்வாக்கு எடுத்துத்தான் தலசீவுவாரு.'

## நொ

நொக்கு - வி. 1. ***(ஒருவரைக்) காயம்படும் வரையில் பலமாக அடி.*** 'அவன நல்லா நொக்கீட்டான்.' 2. ***வி.அ. மிகுந்த துன்பம் தருதல்.*** 'வேல நொக்கு வாங்குது.'

நொங்குத் தண்ணி - பெ. ***நுங்கில் இருக்கும் நீர்.*** 'நொங்குத் தண்ணியத் தடவுனா வேர்குரு போயிரும்.'

நொட்டு - வி. ***(குழந்தைகளிடையே வழங்கும்) ஒருவரை இழிவான செயலைச் செய்யச் சொல்லுதல்.*** 'நொட்டுனாக் கூடத் தரமாட்டேன்.'

நொட்டுக்கை - பெ. ***சும்மா இராமல், எப்பொழுதும் எதையாவது செய்து கொண்டே இருப்பவரின் கை.*** 'இந்த நொட்டுக் கைய வெச்சுக்கிட்டு கொஞ்ச நேரம் சும்மா இரேன்டா.'

நொடி - பெ. ***சாலையில் இருக்கும் குழி.*** 'வண்டி ஓட்டவே முடியில. ஒரே நொடியா இருக்குது.'

நொடித்தடம் - பெ. ***குழிகள் நிறைந்த வழி.*** 'நொடித் தடத்துல வண்டி ஓட்டாத.'

நொண்டி - பெ. ***ஒரு காலை மடக்கிக் கொண்டு, மறுகாலால் நடந்து எதிராளியைத் தொடும் சிறுவர்கள் விளையாட்டு.*** 'டேய்... நொண்டி வெளையாடலாமா.'

நொப்பம் - வி.அ. ***ஒருவரின் விருப்பத்திற்கேற்ற நாக்குச் சுவை.*** 'கொழம்பு நொப்பமா இருக்குதா.'

நொள்ளக்கண் - பெ. ***பார்வை சரியில்லாத கண்.*** 'அவனுக்கு நொள்ளக் கண்ணுடா.'

நொளையம்பூச்சி - பெ. ***ஆடு, மாடுகளின் மேலிருக்கும் (பறக்கும் தன்மையுடைய) மிகச் சிறிய உண்ணி.*** 'ஆட்டுக் குட்டியில நெறைய நொளையம் பூச்சி இருக்குது.'

**நொறுக்கு** - *பெ.* ***வயதில் சிறியவள் / ன்.*** 'அந்த நொறுக்கு என்ன கேள்வி கேக்குது.'

**நொனை** - *பெ.* ***பிறரைப் பற்றி இல்லாததும் பொல்லாததுமாகப் பேசும் பேச்சு; எப்போதும் குறை கூறிக் கொண்டே இருக்கும் பேச்சு.*** 'அவன் பேசற நொனைக்கு புழுத்துத்தான் சாவான்.'

## நோ

**நோப்பாளம்** - *பெ.* ***பிணக்கு.*** 'என்ன சொல்லீட்டன், நோப்பாளம் வந்திருச்சு.'

**நோம்பி** - *பெ.* ***திருவிழா; பண்டிகை.*** 'நோம்பிக்குப் புதுத்துணி எடுத்தாச்சா?'

**நோம்பி அழப்பு** - *பெ.* ***திருவிழாவிற்காக உறவினருக்கும் வேண்டியவர்களுக்கும் விடுக்கும் அழைப்பு.*** 'நோம்பி அழப்பெல்லாம் முடிஞ்சிருச்சா.'

**நோய்(தல்)** - *வி.* ***உராய்தல்.*** 'எதுக்கு இப்படி மேல வந்து நோயற.'

## ப

**பக்கி** - *பெ.* ***பறவை.*** 'பக்கியாப் பறக்கறான் பையன்.'

**பச்சப்புழு** - *பெ.* ***பச்சை நிறமுடைய சிறு புழு.*** 'பச்சப் புழுவு மொயமொயன்னு ஊருது.'

**பச்சிலை சத்தியம்** - *பெ.* ***வெற்றிலைக் கொடிக்காரர்கள் எந்த ஒன்றையும் கொடுக்கல் வாங்கலின் போது உள்ளங்கையில் வெற்றிலையை வைத்துச் செய்து கொள்ளும் சத்தியம் (இதை இரு தரப்பாரும் மீறமாட்டார்கள்).*** 'பச்சில சத்தியம் பண்ணிக் குடுத்ததுக்கப்பறம் பேச்சு மாறுனதா எனக்குத் தெரிஞ்சு ஆருமில்ல.'

**பச்சை உடம்பு** - *பெ.* ***குழந்தை பெற்றதால் சில நாட்கள் வரை நலிவுற்ற பெண்ணின் உடம்பு (இந்நாட்களில் வெளியே போனால் அவளைப் பேய் பிடிக்கும் என்பது நம்பிக்கை).*** 'அவ எங்க வர்றா. பச்ச ஒடம்புக்காரி.'

**பச்சை உடம்புக்காரி** - *பெ.* ***குழந்தை பெற்றுச் சில நாட்களே ஆன பெண். காண்க: பச்சை உடம்பு.***

**பச்சைப் பிள்ளை** - *பெ.* ***பிறந்து சில நாட்களே ஆன குழந்தை.*** 'பச்சைப் பிள்ளையத் தூக்கிட்டு வெளிய நிக்காத.'

**பச்சை மாவு** - *பெ.* ***வேக வைக்காத மாவுப் பண்டம்.*** 'பச்ச மாவத் திங்காத வவுத்த வலிக்கும்.'

**பசிரி** - *பெ.* ***நிலத்தை ஒட்டி அடர்த்தியாகப் படர்ந்திருக்கும் சிறு பூண்டு.*** 'காடெல்லாம் பசிரி படர்ந்து போச்சு.'

**பசுவு** - *பெ.* ***கிராமக் கோயில்களில் மாடுகளுக்கான வேண்டுதலின் பேரில் செய்து வைக்கும் மாட்டு உருவத்தில் அமைந்த சுடுமண் சிற்பம்.*** 'மாரிங்கோயில்ல பசுவு வெச்சிருக்கறது ஆரு?'

**பஞ்சப்பாட்டு** - *பெ.* ***வசதியாக இருப்பவர் தான் மிகவும் ஏழ்மையில் வாடுவது போலப் புலம்பும் பேச்சு.*** 'எப்பத்தான் அவன் பஞ்சப்பாட்டு பாடாத இருக்கறான்.'

**பஞ்சுப்பொடை** - *பெ.* ***கதிர் வெளிவராமல் பயிரின் நுனியில் புடைத்துக் காணப்படுதல்.*** 'பயிரு பஞ்சுப்பொட கட்டிருக்குது.'

**பட்டக்காரை** - *பெ.* ***சீமை ஓடு வேய்ந்த வீடுகளில் காற்று ஓடுகளைத் தூக்கித் தள்ளி விடாமல் இருக்கக் கூரையின் மீது (இரண்டு மூன்று இடங்களில் தேவைக்கேற்ப) நீளமாகப் போடப்படும் காரை.*** 'பட்டக்கார போட்டிருந்தா ஒரு ஓடுகூடத் தூக்காது.'

**பட்டம்** - *பெ.* ***திருமணத்தின் போது மணமகன், மணமகள் ஆகியோருக்கு நெற்றியில் கட்டும் தகடு.*** 'நெத்தியில பட்டத்த இப்பிடியா இறுக்கிக் கட்டுவாங்க.'

பட்டறை - பெ. **தானியத் தட்டைகளை நிலத்தில் போராக வைக்கும். போது கரையான் பிடிக்காமல் இருக்க நான்கு மூலைகளிலும் பெரிய கற்களை நிறுத்தி, அதன் மீது மரக் கட்டைகளை அடுக்கி நிலத்தில் படாமல் சிறிது உயரமாக்குவர். கற்களையும் மரக்கட்டைகளையும் கொண்டு அமைக்கப்படும் அமைப்பு.** 'நேத்து பட்டறை கூட்டிவெச்சுட்டன்இன்னக்கிப் போர் போட்ரலாம்.'

பட்டறை மரம் - பெ. **தானியத் தட்டைகளைப் போராக வேயக் கூட்டப்படும் பட்டறையில் போடப்படும் மரக்கட்டை.** 'பட்டற மரம் நல்லதா இருக்கோணும்.'

பட்டாசாளை - பெ. **வீட்டு முற்றம்.** 'அவுங்கூட்டுல நல்லாப் பெரிய பட்டாசாளை இருக்குது.'

பட்டி - பெ. **மேய்ச்சல் முடிந்து ஆடுகளை அடைத்து வைப்பதற்காக சுற்றிலும் படல்களும் இடையில் நிழலுக்காகச் சிறு குடிசையும் கொண்ட அமைப்பு.** 'பட்டியில புழுக்க நெறஞ்சு போச்சு. வேற எடத்துக்கு மாத்தோணும்.'

பட்டி ஆள் நேரம் - பெ. **ஊரடங்கிப் பட்டி காவலுக்கு ஆட்கள் செல்லும் நேரம் (ஏறக்குறைய இரவு பத்துமணி).** 'பட்டி ஆள் நேரமாயிருச்சு, தூங்குடா.'

பட்டிக்குடுசு - பெ. **ஆடுகள் அடைக்கப்படும் பட்டியில் நிழலுக்காகவும் இரவில் காவலுக்கு ஆட்கள் படுத்துக் கொள்ளவும் வைக்கப்பட்டிருக்கும் சிறு குடிசை.** 'பட்டிக்குடுசுல இன்னிக்கிப் படுத்துக்கப் போறது ஆரு?'

பட்டிக்கெடை - பெ. **எருவிற்காகவேண்டி வயலில் ஒரே இடத்தில் ஆட்டுப் பட்டியைக் கிடையாகப் போட்டிருத்தல்.** 'அந்த வயல்ல பட்டிக்கெட போட்டிருக்குது.'

பட்டிநாய் - பெ. **ஆடுகள் அடைக்கும் பட்டிக்குக் காவலாக இருக்கும் நாய்.** 'குட்டி நாய் வந்தா பட்டி நாய் போயிரும்' - பழமொழி.

பட்டிநோம்பி - பெ. **மாட்டுப் பொங்கல் திருநாள்.** 'பட்டி நோம்பிக்கு இன்னம் எவ்வளவு நாள் இருக்குது.'

பட்டிப்படல் - பெ. **ஆடுகளை அடைக்கும் பட்டி அமைக்கப் பயன்படும் மூங்கில் அல்லது முட்கோல்களால் ஆன சதுர வடிவத் தடுப்பு.** 'பட்டிப் படலெல்லாம் பழசாப் போச்சு, மாத்தோணும்.'

பட்டிப்பொங்கல் - காண்க: பட்டிநோம்பி.

பட்டியாள் நேரம் - காண்க: பட்டி ஆள் நேரம்.

பட்டீல் - பெ. **ஓடு வேயும் முன் கூரையில் பொருத்தப்படும் பட்டையாக உள்ள சிறு மரக்கட்டை (ரீப்பர்).** 'கூரைக்கு நல்ல பட்டீலாப் போடோணும்.'

பட்டுளி - பெ. **மரம் செதுக்க உதவும் பட்டையான, வாய்ப்பகுதி மிக அகலமாக இருக்கும் மர உளி:** 'பட்டுளி இருந்தாக் கொண்டா. இந்த மரத்தச் செதுக்கலாம்.'

பட்டை - பெ. **வண்டிச் சக்கரத்தின் சுற்றில் பொருத்தப்படும் இரும்பாலான தட்டை வளையம்.** 'சக்கரத்துல பட்ட பேந்துகிடுச்சு பாரு. சீக்கிரமா மாத்து.'

படப்பசம் - பெ. **இல்லாத ஒன்றை இருப்பது போலப் பிறருக்குக் காட்டும் பாவனை; நடிப்பு.** 'அவளுக்கு ஒடம்புக்கென்ன வந்திருச்சு எல்லாம் படப்பசம்.'

படப்பு - பெ. **பொங்கலில் இருந்து எடுத்து கடவுளுக்குப் படைக்கும் சோறு.** 'எப்பவும் மூனு படப்பு வெச்சுத்தான் சாமி கும்படோணும்.'

படல் - பெ. **மூங்கில் அல்லது முட்கோல்களை நிரலாக அடுக்கியோ கோல்களையும் ஓலைகளையும் வைத்தோ**

**கட்டி, எடுத்து நிறுத்துவதற்கு வசதியாகச் செய்யப்படும் தடுப்பு.** 'ஒரு படலுக் கட்டி வெக்கச் சொன்னா ஆரு கேக்கறா.'



படல்

**படி** - பெ. **கோவில் பூசை தொடங்குவதற்கான முன்னேற்பாடு; கடவுளுக்குப் பூசையின்போது வைக்கும் படையல்.** 'அந்தந்தச் சாமிக்கு அந்தந்தப் படியாம். கடகெட்ட சாமிக்கு லொடலொடப் படியாம்' - பழமொழி.

**படிக்கம்** - பெ. **வெற்றிலை எச்சிலை உமிழும் பாத்திரம்.** 'அந்தப் படிக்கத்த இங்க எடு.'

**படித்திடி** - பெ. **கேலி; கிண்டல்.** 'அவரு எப்பவும் படித்திடி பண்ணிக்கிட்டேதான் இருப்பாரு.'

**படிமானம்** - பெ. **செயல்களைக் கவனத்தோடும் முறை தவறாமலும் செய்யும் ஒழுங்கு.** 'எதிலயும் படிமானமா இருக்கோனும்?'

**படிவாச** - பெ. **மலைக்கோயிலின் முதல்படி.** 'படிவாசல்லியே கும்புட்டு வந்துட்டன்.'

**படுகிடை** - பெ. **நடமாட முடியாமல் படுக்கையில் நீண்ட நாட்களாகக் கிடத்தல்.** 'அவரு படுகெடையாக் கெடக்கறாரு.'

**படைக்கலக்கூடை** - பெ. **கோயில் திருமணம் ஆகியவற்றுக்குச் சீர்ப்பொருள்களை எடுத்துச் செல்லும் செவ்வகமான கூடை.** 'படைக்கலக் கூடைய சாஞ்சறாமதலயில வெச்சுக் கொண்டா.'

**படைக்கால்** - பெ. **ஏர் ஒருமுறை உண்டாக்கிய உழவுத்தடம்.** படைக்கால்ல பருப்பு உழுவறாப்ல போடு.'

**பண்டக்காரப்பையன்** - பெ. **கால்நடைகளை மேய்க்கும் சிறுவன்.** 'பண்டக்காரப் பையன் இன்னம் வல்ல'

**பண்டம்** - பெ. **ஆடு மாடுகள்; கால்நடைகள்.** 'காட்டுல பண்டத்த உட்டு மேச்சிருக்கறாங்க.'

**பண்டுதம்** - பெ. **மருத்துவம்; வைத்தியம்.** 'படுத்துக்கிட்டே இருந்தா நல்லாவுமா. எதாச்சும் பண்டுதம் பாரு.'

**பண்ணயக்காரன்** - பெ. **நிலக்கிழார், நிலச் சொந்தக்காரன்.** 'பண்ணயக்காரன் குசுவுட்டா அரகரா அரகரா. ஆளுக்காரன் குசுவுட்டா அடிடா புடிடா.' (பழமொழி)

**பண்ணயக்காரிச்சி** - பெ. **நிலக்கிழாரின் மனைவி.** 'பண்ணயக்காரிச்சி கூப்பட்டாங்க.'

**பண்ணயத்தாள்** - பெ. **நிலக்கிழாரிடம் ஆண்டுக் கூலிக்கு வேலை செய்யும் ஆள்.** 'பண்ணயத்தாளு கெடைக்காத வேலக்கிக் கஷ்டம்.'

**பண்ணயம்** - பெ. **நிலம், கால்நடைகள், வேலையாட்கள் அனைத்தையும் உள்ளடக்கி நிர்வகிக்கும் உழவுத் தொழில்.** 'ஆளில்லாத பண்ணயம் அரப்பண்ணயம்' - பழமொழி.

**பண்ணாட்டு** - பெ. **பலதுறை அறிவு; தலைமைப் பண்பு. (இது தற்போது கேலியாகப் பயன்படுகிறது).** 'இந்தப் பண்ணாட்டுக்கொன்னும் கொறச்சலில்ல.'

**பண்ணாடி** - பெ. **எஜமான்; கணவன்.** 'உங்க பண்ணாடி எங்கே?'

**பண்ணை** - *பெ.* ***மாடுகளுக்கு நீர் வைக்கவோ அன்றாடத்தேவைக்காக நீரை நிரப்பி வைக்கவோ உதவும், கல்லால் செய்யப்பட்ட தொட்டி.*** 'அந்தக் காலத்துல கட்டுத்தரையில ரண்டு மூனு பண்ண வெச்சிருப்பாங்க. இப்பத்தான் சிமிட்டித் தொட்டி.'



பண்ணை

**பணிக்கம்** - *பெ.* ***கரும்புப் பாகுப் பதம்.*** 'பணிக்கமா இருக்குதான்னு பாத்து எடு'

**பணிக்கன்** - *பெ.* ***கரும்புப் பாகு பதம் பார்ப்பவன்.*** 'பணிக்கனக் கூப்புட்டு பாத்துச் சொல்லச் சொல்லு.'

**பணிக்கை** - *பெ.* ***பதமாக ஒரு வேலையைச் செய்யும் முறை.*** 'மகளுக்கு பணிக்கை சொல்லி அனுப்புறா.'

**பத்தினி** - *பெ.* ***அம்மை நோய்க்குத் தடவும் வேப்பிலையும் ஆமணக்கு விதையும் கலந்து அரைக்கப்பட்ட சாந்து.*** 'அம்மைக்குப் பத்தினி அரச்சு நல்லா ஒடம்பு முழுக்கத் தடவோணும்.'

**பத்தினித்தழை** - *பெ.* ***வேப்பிலை.*** 'ரண்டு கொத்து பத்தினித்தழ பறிச்சுக்கிட்டு வா.'

**பதவிசு** - *பெ.அ.* ***வாய்ப்பு வசதியுடைய.*** 'நல்ல பதவிசான ஆளுத்தான்.'

**பதிமூனான்** - *பெ.* ***சீட்டு விளையாட்டு.*** 'அவன்ஊட்டுலயே இருக்கறதில்ல சாவடில உக்கோந்துக்கிட்டுப் பதிமூனான் வெளயாடுவான்.'

**பதினெட்டாங்கரம்** - *பெ.* ***பதினெட்டுக் கட்டங்களைக் கொண்ட விளையாட்டு; ஆடு புலி ஆட்டம்.*** 'நேரம் போறதுக்குப் பதினெட்டாங்கரம் வெளையாடறாங்க.'

**பந்திப்பாய்** - *பெ.* ***உணவு உண்பதற்காக விருந்தினர் விரிக்கும் குறைந்த அகலமுடைய பாய்.*** 'பந்திப்பாய எடுத்துப் போடு. சாப்பாடு போடலாம்.'

**பப்புரெட்டு வேலை** - *பெ.* ***ஒப்புக்குச் செய்து முடித்த கட்டட வேலை.*** 'பப்புரெட்டி வேலை செஞ்சுட்டுக் கூலி கேக்கறியா.'

**பம்பல்** - *பெ.* ***அறுவடை; அறுவடைக்காலம்.*** உங்கூர்ல பம்பலு தொடங்கியாச்சா?'

**பம்பு** - *வி.* ***ஒரு செயல் செய்யும் முன், வாகு பார்த்து லேசாகத் தயங்குதல்.*** 'ஆளு பம்பறதப் பாத்த, என்னமோ செய்யப் போறா'

**பயராகுதல்** - *வி.* ***ஆடுகள் சினையாகுதல்.*** 'அந்தப் பிரவக்குட்டி பயராயிடுச்சா.'

**பயிர்கலை(த்தல்)** - *வி.* ***அடர்த்தியாகப் பயிர் இருக்கும் வயலில் நெருக்கமானவற்றைப் பிடுங்கி எறிந்து போதிய இடைவெளியும் காற்றோட்டமும் ஏற்படச் செய்தல்.*** 'அந்த வயல்ல பயிர் கலைச்சு உட்டாத்தான் நல்லது.'

**பயிராதல்** - ***காண்க: பயராதல்.***

**பயிரொழவு** - *பெ.* ***நெருக்கமாகப் பயிர்கள் இருக்கும் வயலில் போதிய இடைவெளி ஏற்பட உழும் உழவு.*** 'பயிரொழவு போட்டாத்தான் பயிர் நல்லா வரும்.'

**பரசல்** - *பெ.* ***சிறுபடகு.*** 'ஏரியில பரசல் ஓட்டறாங்க.'

**பரம்படித்தல்** - *வி.* ***உழுத பின் கலப்பைக்குப் பதிலாகப் பலகை ஒன்றைக் கட்டி நிலத்தைச் சமமாக்குதல்.*** 'பரம்படிச்சு உட்டாத்தான் பாத்தி புடிக்க நல்லா இருக்கும்.'

**பரம்பு** - *பெ.* ***உழுதபின் நிலத்தை ஒப்புரவாக்கும் செயல்.*** 'இன்னக்கே பரம்படிச்சு உட்ரோனும்.'

**பரம்புப் பலகை** - *பெ.* ***உழுதபின் நிலத்தை ஒப்புரவாக்க மாடுகளை ஏரில் பூட்டிக் கலப்பைக்குப் பதிலாகக் கட்டிவிடும் பலகை.*** 'பரம்புப் பலகையை எடுத்தாந்து வெச்சுரு.'

**பரம செய்யான்** - ***காண்க: செய்யான்*** .

**பரம தொண்டு** - *பெ.* ***விலைமகள்; ஒழுக்கமற்றவள் / ன்.*** 'அவ கெடக்கறா பரமதொண்டு.'

**பரவிடி** - *வி.அ.* ***பரவலாக.*** 'காடு பரவிடி கெடக்குது அவுங்களுக்கு.'

**பராத்தட்டம்** - *பெ.* ***பெரிய பாத்திரங்களை மூடி வைக்கப் பயன்படும் அகன்ற பெரிய வட்டமான தட்டு.*** 'அந்தப் பராத்தட்டம் எங்க.'

**பராத்து** - ***காண்க: பராத்தட்டம்.***

**பராரி** - *பெ.* ***விலை மகள்.*** 'அது பராரியாத் திரியுது.'

**பரை** - *பெ.* ***அளக்க உதவும் (வள்ளத்தை விடப் பெரிய) சாமான்.*** 'கம்பளக்க அவுங்கூட்லப் பரை இருக்குது. வாங்கியா.'

**பருப்பாமுட்டி** - *பெ.* ***பருப்புக் கடையும் மத்து.*** 'இந்தப் பருப்பா முட்டிய எங்க வெச்சனோ தெரீல.'

**பருவகாரர்** - *பெ.* ***நெல் வயலை நாற்று விடுவதிலிருந்து அறுவடை வரை கவனித்துக் கொள்பவர்.*** 'எங்க வயலுக்கு அவருதான் பருவகாரரு.'

**பலகைக்கல்** - *பெ.* ***உட்கார, பாத்திரங்கள் கவிழ்த்த உதவும் அகலமானக் கல்.*** 'ஒரு பலகைக்கல் பாத்து எடுத்தாந்து போடோணும்.'

**பலவரை** - *பெ.* ***தாயச் சோழி.*** 'பலவரை இருந்தா தாயம் வெளையாடலாம்.'

**பவுடு** - *பெ.* ***முகத்தாடை.*** 'பவுடு பேந்துரும் பாத்துக்க.'

**பழஞ்சீலை** - *பெ.* ***கிழிந்து நைந்த பழைய சேலை.*** 'பழஞ்சீலை ஒரு துண்டு கிழி.'

**பழந்துணி** - *பெ.* ***கிழிந்த பழைய துணி.*** 'பழந்துணி இருந்தாக் குடு தூசத் தொடைக்கலாம்.'

**பழம்** - *பெ.* ***தாய விளையாட்டில் ஒரு காய் சுற்றி வந்து எல்லாக் கட்டத்தையும் கடந்து பழுத்துவிடுதல்.*** 'காய மொதல்லப் பழத்துக்கு ஓட்டறதுக்குப் பாரு?'

**பழம்படுதல்** - *வி.* ***மாடுகள் சினையாதல்.*** 'அந்தக் கெடாரி பழம்பட்டிருச்சா.'

**பழமை** - *பெ.* ***பழைய கதைகள், ஊர்ச்சங்கதிகள், சொந்த விஷயங்கள் என்று இருவரோ சிலரோ கூடி வெகுநேரம் பேசும் அரட்டை.*** 'எவ்வளவு நேரமாப் பழம பேசறது.'

**பழைய சோத்து நேரம்** - *பெ.* ***காலையில் குறிப்பிட்ட நேரம் வேலை செய்து முடித்தபின் பழைய சோறு உண்ணும் நேரம் (அதாவது காலை எட்டிலிருந்து ஒன்பது வரை).*** 'பழைய சோத்து நேரமாயிடுச்சு.'

**பள்ளயம்** - *பெ.* ***சிவராத்திரி அன்று பயறுகளை வேக வைத்துச் செய்யும் பூசை.*** 'பள்ளயம் இல்லாம சிவராத்தியா.'

**பளுது** - *பெ.* ***ஏணி, நாற்காலி போன்றவற்றில் இரண்டு கட்டைகளை (கால்களை) இணைக்கும் சிறு சட்டம்.*** 'பளுது நல்லதா இருக்கறாப்பல பாத்து ஏணி எடுத்தா.'

**பளுவு** - ***காண்க: பளுது.***

**பற்றாசு** - *பெ.* ***தோலால் செய்யப்பட்ட ஏற்றச்சால், செருப்பு, பை போன்றவற்றில் கிழிசல் ஏற்படும்போது, ஒட்டுப் போட்டுத் தைக்கும் துண்டுத்தோல்.*** 'செருப்புக்கு ஒரு பற்றாசு வெச்சுத் தெக்கோணும்.'

**பறத்தலாங்கொடி** - *பெ.* ***வேலியில் படரும் ஒருவகைக் கொடி.*** 'வேலி முழுக்கப் பறத்தலாங்கொடி படந்து கெடக்குது.'

**பறி** - *பெ.* ***ஏற்றத்தில் நீர் மொண்டு வரும் (தோலால் செய்யப்பட்ட) சால்.*** 'பறியில ஓட்ட உழுந்திருச்சு. மேல வரதுக்குள்ள பாதித்தண்ணி போயிருது.'

**பறை** - *வி.* **புறம் பேசுதல்.** 'அங்க யாரைடா பறைறீங்க.'

**பனங்கருக்கு** - *பெ.* **பனைமரக் கன்று.** 'பனங்கருக்கு நடுகாட்ல மொளைச்சிருக்குது.'

**பனங்குடுக்கை** - *பெ.* ***முளைக்காமல் உள்ளிருக்கும் பருப்பு கெட்டு ஆட்டினால் ஓசை வரும் பனம்பழக் கொட்டை.*** 'பனங்குடுக்கைய அள்ளியா, அடுப்புல போடலாம்.'

**பனங்கை** - *பெ.* ***வீட்டுக்கூரைக்காகப் பனைமரத்தைப் பிளந்து செதுக்கி நீளவாக்கில் தயாரிக்கப்படும் சட்டம்.*** 'பனங்கையில கரையான் ஏறிடுச்சு.'

**பனந்தடுக்கு** - *பெ.* ***பனை ஓலையால் செய்யப்படும் உட்காரும் தடுக்கு.*** 'பனந்தடுக்கு எடுத்தாந்து போடு. உக்கோரட்டும்.'

**பனந்தப்பை** - ***காண்க:*** **பனங்கை.**

**பனம்பட்டை** - *பெ.* ***பனை ஓலையை மரத்தோடு இணைக்கும் பட்டை.*** ''பனம்பட்டையில அவுனி உரிச்சுப் போடு.'

**பனம்பூ** - *பெ.* ***பனைமரக்குருத்தில் சிவப்பாக ஒட்டிக் கொண்டிருக்கும் துகள் (இதை வெட்டுக்காயத்திற்கு மருந்தாகப் பயன்படுத்துவர்).*** 'காயத்துக்குப் பனம்பூ எடுத்து வெய்யி.'

**பனுக்கல்** - *பெ.* ***பரவல்.*** 'கம்ப பனுக்கலாப்போடு, காயட்டும்.'

## பா

**பாக்குக் கடிக்கிற நேரம்** - *பெ.* ***மிகக் குறைந்த நேரம்.*** 'பாக்குக் கடிக்கிறநேரத்துல வந்திர்றன்.'

**பாசை** - *பெ.* ***நல்ல பழக்க வழக்கம்.*** 'பையனுக்குப் பாசையில்ல.'

**பாஞ்சாங்கரம்** - *பெ.* ***பதினைந்து புள்ளிகள் உள்ள கட்டத்தில் கற்கள் வைத்து இருவர் ஆடும் விளையாட்டு.*** 'ஆட்ட உட்டுட்டுப் பாஞ்சாங்கரம் வெளையாண்டுக்கிட்டு இருக்கறாங்க.'

**பாஞ்சாநாளு** - *பெ.* **பதினைந்தாம் நாள்.** 'நீ இன்னிக்கிப் போ. பாஞ்சாநாளுக்கு நானும் வந்தர்றன்.'

**பாடம்** - *பெ.* ***விஷக்கடி, உடல் நலமின்மை போன்றவற்றிற்காக துண்டால் பாதிக்கப்பட்டவரின் மேல் அடித்துக் கொண்டே வாய்க்குள் முணுமுணுக்கும் சில மந்திரச் சொற்கள்.*** 'செலந்திக்குப் பாடம் போடறது தான.'

**பாடா இருத்தல்** - *வி.* ***கஷ்டமாக, சோம்பலாக இருத்தல்.*** 'என்னமோ தெரீல, வேல செய்யறதுக்கு ஒரே பாடா இருக்குது போ.'

**பாடு** - *பெ.* ***மனஸ்தாபம்.*** 'அவங்கூட பாடாப் போச்சு.'

**பாண்டி** - *பெ.* ***பல்லாங்குழி எனும் விளையாட்டு.*** 'பாண்டி வெளையாடலாமா.'

**பாண்டிக்குழி** - ***காண்க:*** **பாண்டி.**

**பாண்டியங்குழி** - *பெ.* ***பொருட்களைச் சேமித்து வைப்பதற்காகவோ, வேறு காரணத்திற்காகவோ பழங்காலத்தில் நிலத்தில் வெட்டப்பட்டுப் பலகைக் கல்லால் மூடப்பட்டிருக்கும் குழி. (நிலத்தை உழும்போது இத்தகைய குழிகளைக் கண்டுபிடிப்பர்).*** 'அவுங்க காட்ல ரண்டு மூனு பாண்டியங்குழி இருக்குது.'

**பாத்திக்கால்** - *பெ.* ***பருத்தி விதை ஊன்றுவதற்கு அமைக்கப்படும் பாத்தியின் திட்டாகப் பிரிக்கப்பட்ட ஒரு பகுதி.*** 'பாத்திக்கால் நனையறாப்பல தண்ணி நெறையோணும்.'

**பாதக்குறடு** - பெ. **சாமியாடிக் குறி சொல்பவர் அணியும் மரக்கட்டையில் முள்முள்ளாக இருக்கும் செருப்பு.** 'பாதக்குறடத் தவிர வேற செருப்பொன்னும் போட மாட்டாரு.'

**பாதரசம்** - பெ. **காலில் அணியும் ஓசை எழுப்பாத கொலுசு போன்ற அணிகலன்.** 'அந்தப் பிள்ள கால்ல பாதரசம் போட்டிருக்குது.'

**பாதாள சோதி** - பெ. **கிணற்றில் விழுந்துவிட்ட பொருட்களை எடுக்க உதவும் முட்கொக்கிகள் நிறைந்த சாதனம்.** 'பாதாளசோதி போட்டுத்தான் கொடத்த வெளீல எடுத்தாங்க.'

**பாந்தடை(தல்)** - வி. **வீட்டுக் கூரைக்கும் சுவருக்கும் இடையில் இருக்கும் சந்து பொந்துகளைக் காரைப்பூச்சு கொண்டு மூடுதல்.** 'ஊட்டு வேல எல்லாம் முடிஞ்சிடுச்சு. இனிமே பாந்தடைக்கறதுதான் பாக்கி.'

**பாந்து** - பெ. **வீட்டுக் கூரைக்கும் சுவருக்கும் இடையில் இருக்கும் சந்து பொந்துகள்.** 'ஊட்டுல பாந்து நெறையத் தெரீது.'

**பாம்பேரி** - பெ. **கிணற்றின் சுற்றுச்சுவர்.** 'பாம்பேரி மேல போயி ஏறிக்கிட்டு நிக்கறாம் பாரு.'

**பாய்ச்சல்** - பெ. **ஏணியைச் சாய்த்து வைத்து, எட்டும் உயரத்தில் இருக்கும் வெற்றிலையைக் கிள்ளுதல் ஒரு பாய்ச்சல் என்று பெயர்.** 'ஒரு பாய்ச்சல் கிள்ளிட்டியா.'

**பார்** - பெ. **வெங்காயம், கரும்பு போன்றவை நட அமைக்கப்படும் சிறு மண் திட்டு.** 'நேத்துத்தான் ஒழவோட்டுனம். இன்னிக்கிப் பார் போடோனும்.'

**பார்கட்டுதல்** - வி. **வயலில் பார் அமைத்தல். காண்க: பார்.**

**பார் கலைத்தல்** - வி. **பயிர் ஓரளவு வளர்ந்த பின் அதை வெட்டிச் சமமாக்குதல்.** 'பார் கலச்சாச்சா?

**பார்கோதுதல்** - **காண்க: பார் கலைத்தல்.**

**பார் சட்டம்** - பெ. **வண்டியின் மேல் பகுதியில் நீளமாகப் பொருத்தப்பட்டிருக்கும் (மூன்று) மரச்சட்டம்.** 'பார் சட்டத்தப் புடிச்சுப் பசங்க தொங்கிட்டு வர்றாங்க.'

**பார்ப்பு** - பெ. **வேகமாகத் தொடங்கி ஒரு சில நிமிடங்கள் பெய்து ஓய்ந்துவிடும் மழை அளவு.** 'மழை நல்லாவா வந்தது. ஒரு பார்ப்போட நின்னு போச்சு.'

**பார்வைக்கொப்புளம்** - பெ. **கண் திருஷ்டியால் உடலில் ஏற்படும் கொப்புளம்.** 'கொழந்தக்கி ஒடம்பெல்லாம் பார்வக் கொப்பளம் வந்திருச்சி.'

**பாரவண்டி** - பெ. **மூட்டை முதலிய சுமைகள் ஏற்றிச் செல்லும் மாட்டு வண்டி.** 'அவுங்கப்பன் பாரவண்டி ஓட்டிக்கிட்டு இருக்கறாரு.'

**பால்கறையான்** - பெ. **கூரை முகட்டுச் சட்டத்தை அரித்துத் தின்னும் வெண்நிறமுடைய சிறு கறையான்.** 'மொவுட்டுச் சட்டத்துல பால்கறையான் ஏறியிருக்குது.'

**பால்திரும்புதல்** - வி. **மாடு கன்றுஈன்று சீம்பால் மாறி நல்ல பாலாகுதல்.** 'மாடு இப்ப ரண்டு நாளாத்தா பால் திரும்பிருக்குது.'

**பால்நாகம்** - பெ. **வெண்ணிறமுடைய நாகப் பாம்பு.** 'அந்தப் பக்கம் போனது பால்நாகமாட்டந்தான் தெரிஞ்சுது.'

**பால்பாசி** - பெ. **சிறு குழந்தைகளின் கழுத்தில் போடும் வெண்மை நிறக் குறும்பாசிகள் கோர்க்கப்பட்ட மாலை (இதைப் போட்டால் குழந்தைக்குப் பால் நன்றாக ஜீரணமாகும் என்பது நம்பிக்கை).** 'கொழந்த பால இப்படிக் கதக்குது. ஒரு பால் பாசி வாங்கிப் போடு.'

**பால்பூட்டை** - பெ. **தானியம் அரும்பும் நிலையிலிருக்கும் இளம் கதிர்.** 'காடு நெறையப் பால் பூட்டையா இருக்குது.'

**பால்பூடு** - *பெ.* ***கிள்ளினால் பால் வரும் சிறுபூண்டு வகை.*** 'பால்பூட்ட ஆடு மேஞ்சு புடும்.'

**பால் மாறுதல்** - *வி.* ***மாடு பால் வற்றி விடுதல்.*** 'இந்த எரும பால் மாறீட்டுது.'

**பாலமரம்** - *பெ.* ***இலையைக் கிள்ளினால் மரத்திலிருந்து பால் வடியும் ஒருவகை மரம்.*** 'பால மரத்துக்கொம்புல ஒன்னுவெட்டு.'

**பாலைக்கால்** - *பெ.* ***வீடு கடைகால் போடும்போது செய்யும் சடங்கில் பயன்படுத்தும் பாலமரத்தின் கோல்.*** 'பாலக்கால் வெட்டியாந்து வெச்சிருக்கறயா.'

**பாவனை** - *பெ.* ***நல்ல கவனிப்பு.*** 'எருமைக்குப் பாவன பாத்தால்ல பால் இருக்கும்.'

**பாவாளை** - *பெ.* ***பால் ஊற்றி அரிசிமாவில் செய்யும் தின்பண்டம்.*** 'எங்கயோ பாவாள செய்யறாங்க, மணமடிக்குது.'

**பாவுதல்** - *பெ.* ***வீட்டுப் பயன்பாட்டிற்காகக் கல்லின் மேல் பகுதி வெளியில் தெரியும்படி புதைத்தல்.*** 'பாத்திரங் கழுவுற எடத்துல ஒரு கருங்கல் பாவோனும்.'

**பாழி** - *பெ.* ***பாறையில் நீர் தேங்கி நிற்கும்படியான பெரிய குழி.*** 'பாழியில தண்ணி நெறையக் கெடக்குது. துணி தொவைக்கலாம்.'

**பாளைக்கத்தி** - *பெ.* ***பாளை சீவ (தெளிவு இறக்குவதற்காக) மரமேறுபவர்கள் பயன்படுத்தும் மிக மென்மையான நுனிப் பகுதியுடைய அரிவாள்.*** 'பாளைக் கத்தியில ஒல வெட்டக்குடாது.'

**பாளை சீவுதல்** - *வி.* ***கள், பதநீர் இறக்குவதற்காகப் பனைமரத்தின் பாளையைத் தினமும் காலை, மாலை இருவேளையும் அறுத்துவிடுதல்.*** 'ஒரு நேரம் பாள சீவாட்டியும் தெளுவு கொறஞ்சிடும்.'

**பாளை சேர்த்தல்** - *வி.* ***கள், பதநீர் இறக்குவதற்காக முதலில் இடுக்குக்கோல் கொண்டு பாளையைப் பதப்படுத்தல்.*** 'இன்னம் தெளுவு துளிக்கல. இப்பத்தான் பாள சேக்கரன்.'

**பாளைதள்ளுதல்** - *வி.* ***(பனை, தென்னை) மரம் புதிதாகப் பாளை விடுதல்.*** 'இந்தப் பன பாளதள்ளிடுச்சா.'

## பி

**பிச்சு** - *பெ.* ***ஈரல்.*** 'கறியில ரண்டு பிச்ச எடுத்துப் போடு.'

**பிடிமானம்** - *பெ.* ***செலவு செய்வதில் சிக்கனம்.*** 'காசுல பிடிமானமா இருக்கோணும்டா.'

**பிணி** - *பெ.* ***கட்டில் கயிறு இரண்டிரண்டாகவோ, நான்கு நான்காகவோ சேர்த்துப் பிரிக்கப்பட்டிருக்கும் பகுதி.*** 'இந்தக் கட்டிலுக்கு இருவது பிணி வருமா.'

**பிதுரு** - *பெ.* ***பேரன் அல்லது பேத்தியின் குழந்தை.*** 'அவளுக்கென்ன பேத்துப் பிதுரெல்லாம் எடுத்துட்டா.'

**பிப்பு** - *பெ.* ***பிய்ப்பு. உடல் அரிப்புக் கொடுக்கும் தோல் நோய்.*** 'ஏதோ பிப்பு புடிச்சவளாட்டம் சொறியறா.'

**பிசுக்கு** - *பெ.* ***பொருள் வாங்கிய பின் கேட்டு வாங்கும் அல்லது அவர்களாகவே கொடுக்கும் கொசுறு.*** 'இவ்ளோ காய் வாங்கியிருக்கறன், கொஞ்சம் பிசுக்குப் போடு.'

**பிசினாறி** - *பெ.* ***கஞ்சத்தனம் மிக்கவனைக் குறிக்கும் திட்டுச்சொல்.*** 'அவங்கெடக்கரான் பிசினாறி, ஒரு காசு செலவு பண்ண மாட்டான்.'

**பிர்க்கட்டு** - *பெ.* ***சுற்று வட்டாரப் பகுதி.*** 'இந்தப் பிர்க்கட்டுல என்னய எதுத்து எவன்டா பேச முடியும்.'

**பிரவை** - *பெ.* ***(சினையாகும் முன் வரையான) பெண் ஆட்டுக்குட்டி.*** 'இந்தப் பிரவ இன்னம் பயராவுலயா.'

**பிருத்துப் போதல்** - வி. ***பால் கெட்டு (திரிந்து) போதல்.*** 'பாலு பிருத்துப் போச்சு.'

**பிரி** - பெ. ***பின்னி உருவாக்கப்பட்டிருக்கும் பெரிய கயிற்றில் பிரித்தால் தனியாக வரும் சிறுபகுதி.*** 'நெறையப் பிரிப்போட்டு இந்த வடக்கவுறு பின்னியிருக்கறாங்க.'

**பில்லை** - பெ. ***வெள்ளை கலந்த சிவப்பு நிறம்; அந்நிறம் கொண்ட மாடு.*** 'உங்கூட்ல ஒரு பில்ல இருந்திச்சே. இருக்குதா, வித்துப்புட்டீங்களா.'

**பில்லைச்சாரை** - பெ. ***சிவப்பு நிறத்தில் கறுப்பும் கலந்திருக்கும் அல்லது கருஞ்சிவப்பு நிற வரிகளைக் கொண்டிருக்கும் நிறம்; அந்நிறம் கொண்ட மாடு.*** 'அந்தப் பில்லச்சார என்ன வெலக்குப் போவும்.'

**பில்ச்சாரை** - காண்க: பில்லைச்சாரை.

**பிலுக்கு** - வி. ***மனதிற்குள் விருப்பம் கொண்டு, வெளியே அப்படி இல்லாதது போல பாவனை செய்தல்; பிகு பண்ணுதல்.*** 'டேய் சும்மா பிலுக்காத வாங்கிக்க.'

**பிள்ளை** - பெ. ***பெண் பிள்ளை.*** 'பிள்ள பொறந்திருக்குதாமா.'

**பின்னோர்** - பெ. ***ஒரே வயலில் ஒன்றன் பின் ஒன்றாகப் பல ஏர்கள் உழும்போது இறுதியில் செல்லும் கடைசி ஏர்.*** 'பின்னோர்காரங்கிட்டப் போயிக் கேளு.'

## பீ

**பீ** - பெ. ***தாய விளையாட்டில் ஒன்று எண்ணிக்கை போட்டுப் பழம் எடுக்கும் வகையில் காய் வைக்கும் கடைசிக் கட்டம்:*** 'போச்சு ரண்டு காய் பீயில உழுந்திருச்சு. ரண்டு தாயம் ஒன்னாப்போட்டு எப்பப் பழம் எடுக்கறது.'

**பீக்காளான்** - பெ. ***கருநிறம் உடைய, உண்ணப் பயன்படாத ஒருவகைக் காளான்.*** 'பீக்காளானப் போயிப் புடுங்கியாந்திருக்கற. இது எதுக்காவுது?'

**பீர்** - பெ. ***மாட்டின் முலைக்காம்பை ஒருமுறை இழுத்தால் வரும் பாலின் அளவு.*** 'பாலு ஒரு பீர்தான் பீச்சினன். அதுக்குள்ள ஒதச்சுக்கிட்டு ஒடிருச்சி.'

**பீத்தக் கிணறு** - பெ. ***சுற்றுச்சுவர் தூர்ந்துபோன, பயன்படுத்தப்படாத கிணறு; பாழுங்கிணறு.*** 'அந்தக் காலத்துல தண்ணி நெறயா இருக்கும். இப்பத்தான் பீத்தக் கெணறாப் போச்சு.'

**பீத்தக்கூடை** - பெ. ***பிய்ந்து, பயன்படுத்த முடியாமல் ஆகிவிட்ட கூடை:*** 'பீத்தக் கூடையத் தூக்கியெறிஞ்சுட்டுப் புதுசு வாங்கு.'

**பீத்தத் துணி** - பெ. ***நைந்து போன துணி.*** 'பீத்தத் துணியக் கட்டிக்கிட்டுக் கெடக்கறவளுக்குத் திமிரப் பாரு.'

**பீத்தமொறம்** - பெ. ***பிய்ந்து, சிதைந்து போன முறம்.*** 'பீத்த மொறத்துல, எப்பிடிப் பொடைக்கறது.'

**பீத்தல்** - பெ. ***நைந்து போன பொருள்.*** 'இந்தப் பீத்தல மாத்து மொதல்ல.'

**பீத்தை** - பெ. ***கெட்டுப்போன மோசமான பொருள்.*** 'பீத்தைய எடுத்தெறிடா.'

## பு

**புட்டா** - பெ. ***சேலையில் உள்ள புள்ளிகள்.*** 'புட்டா வெச்ச பொடவயாப் பாத்து எடுத்திருக்கறா.'

**புட்டாணி** - பெ. ***மாட்டின் வாலுக்கு இருபுறமும் கை வைக்கும் அளவுக்கு இருக்கும் குழிவுப் பகுதி.*** 'புட்டாணியில ஒரு தட்டுத்தட்டு. மாடு கொஞ்சம் வெசையாப் போவட்டும்.'

**புட்டு** - பெ. ***1. இட்லி.*** 'ரண்டு புட்டு தின்னுட்டுப் போலாம் இரு.' ***2. ஆணின் விதைப்பை.*** 'ஒரு ஒத உட்டனா புட்டு வீங்கிப்போயிரும்.'

**புட்டுக்காரி** - *பெ.* ***இட்லி சுட்டு வீடு வீடாக எடுத்துச் சென்று விற்கும் பெண்.*** 'புட்டுக்காரி வந்தாச் சொல்லு.'

**புட்டுமா** - *பெ.* ***அரிசி, கேழ்வரகு, கம்பு போன்றவற்றின் மாவை ஆவியில் வேகவைத்துச் செய்யப்படும் உணவுப் பொருள்.*** 'இன்னிக்கிப் புட்டுமா பண்ணலாமா.'

**புடுக்கு** - *பெ.* ***ஆணின் விதைப்பை; விரை.*** 'கெடா புடுக்க ஆட்டிக்கிட்டுப் போவுது பாரு.'

**புடுதம்** - *பெ.* ***தடவை.*** 'ஒரு புடுதம் பாக்கலாம்.'

**புண்ணாக்குப் பூடு** - *பெ.* ***ஆடுகள் தின்னும் ஒருவகைப் பூண்டு.*** 'புண்ணாக்குப்பூடு நெறைய வளந்திருக்குது. ஆட்ட உடு மேயட்டும்.'

**புதுக்கருக்கு** - *பெ.* ***ஒரு பொருள் புதிதாக இருக்கும் போது தோன்றும் பளபளப்பு.*** 'புதுக்கருக்கு மங்காம வெச்சிருக்கறா.'

**புரடை** - *பெ.* ***1. காய்ந்த சுரைக்காயின் மேல் பகுதியை அறுத்து விதைகளை எடுத்துவிட்டு பதநீர் ஊற்றி வைக்கப் பயன்படும் சுரைக்குடுக்கை.*** 'புரடைல தெளுவு நொரச்சுக் கெடக்குது.' ***2. பருப்பில்லாமல் வெற்றாகப் போய்விடும் நிலைக்கடலைக்காய்.*** 'நெறையப் புரடையாப் போச்சு.' ***3. கற்பனை கலந்து பேசும் பொய்.*** 'அவன் அடிக்கற புரடைக்கு அளவே இல்ல.'

**புருடு** - *பெ.* ***1. புடைத்துத் தனியே வெளித் தெரியும் கட்டி.*** 'கழுத்துல என்ன புருடு கட்டியிருக்குது.' ***2. களி உணவில் வேகாமல் சிறு கட்டியாகிவிடும் மாவு.*** 'நல்லாக் கௌறாத புருடு உழுந்திருச்சி.'

**புழுங்கு(தல்)** - *வி.* ***கம்மஞ்சோறு வெந்தபின் லேசான தணலில் இறுகுதல்.*** 'கம்மஞ்சோறு புழுங்கீருச்சுனாப் பாரு. எறக்கலாம்.'

**புழுதி ஓழவு** - *பெ.* ***கோடையில் மழை பெய்ததும் உழுத நிலத்தில் சிலநாட்கள் கழித்து அந்த உழவின் மீதே மீண்டும் உழும் உழவு.*** 'புழுதி ஓழவு போட்டாச்சா.'

**புளிக்கோது** - *பெ.* ***புளியம்பழத்தில் இருக்கும் நார் (மலச்சிக்கலுக்கு இதனை ஆசன வாயில் சொருகுவர்).*** 'புளிக்கோது எடுத்திட்டுக் கொட்ட வாங்கோனும்.'

**புளிச்ச நார்** - *பெ.* ***புளிச்சக்கீரை செடியின் தண்டுப் பகுதியலிருந்து தயாரிக்கும் நார் (இதிலிருந்து கயிறு திரிப்பர்).*** 'புளிச்சநாருல திரிச்ச கவுறு இது.'

**புளிச்சநார்க்கயிறு** - *பெ.* ***புளிச்சக் கீரைத் தண்டிலிருந்து தயாரிக்கப்பட்ட நாரினால் திரிக்கப்படும் கயிறு (இது கட்டில் கட்ட உதவும்).*** 'புளிச்ச நார்க் கயித்துல தான் இந்தக் கட்டல் கட்டுனம். ரண்டு வருசம் ஆச்சு.'

**புளிச்சான்** - *பெ.* ***ஒரு வகைக் களை; இதன் கொழுந்தைப் பறித்துத் தின்றால் இனிக்கும்.*** 'அந்தக் காட்டோரம் புளிச்சான் அடந்து கெடக்குது.'

**புளியம்புல்** - *பெ.* ***ஒரு வகைக் களை; இதனை ஆடு, மாடுகள் விரும்பித் தின்னும்.*** 'புளியம்பில்லாப் பாத்துப் புடுங்கியாந்து வெள்ளாக்குட்டிக்குப் போடறான்.'

**புளுத்தி** - *பெ.* ***ஆண்களைக் குறிக்கும் திட்டுச்சொல். காண்க: புளுத்து.*** 'அவன் என்ன பெரிய புளுத்தியா.'

**புளுத்து** - *பெ.* ***மூடியிருக்கும் தோல் உறையிலிருந்து அழுத்தி ஆண்குறியின் குமிழ்ப் பகுதியை வெளிக்கொண்டு வருதல் (திட்டும்போது இந்தச் சொல்லைப் பயன்படுத்துவர்).*** 'அவந்தான் உனக்குப் புளுத்தறானா?'

**புறக்கு** - *பெ.* ***மிகுந்த ஓசையுடன் வெளிப்படும் குசு.*** 'புறக்குச் சத்தம் ஊரே கேக்குமாட்டம் உடரான்.'

**புனிச்சல்** - *பெ.* ***மாடுகளுக்கு வரும் கோமாரி நோய்.*** 'மாட்டுக்குப் புனிச்சக் கண்டுடிச்சு.'

**புனுப்பு** - *பெ.* ***மாடுகளுக்கு வரும் காய்ச்சல்.*** 'புனுப்பு வந்திடுச்சு, தண்ணியே குடிக்கல.'

## பூ

பூ - *பெ.* ***கோழிகளின் தலையில் சிவந்த நிறத்தில் இருக்கும் உறுப்பு.*** 'இந்தக் குஞ்சுக்குப் பூ பெரிசா இருக்குது. சேவலாத்தான் இருக்கும்.'

**பூக்கட்டுதல்** - *வி.* ***கதிர்களில் பூ அரும்புதல்.*** 'பூட்டை பூக்கட்டீருச்சு.'

**பூங்குட்டி** - *பெ.* ***ஈன்று சிறிது நேரமே, நாட்களே ஆன குட்டி.*** 'நாய்க்குட்டி வேணுமின்னு கேட்டன். பூங்குட்டிய எடுத்தாந்திருக்கறான் இன்னம் கண்ணே தொறக்கல.'

**பூங்குழந்தை** - *பெ.* ***பிறந்து சில நாட்களே ஆன குழந்தை.*** 'பூங்கொழந்தய அப்பிடியா தூக்கறது.'

**பூச்சாட்டுதல்** - *வி.* ***கோயில் திருவிழாப் போடுதல்.*** 'நாளைக்கு மாரிங்கோயில் பூச்சாட்டறாங்க.'

**பூச்சிக்காளை** - *பெ.* ***இனப்பெருக்கத்திற்கென வளர்க்கப்படும் காளை.*** 'அவுங்கூட்ல ரண்டு பூச்சிக்காள இருக்குது.'

**பூச்சி** - *பெ.* ***பாம்பு.*** 'அந்தப் பக்கம் போவாத. பூச்சிகீச்சி இருக்கும்.'

**பூச்சுவேலை** - *பெ.* ***செங்கல்லால் சுவர் எழுப்பியபின், மேலே காரை பூசும் வேலை.*** 'வீடு பூச்சுவேல நடந்துக்கிட்டு இருக்குது.'

**பூட்டு** - *பெ.* ***தடவை.*** 'இந்தப் பூட்டாச்சும் வெளையுமா.' 2. ***கூரை வேயப் பயன்படும் (சவுக்கு, தேக்கு போன்ற மரங்களின்) கோல்.*** 'அந்தத் தேக்கங்பூட்டு நல்லாருக்கும்.'

**பூட்டை** - *பெ.* ***தானியக் கதிர்.*** 'நாளைக்குப் பூட்ட பொறுக்கோணும்.'

**பூடு** - *பெ.* ***சிறு (நிலத்தில் படரும் அல்லது சிறிது உயரமே வளரும்) செடி; பூண்டு.*** 'அந்தப் பூட்டப் புடுங்கிப் போடு.'

**பூலவாக்கு** - *பெ.* ***பிறருக்குத் தெரியாத ஒருவரின் சொந்த விவகாரங்கள்; வண்டவாளம்.*** 'உம் பூலவாக்கு ஆருக்குத் தெரியாத இருக்குது.'

**பூலாஞ்செடி** - *பெ.* ***வேலியில் படரும் ஊதா நிறப் பழங்கள் உடைய செடி.*** 'பூலாஞ்செடி பழத்தத் தின்னா வாயெல்லாம் நீல நிறமாயிரும்.'

**பூவாக்கு** - *பெ.* ***ஒன்றை நினைத்துக்கொண்டு, அது நடக்குமா, நடக்காதா எனக் கோயிலில் பார்க்கும் குறிப்பு.*** 'கலியாணத்துக்குக் கோயில்ல பூவாக்குக் கேக்கறாங்களாம்.'

**பூவிலிறங்குதல்** - *வி.* ***கோயிலில் நடக்கும் தீமிதி.*** 'பூவிலிறங்குறன்னு வேண்டுதல் இருக்குது.'

**பூவோடு** - *பெ.* ***கோயில் திருவிழாவில் எடுக்கும் தீச்சட்டி.*** 'நாளைக்கு பூவோடு எடுக்கறாங்க.'

**பூளைகாஞ்சதனம்** - *பெ.* ***பொறாமையால் ஒருவருக்குச் செய்யும் இடைஞ்சல்.*** 'இந்தப் பூளகாஞ்சதனத்த இங்க வெச்சுக்காத.'

**பூளைப்பூடு** - *பெ.* ***வெண்ணிறத்தில் பஞ்சு போன்ற நீண்ட பூங்கொத்தினை உடைய ஒரு வகைச் செடி.*** 'பூளப்பூட்டப் புடுங்கி எறி.'

## பெ

**பெட்டுக்குழி** - *பெ.* ***மோட்டார் வைப்பதற்காகக் கிணற்றை ஒட்டித் தோண்டப்படும் குழி.*** 'பெட்டுக்குழியில மம்மட்டி வெச்சிருக்கறன் எடுத்தா.'

**பெப்பளத்தான்** - *பெ.* ***வெகுளி; ஏமாளி.*** 'அவன் ஒரு பெப்பளத்தான்டா.'

**பெரகாண்ட** - *வி.அ.* ***பின்னால், பின்பக்கத்தில்.*** 'உனக்கும் பெரகாண்ட பாருடா.'

**பெராலச்சட்டி** - *பெ.* ***மாமிசம் சமைப்பதற்காகத் தனியாக வைத்திருக்கும் சட்டி.*** 'பெராலச் சட்டிய வெளிய கொண்டோயிக் கமுத்து.'

**பெரியகாரியம்** - *பெ.* ***சாவு.*** 'ஊர்ல ஒரு பெரிய காரியம் ஆயிருச்சுங்க.'

**பெரியவள் ஆதல்** - *பெ.* ***பெண் வயதுக்குவருதல்.*** 'பொண்ணு பெரியவளாயிட்டா.'

**பெரியையன்** - *பெ.* ***பெரியப்பா; பெரிய தாத்தா.*** 'எங்க பெரியையன் கூப்பட்டாங்க.'

**பெருக்கான்** - *பெ.* ***பெருச்சாளி.*** 'பெருக்கானோட ஒரே தொந்தரவு.'

**பெருங்கூட்டு உடம்பு** - *பெ.* ***கம்பீரமும் உயரமும் கொண்ட பரம்பரையில் பிறந்தவரின் சிறந்த உடல்கட்டு.*** 'அவருக்குப் பெருங்கூட்டு ஒடம்பு. அவுங்க பரம்பரையே அப்பிடி.'

**பெருஞ்சாதிக்கோழி** - *பெ.* ***நீண்ட கால்களைப் பெற்று உயரமாக வளரும் கோழி வகை.*** 'பெருஞ்சாதிக் கோழில ஒன்னு போட்டா போதும்.'

**பெருந்தலைக்காக்கா** - *பெ.* ***அண்டங்காக்கை.*** 'பெருந்தலக் காக்காப் பீத்தின்னப் போச்சாம்; எறகெல்லாம் பீயாச்சாம்.' (பழமொழி)

**பெரும்பீ** - *பெ.* ***வயதுக்கும் அளவுக்கும் பொருந்தாமல் கழிக்கும் அதிக மலம்.*** 'அவன் பெரும்பீ பேழ்றான். அப்பறம் எங்க ஒடம்பு தேறும்.'

**பெரும்போக்கு** - *பெ.* ***தாராள குணம்.*** 'அவம்பெரும்போக்கான ஆளுடா.'

**பெருவத்து** - *பெ.அ.* ***நீண்ட கால்களை உடைய (கோழி).*** 'பெருவத்துக் கோழியா வாங்கியாந்த.'

**பெறந்தவள்** - *பெ.* ***ஆணின் தங்கை.*** உம் பெறந்தவளுக்கு என்ன சீர் செஞ்ச?'

**பெறந்தவன்** - *பெ.* ***பெண்ணின் தம்பி.*** 'பெறந்தவன உட்டுட்டு ஒரு நிமிசங் கூடத் தனியா இருக்க மாட்டா.'

## பே

**பேண்டு** - *வி.அ.* ***மலம் கழித்து.*** 'கொழந்த மடியிலயே பேண்டு வெச்சிருச்சு.'

**பேர் சொல்லாதது** - *பெ.* ***தொடை இடுக்கில் வரும் கட்டி (துடுப்பைச் சூடாக்கி இதன் மேல் ஒத்தடம் கொடுப்பர்).*** 'அவனுக்குப் பேர் சொல்லாதது வந்திருக்குது.'

**பேரணிக்கூடை** - *பெ.* ***அறுவடை செய்த தானியக் கதிர்கள், பருத்தி போன்றவற்றை நிறைத்துத் தூக்கிச் செல்ல உதவும் பெரிய கூடை.*** 'கம்மம் பூட்ட பேரணிக்கூடை கூட ரொம்புலயே.'

**பேழ்** - *வி.* ***மலம் கழி.*** 'ஒரு நாளக்கி எத்தன தடவ பேழ்றது?'

## பொ

**பொக்கணம்** - *பெ.* ***தாயத்தில் அனைத்துச் சோழிகளும் கவிழ்ந்து விழும் நிலை (இதை ஒன்றுமில்லை என்றோ பன்னிரண்டு என்றோ எடுத்துக் கொள்வர்).*** 'பொக்கணம் உழுந்திருக்குது.'

**பொக்கனாத்தி** - *பெ.* ***ஒன்றும் இல்லாதவள் / ன்.*** 'பொக்கனாத்திக்குப் பேச்சு மட்டும் கொறவில்ல.'

**பொக்கு** - *பெ.* ***உள்ளே ஒன்றும் இல்லாத நிலக்கடலைக் காய்.*** 'இந்த வெருசம் எல்லாம் பொக்காப் போயிருச்சு.'

**பொகையோடு** - *பெ.* ***கூரையில் புகை வெளியேறுவதற்குச் சிறு கூண்டுபோல அமைக்கப்படும் ஓடு.*** 'இந்த எடத்துல ஒரு பொகையோடு போடோணும்.'

**பொங்கச்சருவம்** - *பெ.* ***பொங்கல் வைப்பதற்கான பித்தளைப் பாத்திரம்.*** 'பொங்கச்சருவம் தகதகன்னு மின்னுது.'

**பொங்கமொடா** - *பெ.* ***பொங்கல் வைப்பதற்கான பெரிய பானை.*** 'பொங்கமொடா சாஞ்சாப்பல கொழந்த திரும்பி உழுவுது.'

**பொங்கு** - *பெ.* **பறவைகளின் இறகு.** 'கோழி கனமேயில்ல வெறும் பொங்குதான்.'

**பொச்சாட்டிக் குருவி** - *பெ.* **வால் பகுதியை எந்நேரமும் அசைத்தபடியே இருக்கும் ஒரு வகைக்குருவி.** 'பொச்சாட்டிக் குருவிய மரத்துல பாரு.'

**பொச்சு** - *பெ.* ***மலத்துவாரம், சூத்து.*** 'பொச்சுல தண்ணியா ஊத்துது.'

**பொச்சுக்குட்டு** - *பெ.* ***உடம்பில் மலத்துளையின் இருபுறமும் உள்ள சதைப் பகுதி. சூத்தாம்பட்டை, பிருஷ்டம்.*** 'பொச்சுக்குட்டுலயே ரண்டு வெச்சிருவம் பாத்துக்க.'

**பொச்செரிப்பு** - *பெ.* ***பொறாமை. பிறரைக் குறித்து மனதில் கொள்ளும் பொறாமையினால் ஏற்படும் எரிச்சல்.*** 'அவனுக்கேண்டா இத்தன பொச்செரிப்பு.'

**பொசுகுனி** - *பெ.* ***ஒருவரைப் பற்றிப் புறம் பேசுதல்; கோள் சொல்லுதல்.*** 'பொசுகுனி பேசற பழக்கம் அவங்கிட்ட இருந்து போவாது.'

**பொசுவினி** - *பெ.* **பொறாமை பிடித்தவள் / ன்.** 'அவ ஒரு பொசுவினிடா.'

**பொதுவினித்தனம்** - *பெ.* ***பொறாமைக் குணம்.*** 'பொசுவினித்தனம் மனுசனுக்கு ஆவாதுடா.'

**பொட்டாட்டம் இரு** - *வி.* ***செயலற்றுச் சும்மா இருத்தல்.*** 'குறுக்க பேசாத, பொட்டாட்டம் இருடா.'

**பொட்டி** - *பெ.* ***1. கள், பதநீர் இறக்கும் மரமேறிகள் இடுப்பில் கட்டிக்கொள்ளும் கூம்பு போன்ற பெட்டி (இது இடுப்பின் பின் பக்கம் இருக்கும்; அரிவாள், சுண்ணாம்பு போன்ற பொருட்களை அதற்குள் வைத்துக் கொள்வர்).*** 'பொட்டியில ஆம்பரக்கத்தி எடுத்து வெக்க மறந்துட்டன்.' ***2. இரண்டு அல்லது மூன்று வள்ளம் பிடிக்கும் அளவுக்கான சிறு கூடை.*** 'கல்லக்கா எத்தன பொட்டி ஆச்சு.'

**பொட்டிகட்டு(தல்)** - *வி.* ***மரமேறிகள் மரமேறச் செல்ல ஆயுத்தமாகுதல்.*** 'நேரமாச்சு, இன்னம் பொட்டி கட்டுலயா.'

**பொட்டி வண்டி** - *பெ.* ***பயணம் செய்யும் வண்டி.*** 'பொண்ணும் மாப்பிளயும், பொட்டு வண்டியில வர்றாங்க.'

**பொட்டு** - *பெ.* ***பயறு வகைகள் செடியில் இருக்கும் போது பாதுகாப்பாக இருக்கும் காய்த்தோல் சருகு (இதனைப் பிரித்தெடுத்து ஆட்டுக்கு உணவாகத் தருவர்).*** 'தொவரம் பொட்டு அள்ளி வெள்ளாட்டுக்கு வெய்யி.'

**பொட்டுப்போல இரு** - ***காண்க: பொட்டாட்டம் இரு.***

**பொடக்காலி** - *பெ.* ***வீட்டின் பின்னுள்ள (குளிக்க, சிறுநீர் கழிப்பதற்கான) இடம்.*** 'பொடக்காலிப்பக்கம் இருட்டுல என்ன பன்ற.'

**பொடங்கு** - *பெ.* ***பயிரை அறுவடை செய்தபின் அடி வேரிலிருந்து தழைந்து வரும் இரண்டாம் பயிர்.*** 'தண்ணி உட்டா பொடங்கு நல்லா வரும்.'

**பொடத்தி** - *பெ.* ***ஆபத்து வரும்போது தப்பிப்பதற்காக வளையில் எலி வைத்திருக்கும் அவசரகால வழி.*** 'பொடத்தி எந்தப் பக்கம் இருக்குதுன்னு தெரிஞ்சா எலியப் புடிச்சிரலாம்.'

**பொடனி** - *பெ.* ***பின் கழுத்துப் பகுதி.*** 'பொடனிலயே அடி உழுந்திடுச்சு.'

**பொடி** - *பெ.* ***வெயிலில் காய்ந்து, கால் வைக்க முடியாத அளவுக்கு சூடு கொண்டுவிடும் தரை.*** 'காலே வெக்க முடியல. பொடிச் சுடுது.'

**பொடை** - *பெ.* ***கதிர் வெளிவரும் முன் பயிரின் நுனியில் தோகையால் மூடப்பட்டுப் புடைத்துத் தெரியும் பருவம்.*** 'கம்பு பொடை கட்டிருச்சா.'

**பொன்னுப்பிள்ளை** - *பெ.* **மணமகள்.** 'பொன்னுப்பிள்ள பாக்கலச்சணமா இருக்கறா.'

**பொணப்புடுச்சவள் / ன்** - *பெ.* **எப்போதும் ஏதாவது ஒன்றிற்காக பிணக்குக் கொள்பவள் / ன்.** 'அவ கெடக்கறா பொணப்புடுச்சவ.'

**பொணையல்** - *பெ.* **ஒன்றோடு ஒன்று அல்லது ஒருவரோடு ஒருவர் பின்னிக் கொள்தல்.** 'அங்க ரண்டு பேரு பொணையல் போட்டுக்கிட்டுக் கெடக்கறாங்க.'

**பொணையல் பாம்பு** - *பெ.* **ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து உறவு கொள்ளும் நிலையிலிருக்கும் பாம்பு.** 'பொணையல் பாம்பாட்டம் ரண்டு பேரும் கெடக்கறாங்க.'

**பொத்துதல்** - *வி.* **கூடை, முறம் முதலியவற்றிற்குப் பனை நாரால் கட்டுப்போட்டுப் பழுது பார்த்தல்.** 'கூட மொறமெல்லாம் பொத்தக் குடுக்கோனும்.'

**பொத்தை** - *பெ.* **பொத்தல் விழுந்த பயன்படாத நிலையில் இருக்கும் கூடை, முறம் போன்றவை.** 'கூடையெல்லாம் பொத்தையாப் போச்சு.'

**பொதி** - *பெ.* **நான்கு மூட்டை தானியம் அல்லது இரண்டு மூட்டை வெல்லம் கொண்ட அளவு.** 'கம்பு ரண்டு பொதி ஆவுமா.'

**பொதி எருது** - *பெ.* **பொதி மூட்டைகளைச் சுமக்கப் பழைய காலத்தில் பயன்படுத்தப்பட்ட எருது.** 'பொதி எருதாட்டம் வளந்துட்டானே தவிர, அறிவு கெடையாது.'

**பொதிமாடு** - **காண்க: பொதி எருது.**

**பொந்துவால் நரி** - *பெ.* **மண்ணில்வளை பறித்து அதற்குள் வாழும் ஒருவகை நரி.** 'பொந்துவால் நரியாட்டம் முட்டிக்கிட்டு வர்றான்.'

**பொம்பளச்சட்டி** - *பெ.* **பெண் தன்மை மிகுந்திருக்கும் ஆண்; அலி.** 'அவனோட பேச்சப் பாத்தா பொம்பளச் சட்டியாட்டம் தெரீது.'

**பொம்மரம்** - *பெ.* **பெண் பனைமரம்; காய் காய்க்கும் பனைமரம்.** 'பொம்மரத்துக் கள்ளுதான் ருசியா இருக்கும்.'

**பொய்க்காய்** - *பெ.* **உள்ளே எதுவுமற்ற தேங்காய்; நுங்கு.** 'இந்தக் கொலையில மூனு பொய்க்காயி.'

**பொய்நிலை** - *பெ.* **நெற்றிக்கும் கன்னத்திற்கும் இடையிலான பகுதி; நெற்றிப் பொட்டு.** 'கல்லு கொஞ்சம் தவறி பொய் நெலையில பட்டிருந்தா என்னாவறது.'

**பொய்மோடம்** - *பெ.* **மழை பெய்யாமல், வருவது போல ஏமாற்றிக் கலைந்துவிடும் மேகக் கருக்கல்.** 'வானம் சும்மா பொய்மோடம் போடுது.'

**பொய்யேரி** - *பெ.* **வாய்க்கால் இல்லாத இடத்தில் ஏரிபோல் அமைந்த வரப்பு.** 'அந்தப் பொய்யேரில ஆட்ட மேயி.'

**பொருக்கு** - *பெ.* **புண் காய்ந்ததும் மேல் பகுதியில் கருப்பாய் அடை போன்று கட்டி, உதிர்ந்துவிடும் தோல் பகுதி.** 'பொருக்கு தானே உழுந்திரும் கிள்ளாத.'

**பொருப்பு** - *பெ.* **ஓலைக் கொட்டகை செம்மையாக, பார்வைக்கு அழகாக அமைதல்.** 'கொட்டாயி நல்ல பொருப்பா இருக்குது.'

**பொருமல்** - *பெ.* **சரியாக உணவு செரிக்காமல் வயிறு உப்பிப் போதல்.** 'வயித்துப் பொருமல் எப்படி இருக்குது.'

**பொலி** - *பெ.* **இருவரின் நிலங்களைப் பிரிக்கும் வரப்பு.** 'பொலியில ரண்டு வெலா சேத்து ஒட்டிருக்குது.'

**பொழப்பு** - *பெ.* **வாழ்க்கை; தொழில்.** 'வவுசி வந்து வாசல்ல நின்னுக்கிட்டு வருட்டோ போவுட்டோங்குது. பொழப்பு போயி பொடக்காலியில நின்னுக்கிட்டுப் போவுட்டோ வருட்டோங்குது.' - பழமொழி.

**பொழப்புத்தனம்** - **காண்க:** பொழப்பு.

**பொறக்காண்ட** - *வி.அ.* ***பின்னால்:*** 'பொறக்காண்ட திரும்பிப் பாரு.'

**பொறத்தாண்ட** - **காண்க:** பொறக்காண்ட.

**பொறந்தவள்** - **காண்க:** பெறந்தவள்.

**பொறந்தவன்** - **காண்க:** பெறந்தவன்.

**பொறம்பாரம்** - *பெ.* ***வண்டியின் பின்பக்கப் பாரம்.*** 'பொறம்பாரம் எச்சாப் போயிடுச்சு.'

**பொறம்பு** - *பெ.* ***கல் துகள்களும் நுணுங்காத கற்களும் கொண்ட கிணறு.*** 'கெணறுவெட்டி என்ன பண்றது பொறம்பாப் போச்சே.'

**பொறி** - *பெ.* ***பறவை இறகு, சேலை, பிற துணிகள் போன்றவற்றில் இருக்கும் புள்ளிகள் நிறைந்த தன்மை; ஒரு வகை டிசைன்.*** 'சட்டத்துணி பொறிப்பொறியா இருக்குது.'

**பொறிக்கோழி** - *பெ.* ***பொறிப் பொறியான இறக்கையைக் கொண்ட கோழி.*** 'அந்தப் பொறிக்கோழியத் தொரத்திப் புடி.'

**பொறியோடு** - *பெ.* ***பயிறு வகைகளை வறுப்பதற்கு உதவும் (பெரிய வாணலி போன்ற) வாயகன்ற மண்பாண்டம்.*** 'பொறியோடு சும்மாகாயுது. பயிரக் கொடு.'

**பொறை** - *பெ.* ***பீரோவுக்குள் அடைப்புடன் இருக்கும் மேல்பகுதி.*** 'பொறையத் தொறந்து பாரு.' ***2. கண்ணில் கட்டும் படலம்.*** 'கண்ணுல பொற கட்டுது.' ***3. முன்னிரவு நேரம்.*** 'ஊட்டுக்குப் பொறைக்கு வாரேன்.' ***4. பால் தயிராகத் துவைவதற்கு ஊற்றும் சிறிதளவு தயிர் அல்லது மோர்; உறை.*** 'கொஞ்சம் பொறை இருந்தாக் குடு.'

**பொறை மோர்** - **காண்க:** பொறை.

**பொன்னாம் பூச்சி** - *பெ.* ***பொன்வண்டு.*** 'பொன்னாம்பூச்சி புடிக்கப் போறான்.'

# போ

**போக்கடா** - *பெ.* ***பலமில்லாதவன்; எதற்கும் பயனற்றவன்.*** 'சும்மா கெடக்கற போக்கடா, சுடுகாட்டு வெரைக்கும் தூக்கடா' - பழமொழி.

**போக்கத்தவள் / ன்** - *பெ.* ***திட்டுச்சொல். வாழ வழி ஏதும் அற்றவள் / ன்.*** 'என்னயப் போக்கத்தவன்னு நெனச்சியா.'

**போக்கிடம்** - *பெ.* ***புகலிடம்.*** 'எங்களுக்குப் போக்கிடமேது.'

**போக்கியம்** - *பெ.* ***கொடுத்த பணத்திற்கு வட்டியில்லை; உழும் நிலத்திற்குப் பணம் இல்லை என்று நிலம் உழுபவருக்கும் சொந்தக்காரருக்கும் இடையே ஏற்படும் ஒப்பந்தம்.*** 'போக்கியத்துக்கு நெலம் ஓட்டறம்.'

**போங்காலம்** - *பெ.* ***அழிவுகாலம்; அழிந்து போவதற்கான காலம்.*** 'அவனுக்குப் போங்காலம் வந்திருச்சு.'

**போச்சாது** - *பெ.* ***அழும் குழந்தையைச் சமாதானப்படுத்தும் சொல்.*** 'எங்கண்ணுல்ல.... போச்சாதுடா.'

**போணி** - *பெ.* ***நீர்மைத் தன்மையுள்ளவற்றை (நீராகாரம், தண்ணீர்) எடுக்க உதவும் உருளை வடிவப் பாத்திரம்.*** 'போணியில கொஞ்சம் நீத்தண்ணி கரச்சா.'

**போத்தாலை** - *பெ.* ***புகையிலை.*** 'ஒரு துண்டு போத்தால குடு.'

**போத்து** - *பெ.* ***1. கரும்புப் பயிரின் பக்கவாட்டில் வரும் இனிப்பற்ற தடிமனாகக் கிளைத்து வரும் பயிர்.*** 'அந்தப் போத்த முறிச்சு எருமைக்குப் போடு.' ***2. தழைவதற்காக வெட்டி நடப்படும் கிளை.*** 'முருங்கைக்கு ஒரு போத்து நடோணும்.'

**போதாக்குறை** - *பெ.* ***பற்றாக்குறை.*** 'சோத்துக்கே போதாக்கொறையா இருக்குது.'

**போதிச்சுப் போ(தல்)** - *வி.* ***மழை, வெயிலில் கிடந்த மரம் கனம் குறைந்து அடர்த்தியற்றுப் போதல்.*** 'ரொம்ப நாளாப போட்டு வெச்சு மரம் போதிச்சுப் போச்சு.'

**போப்பு வண்டி** - *பெ.* ***வாடகை மாட்டு வண்டி.*** 'இப்பவெல்லாம் போப்பு வண்டியே கொறஞ்சு போச்சு.'

**போலுத்தப்பை** - *பெ.* ***வண்டியின் முன்புறம் இரு பக்கங்களிலும் போடப்பட்டிருக்கும் உட்குழிவான மரச்சட்டம்.*** 'போலுத்தப்ப மேல ஏறி உக்கோந்துக்கிட்டான்.'

**போவணி** - ***காண்க:*** **போணி.**

**போழை** - *பெ.* ***பணம் வைத்துக் கொள்ளும் சிறு பை (பர்ஸ்).*** 'போழைய எடுத்து மடியில வெச்சுக்க.'

**போழைப்பொட்டி** - *பெ.* ***பொருள்கள் போட்டு மூடு வைத்துக் கொள்ளும் பிரம்புப் பெட்டி.*** 'போழப்பொட்டி ஒன்னு வாங்குனா நல்லது.'

**போன எட்டு** - *பெ.* ***சென்ற வாரம்.*** 'போன எட்டு சந்தைக்கிப் போனயா.'

**போனாம்போக்கி** - *பெ.* ***1. தானியத்தைத் தூற்றும்போது காற்றில் செல்பவை.*** 'இந்தத் தடவை நெறையப் போனாம் போக்கியாப் போச்சு.' ***2. திட்டுச்சொல். திக்கறவள் / ன், ஊர்சுற்றி, ஒன்றுக்கும் உதவாதவள் / ன்.*** 'இந்தப்போனாம் போக்கியக் கட்டிக்கிட்டு அழுவ வேண்டீதா இருக்குது.'

## ம

**மக்கியா நாள்** - *பெ.* ***அடுத்த நாள்.*** 'கலியாணத்துக்கு மக்கியா நாளுத்தான் வந்தான்.'

**மக்கிளித்தல்** - *வி.* ***1. செய்து கொண்ட ஒப்பந்தத்தை மீறுதல்; மறுதலித்தல்.*** 'நா மக்கிளிச்சன்னா கால்ல இருக்கறதக் கழட்டி அ டி ங் கே கா' ***2. கீழே விழுந்து அடிபடுவதால் எலும்பு இடம் மாறுதல்.*** 'உழுந்தராதடா கையில மக்கிளிச்சிக்கும்.'

**மக்கிரி** - *பெ.* ***உழவு வேலைகளுக்குப் (கதிர் அள்ளி வர) பயன்படும் பெரிய கூடை.*** 'அந்த மக்கிரிய எங்க எடுத்தோர.'

**மக்கிரிக் கூடை** - ***காண்க:*** **மக்கிரி.**

**மகடம்** - *பெ.* ***கண்ணில் விழும் திரை.*** 'கண்ணுல மகடமாட்டந் தெரீது.'

**மங்கண்டம்** - *பெ.* ***ஆழத்தில் பாறைகள் இல்லாத முழுக்க முழுக்க மண் உள்ள நிலப்பகுதி.*** 'வெட்ட வெட்ட மங்கண்டமாத்தான் வருது.'

**மங்கலத்தான்** - *பெ.* ***நாவிதன் (மங்கலச் செயல்களில் முன் நிற்பதால் இப்பெயர்).*** 'அந்த மங்கலத்தானக் கூப்புடு.'

**மச்சான்டாரு** - *பெ.* ***கணவனின் அண்ணன்.*** 'உங்க மச்சான்டாரு எங்க போயிருக்கறாரு.'

**மச்சுப் போ(தல்)** - *வி.* ***எடுத்தால் உதிருமளவு உருவமற்றுப் பொருள் மிகவும் நைந்து போதல்.*** அப்பிடியே போட்டு வெச்சிருந்து மச்சுப் போயிருச்சு.'

**மசநாய்** - *பெ.* ***வெறி பிடித்த நாய்.*** 'நாக்கு தொங்குது. மசநாயோ என்னமோ.'

**மசப்புள்ள** - *பெ.* ***வெகுளியான பெண்.*** 'அவ மசப்புள்ள. சூதுவாசு தெரியாது.'

**மசனப்பாறை** - *பெ.* ***உறுதியற்றுப் பொடியும் தன்மையுடைய பாறை.*** 'கெணத்துல எல்லாம் மசனப்பாறை.'

**மசனை** - *பெ.* ***விரைவில் நொறுங்கிவிடும் கற்களைக் கொண்ட கிணறு.*** 'அவங்க கெணறு மசனதான்.'

**மசையன்** - *பெ.* ***வெகுளித்தன்மை கொண்டவன்; விபரமில்லாதவன்.*** 'அவன் மசையனாட்டம் இருக்கறான்.'

**மஞ்சக்கொழுப்பு** – *பெ.* ***(ஆட்டிறைச்சியில்) சதைகளில் மஞ்சள் நிறத்தில் படர்ந்திருக்கும் அதிகக் கொழுப்பு.*** 'அவனுக்கு மஞ்சக் கொழுப்புக் கட்டீருக்குது.'

**மஞ்சச்சாரை** - *பெ.* ***மஞ்சள் நிறமுடைய சாரைப்பாம்பு வகை.*** 'போறது மஞ்சச்சாரை தான்.'

**மஞ்சச் சிட்டு** - *பெ.* ***மஞ்சள் நிறமுடைய சிட்டுக்குருவி.*** 'மஞ்சச் சிட்டு நெறையாப் பறக்குது.'

**மட்டச்சாளை** - *பெ.* ***கூரை தாழ்வாகப் போடப்பட்டிருக்கும் சமையல் அறை அல்லது தட்டுமுட்டுச் சாமான்கள் போடும் இடம்.*** 'ஒரு மட்டச்சாளையாச்சும் போடோணும்.'

**மட்டி** - *பெ.* ***கரும்புப் பாகு காய்ச்சும் போது மேலே வரும் அழுக்கு நிறைந்த நுரை போன்ற பொருள் (காண்க: கோழை - 2).*** 'அந்த மட்டிய எடுத்துப் பன்னிக்கு ஊத்து.'

**மட்டு** - *பெ.* 1. ***பூசுவதற்குப் பயன்படும் கலவை.*** 'கொஞ்சம் மட்டிருந்தா ஓட்டைக்குப் பூசிரலாம்.' 2. ***சிறிது குறைவு.*** 'உப்பு மட்டா இருக்கட்டும்.'

**மடகழ்ட்டி** - *பெ.* ***பாசனத்திற்காக அமைக்கப்படும் தண்ணீர்க்குழாய் வரிசையில் ஆங்காங்கே பாய்வதற்காக அமைக்கப்பட்டிருக்கும் மடையைக் கழட்டுவதற்குப் பயன்படும் (ஸ்பேனர் போன்ற) கருவி.*** 'மடகழ்ட்டிய எடுத்தாந்தியா.'

**மடி** - *பெ.* ***ஆடு, மாடுகளின் முலைப்பகுதி.*** 'மாட்டுக்கு என்னன்னு தெரீல, மடி வீங்கியிருக்குது.'

**மடி இறங்கு(தல்)** - *வி.* ***கன்று ஈனுவதற்குச் சிலநாட்களுக்கு முன் ஆடு மாடுகளுக்கு முலைப்பகுதி பால் சுரப்பினால் பெருத்துத் தெரிதல்.*** 'மடி எறங்கிருச்சு. ரண்டு மூணு நாள்ல கன்னுப் போட்டுடும்.'

**மடிப்பிச்சை** - *பெ.* ***மடியேந்தி எடுக்கும் பிச்சை.*** 'அவங்கிட்ட மடிப்பிச்சகேக்கவா போறன் நானு.'

**மடிப்பை** – *பெ.* ***மடிப்பகுதியில் வைத்திருக்கும் பணப்பை.*** 'மடிப்பையில காசு இருக்கும் பாரு.'

**மடிவிடு(தல்)** - *வி.* ***சினையான ஆடு, மாடுகளுக்குக் குறிப்பிட்ட நாட்கள் கழிந்ததும் முலைப்பகுதி பெருத்துக் காணப்படுதல் (இதைக் கொண்டு சினையை உறுதிப்படுத்திக் கொள்வர்).*** 'ஆடு மடி உட்டிருக்கறதப் பாத்தா செனையாட்டந்தான் இருக்குது.'

**மடை மாறு(தல்)** - *வி.* ***நீரை வேறு மடைக்கு மாற்றி விடுதல்.*** 'தண்ணி ரொம்பிருச்சு, மடைய மாறி உடு.'

**மண் அணை(த்தல்)** - *வி.* ***'களை வெட்டிய பிறகு சில வகைப் பயிர்களுக்கு வேரைச் சுற்றி மண்ணைச் சேர்த்துப் பலப்படுத்துதல்.*** 'செடிக்குக் கொஞ்சம் மண் அணச்சு உடோணும்.'

**மண்டக் கட்டு** - *பெ.* ***வயலில்வேலை செய்யும்போது, வெயிலுக்காகப் பெண்கள் முந்தானையால் தலையைச் சுற்றி கட்டிக் கொள்ளும் கட்டு.*** 'மண்டக்கட்டுக் கட்டிக்கோ. வெய்யில் எச்சா அடிக்குது.'

**மண்டு** - *வி.அ.* ***மூத்திரம் பெய்து; சிறுநீர் கழித்து.*** 'கட்டில்லயே மண்டு வெச்சிட்டான்.'

**மண்ணள்ளித் தூற்று(தல்)** - *வி.* ***வாய்ச் சண்டையின் போது மண்ணை அள்ளித் தூற்றுதல் (அவ்விதம் தூற்றி விட்டால், பின் அவர்களோடு பேசமாட்டார்கள். உறவு முறிந்துவிடும்).*** 'அவ மண்ணள்ளித் தூத்திப்புட்டுப் போயிட்டா.'

**மண்ணிடு(தல்)** - *வி.* ***அடுப்பு, சுவர் ஆகியவற்றில் உதிர்ந்த இடங்களில் மண் அள்ளி இட்டுச் சரி செய்தல்.*** 'இந்த அடுப்புக்குக் கொஞ்சம் மண்ணிடறது தான.'

**மணவறை** - *பெ.* ***திருமண நிகழ்ச்சிக்காக அமைக்கப்பட்டிருக்கும் மேடை.*** 'மணவறய ஜோடிச்சாச்சா.'

**மத்துக் கயிறு** - பெ. ***தயிர் கடைய மத்தில் பயன்படுத்தும் கயிறு.*** 'மத்துக் கவுத்த மாத்தோணும்.'

**மதக்கம்** - பெ. ***மந்தம்.*** 'ஒரே மதக்கமா இருக்குது.'

**மதகு வண்டி** - பெ. ***ஏற்றம் இறைக்கும் போது, ஏற்றக் கயிறு படும் வகையில் நீர் விழும் மதகுக்கு அருகில் போடப்பட்டிருக்கும் உருளை.*** 'மதகு வண்டிய கழ்ட்டி ஊட்ல கொண்டோயி வெச்சிரு.'

**மதாசரம்** - பெ. ***மந்தநிலை.*** 'ஒரே மதாசரமா இருக்குது.'

**மதிப்பெரட்டு** - பெ. ***புத்தி குழப்பம்.*** 'ஏன் இப்படிப் பேசறான். அவனுக்கு மதிப்பெரட்டு.'

**மதியம்** - பெ. ***முழு நிலவு நாள்; பௌர்ணமி.*** 'மதியத் தப்பத்தான் கோயில் திருநாப் போடுவாங்க.'

**மந்தாமதுக்கு** - பெ. ***மந்தத்தனம் கொண்டவள் / ன்.*** 'அவன் ஒரு மந்தாமதுக்கு.'

**மப்பு** - பெ. 1. ***மங்கல்.*** 'கண்ணு மப்புத்தட்டிப் போச்சு' 2. ***மிகுபோதை.*** 'அவன் நல்ல மப்புல இருக்கான். அவங்கிட்ட என்ன பேச்சு.' 3. ***ஏமாற்று, பொய்.*** 'நாட்டார் சிரிப்பான்னு மப்புக்கு அழுவது.'

**மப்பூடு** - பெ. ***உடம்பில் பட்டால் அரிப்பு ஏற்படுத்தும் ஒரு வகைப் பூண்டு.*** 'மப்பூடு பட்டதால பிக்கிது.'

**மம்மட்டிக் கொத்து** - பெ. ***களைக்கொத்தின் காம்பும் மண்வெட்டியைப் போன்ற அகல வாய்ப்பகுதியும் கொண்ட களை எடுக்கும் கருவி.*** 'மம்மட்டிக்கொத்துல வெட்டினாத்தான் கல்லக்காட்டுக்குப் பரவால்ல.'

**மம்மானியம்** - பெ. ***அளவுக்கு அதிகம்.*** பூவு அந்தப்பக்கம் மம்மானியமாக் கெடக்குது.'

**மமுட்டி விடுதல்** - வி. ***உள்ளங்கால் திரும்பும்படி எதிலாவது தடுக்கி விழுதல்.*** 'அங்க ஒரு கட்ட கெடந்தது. அதுதான் மமுட்டி உட்ருச்சு.'

**மய்த்தல்** - பெ. ***சில பொருட்களை வாயில் வைத்தால், நாக்கில் ஒருவித அரிப்பு உணர்வு ஏற்படுதல்.*** 'இதென்னடா காபி வாய் மய்க்கிது.'

**மயிர்கோதி** - பெ. ***கூந்தலில் சிக்கெடுக்கப் பெண்கள் பயன்படுத்தும் நீளக்கம்பி.*** 'அவ என்ன வேல செய்யறா. மயிர்கோதிய வெச்சுக்கிட்டு தலயில சிக்கெடுத்துக்கிட்டு உக்கோந்திருக்கறா.'

**மயிலாஞ்சி** - பெ. ***மருதாணி.*** 'கைக்கு மயிலாஞ்சி வெக்கல.'

**மயிலாம்பிடி ஆடு** - பெ. ***தலையில் வெண்மை நிறம் கொண்ட ஒருவகைச் செம்மறி ஆடு.*** 'மயிலாம்பிடி ஆட்டப் பாத்தாவே தெரியாதா.'

**மயிலை** - பெ. ***முதுகுப் புறம் கருமை கலந்த வெண்மை நிறமுடைய காளை.*** 'மயிலயக் கொஞ்சம் வெரட்டு.'

**மர உளி** - பெ. ***மரம் பிளக்க பயன்படும் உளி.*** 'மர உளி இருந்தாக்குடு.'

**மரக்காளான்** - பெ. ***மரங்களில் காயம்பட்ட இடங்களிலோ மரக்கட்டைகளிலோ ஈரம்பட்டால் பிடிக்கும் ஒருவகைக் காளான்.*** 'மரக்கட்டய உள்ள எடுத்து வெக்காத மரக்காளான் புடுச்சுப் போச்சு.'

**மரக்குந்தாணி** - பெ. ***நெல் போன்ற தானியங்கள் குற்றுவதற்கு மரத்தால் செய்யப்பட்ட உரல்.*** 'அந்தக் காலத்துல மரக்குந்தாணியிலதான் நெல்லுக் குத்துவாங்க.'

**மரச்சீப்பு** - பெ. ***மரத்தால் செய்யப்பட்ட, பேன் எடுக்க உதவும் சீப்பு.*** 'மரச்சீப்பு இருந்தாக்குடு. பேன் அரிக்குது.'

**மரமேறி** - பெ. ***பனை, தென்னை மரங்களில் ஏறி, கள் பதநீர் இறக்குபவர்; சானார்.*** 'மாமா மாமா மரமேறி, மாமம் பொச்சுல முள்ளேறி.' - சிறுவர் பாடல்.

மரிசு - பெ. **தழைந்து வருவதற்காக வெட்டி நடப்படும் கிழுவமரத்தின் கோல்.** 'அந்த மரிச ஈரத்துலயே நட்ரோனும்.'

மல்லாட்டம் - பெ. **ஒரு வகை விளையாட்டு.** 'அவுங்க மல்லாட்டம் கட்டிக்கிட்டு இருக்கறாங்க.'

மல்லு - வி. **மூத்திரம் போ; சிறுநீர் கழி.** 'ஊட்டுக்கிட்டயேதான் மல்லோனுமா, தூரப் போயி மல்லு.'

மல்லு - பெ. **மூத்திரம்; சிறுநீர்.** 'அஞ்சு வயசாயிக் கூட இந்தப் பிள்ள கட்டல்லயே மல்லு மல்லுது.'

மலங்கம்பு - பெ. **மலையில்விளையும் கம்பு (தானியம்).** 'அம்ம பாத்திருக்குது. மலங்கம்பு புளித்தண்ணி குடு.'

மலராகி - பெ. **மலையில் விளையும் கேழ்வரகு.** 'மலராகி நல்ல சத்து.'

மலை - பெ. **தாய விளையாட்டில் காய் வெட்டுப்படாமல் பாதுகாக்க ஆறு கட்டங்களுக்கு ஒரு முறை இருக்கும் (பெருக்கல் குறியிட்ட) கட்டம்.** 'காயெல்லாம் மலைக்கு மலை தாவிக்கிட்டேபோவுது. வெட்டுக்கு எப்படிச் சிக்கும்.'

மலையன் - பெ. **மலைப்பகுதியிலுள்ள காளை.** 'அந்த மலையன் ஒதைக்கும்.'

மழுங்கன் - பெ. **மானம், மரியாதை பற்றிக் கவலை இல்லாதவன்.** 'ரோசங் கெட்டான், மழுங்கன் பொழச்சான்' - பழமொழி.

மறுக்கா - வி.அ. **மறுமுறை; மறுபடியும்.** 'எங்க அத மறுக்காச் சொல்லு.'

மறு செலவு - பெ. **ஒருவரின் இறப்புக்குப் பின், மாமன் மைத்துனர் செய்யும் சடங்கு.** 'மறுசெலவு வேலயெல்லாம் முடிஞ்சிருச்சா.'

மறுபேச்சு - பெ. **ஒருவரின் பேச்சுக்குப்பின் கூறும் பதில்; விடை.** 'மறுபேச்சுப் பேசறானான்னு பாரேன்.'

மறுவரால் - பெ. **இறப்புக்குப் பின் மாமன் மைத்துனர் செய்யும் சடங்கு.** 'இன்னக்கித்தான் மறுவரால் போடறாங்க.'

மறைப்பு - பெ. **1. மாடுகள் பிறர் கண்ணுக்குப் படாமல் இருக்கக் கட்டப்படும் தடுப்பு.** 'எருமைக்கு ஒரு மறப்புக் கட்டோனும்.' **2. குளிப்பதற்காக ஓலை கொண்டு கட்டப்படும் தடுப்பு.** 'ஒரு மறப்புக் கட்டுனா ஆறு கேக்கறா, ராத்திரியிலதான் தண்ணி ஊத்திக்கவேண்டியிருக்குது.'

மனை - பெ. **பயிர் நடவு, களையெடுப்பு ஆகிய வேலைகளில் ஓராளுக்கு உரிய பகுதி.** 'என்னோட மனைக்கு நீ ஏன்டா வர்ற.'

மனுவு - பெ. **பத்துக் கிலோ கொண்ட (பருத்திக் கொட்டை, புண்ணாக்கு போன்றவற்றின்) அளவு.** 'ஒரு மனுவு பருத்திக் கொட்டவாங்கியா.'

## மா

மாக்கான் - பெ. **ஒன்றும் தெரியாதவன்; கூரிய புத்தி அற்றவன்.** 'சுத்த மாக்கானா இருக்கறான்டா.'

மாசமாயிருத்தல் - வி. **பெண் கருவுற்றிருத்தல்.** 'எம்பொண்ணு மாசமாயிருக்கறா.'

மாட்டலு - பெ. **காதின் இருபுறமும் வருமளவு நீண்ட, சங்கிலி போன்ற காதணி.** 'மாட்டலு ஒன்னு போட்டுக்க. காது தொங்காது.'

மாட்டுத்தாழி - பெ. **மாடுகள் குடிக்க கழிநீர் வைக்கும் தொட்டி.** மாட்டுத்தாழியில தண்ணி இருக்குதான்னு பாரு.'

மாடக்குழி - பெ. **வீட்டுச்சுவரில் விளக்கு வைப்பதற்காக அமைக்கப்படும் வேலைப்பாடுகளுடன் கூடிய சிறு குழி.** 'வெளக்க எடுத்த மாடக்குழியில வெய்யி.'

**மாத்தான்** - *பெ.* ***ஒரு பொருளின்மீது விருப்பம் இல்லாமல் போகும் தன்மை.*** 'ஆட்டுக்கறி தின்னுக்கிட்டுத்தான் இருந்தன். இப்ப என்னமோ மாத்தானாப் போச்சு.'

**மாத்து** - *பெ.* *1.* ***திருமணம் போன்ற நிகழ்வுகளின் போது விரிக்கும் நடைபாவாடை.*** 'பொண்ணக் கூட்டியாரப்ப மாத்து விரிக்கோணும்.' *2.* ***மாற்றிக் கட்டக் கொடுக்கும் துணி.*** 'தண்ணி ஊத்திக்கிட்ட ஒடனே குடுக்கறதுக்கு மாத்த எடுத்து வெய்யி.'

**மாந்தம்** - *பெ.* ***குழந்தைகளுக்கு வரும் ஒருவகை நோய்.*** 'மாந்தத்துக்குத் தழ குடுக்க அந்தூர்ல ஒரு பாட்டி இருக்குது.'

**மாப்பு** - *பெ.* ***மன்னிப்பு.*** 'உனக்கு மாப்பே இல்ல.'

**மாபாடு** - *பெ.* ***இடைவிடாத உழைப்பு.*** 'மாபாடு பட்டும் பிரயோசனமில்ல.'

**மார்** - *பெ.* ***இரு கைகளையும் விரித்து நீட்டிய நிலையில் ஒரு கைவிரல் நுனியில் இருந்து அடுத்த கையின் அதே விரல் நுனி வரையிலும் உள்ள நீட்டல் அளவு.*** 'அந்தப் பாம்பு ஒரு மார் நீளமிருக்கும்.' *2.* ***சற்று கனமான செடிகளின் தண்டுப்பகுதி; மரக்கிளை.*** 'வேப்பமரத்துல இருந்து ரண்டு மாரு வெட்டிப் போடு.' *3.* ***நெஞ்சுப் பகுதி.*** 'அவனுக்கு மார் நல்லா அகலமா இருக்கும்.'

**மார்வலி** - *பெ.* ***நெஞ்சுவலி.*** 'மார் வலியில துடிச்சுக் கெடக்கறான்.'

**மாரக்காய்ச்சல்** - *பெ.* **காசநோய்.** 'அவனுக்கு மாரக்காச்சலாமா.'

**மாரடித்தல்** - *வி.* *1.* ***நெல் தூற்றுகையில் சீ மாற்றால் பதரைப் பிரித்தல்.*** 'மாரடிக்கற வேல தான் மெதுவா நடக்குது.' *2.* ***பெண்கள் நெஞ்சில் அடித்துக்கொண்டு பிணத்தைச் சுற்றி வருதல்.*** 'கெழவனு் செத்தாலும் செத்தான், ராவெல்லாம் மாரடிச்சுக்கிட்டு அழுவுறாங்க.'

**மாராயம்** - *பெ.* **வண்ணார், நாவிதர் போன்ற தொழிலாளர்களுக்கு ஆண்டுக்கு ஒருமுறை கூலியாகக் கிடைக்கும் தானியம் அல்லது பணம்.** 'எத்தன செஞ்சாலும் மாராயம் குடுக்கறதுக்கு இவுங்களுக்கு மனசு வரமாட்டீங்குது.'

**மாரிக்குருவி** - *பெ.* ***நீளமான வால் உடைய ஒரு குருவி.*** 'எங்கயோ மாரிக்குருவி கத்துது.'

**மாரு** - *பெ.* ***வெண்மை நிற வெற்றிலை.*** 'மாரு என்ன வெல போவுது.'

**மால்நேரம்** - *பெ.* ***இருட்டும் நேரம்; மாலை ஆறிலிருந்து ஏழரை வரையுள்ள நேரம்.*** 'மால் நேரமாகிப் போச்சு. இப்ப எங்க கெளம்பறா.'

**மாலைக்கண்ணுப் பிச்சை** - *பெ.* ***ஆட்டு ஈரலுடன் சேர்ந்து இருக்கும் கருப்பும் நீலமும் கலந்த நிறம் கொண்ட, கசப்புத் தன்மை வாய்ந்த சிறு உறுப்பு (இதைக் கறியோடு கலந்தால் கறியும் கசந்துவிடும். எனவே இதனை நீக்கி விடுவர். பச்சையாக இதைத் தின்றால் கண் நன்றாகத் தெரியும் என்பது நம்பிக்கை).*** 'மாலக்கண்ணுப் பிச்சய எடுத்தெறிஞ்சராத. குடு. முழுங்கீர்றன்.'

**மாவுக்கறி** - *பெ.* ***(மெல்லுவதற்கு எளிதாக) மாவு போல இருக்கும் இறைச்சி.*** 'கொழந்தைக்கு மாவுக்கறியாப் பாத்துக் குடு.'

**மானம்** - *பெ.* ***வானம்.*** 'மானம் கருக்கிக்கிட்டு வருது.'

## மி

**மிச்சி** - *பெ.* ***குழந்தைகள் விளையாடப் பயன்படும் சிறிய முறம்.*** 'ஒரு மிச்சிப் பூவெடுத்து நாங்கள் படைத்தோம்' - கும்மிப் பாடல்.

**மிஞ்சி** - *பெ.* ***மெட்டி.*** 'கால்ல மிஞ்சியக் காணாம்.'

**மிம்பீர்** - *பெ.* ***கண்ணேறு, நோய், நேரம் தவறுதல் முதலிய காரணங்களால் கறவை மாடுகளுக்குக் கன்று ஊட்டுவதற்கு முன்பே ஏற்படும் முலைக் காம்புகளின் சுரப்பு.*** 'எருமை ரண்டு நாளா மிம்பீர் சொறந்துக்குது.'

**மிரமினை** - *பெ.* **கோயில் திருவிழாவின் போது கடவுள் தேரில் வீதிகளைச் சுற்றும் ஊர்வலம்.** 'சாமி மிரமின வருது.'

**மின்னாண்டெ** - *வி.அ.* **முன்னால்; முன்பக்கத்தில்.** 'மின்னாண்டெ பாத்துப்போ.'

**மின்னேத்த வண்டி** - *பெ.* **ஏற்றம் இறைக்கும்போது கீழ்க்கயிறு பட்டு உருளும் வகையில் வாரியின் முன்பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும் மர உருளை.** 'மின்னேத்த வண்டியக் கழ்ட்டி வெக்காத மழையில நனச்சு போச்சு.'

**மின்னோட்டம்** - *பெ.* **சாமி பல்லக்கைத் தூக்கிக் கொண்டு முன்னும் பின்னும் ஓடுதல்.** 'சாமி மின்னோட்டம் போவுது.'

**மின்னோடும் புள்ளை** - *பெ.* **ஒரு காரியத்தை முன் நின்று நடத்துபவர்.** 'அவனாட்டம் மின்னோடும் பிள்ளயப் பாத்ததே இல்ல.'

## மு

**முக்கட்டக்காய்** - *பெ.* **மூன்று பருப்புகளைக் கொண்ட நிலக்கடலைக் காய்.** 'நெறைய முக்கட்டக்காய் கெடக்குது.'



முக்கட்டக்காய்

**முக்கட்டை** - **காண்க: முக்கட்டக்காய்.**

**முக்கல்** - *பெ.* **எண்ணெய் கெட்டுப் போவதால் வரும் வாசம்.** 'எண்ணெ முக்கலடிக்குது.'

**முக்குவலி** - *பெ.* **குழந்தை பிறக்கும் நேரத்தில் மிக அதிகமாக உண்டாகும் பிரசவ வலி.** 'முக்குவலி கண்டிருச்சு. சீக்கரம் கொழந்த பொறந்திரும்.'

**முக்குனி** - *பெ.* **பெண்கள் கூந்தலை மூன்றாகப் பிரித்து ஜடை போடுதல்.** 'மயிர அவுத்து முக்குனி போட்டுக்க.'

**முகாமி** - *பெ.* **திருமணம் போன்ற செயல்களுக்கு முன் நின்று ஏற்பாடு செய்பவர்.** 'அவருதான் மொகாமியா. அதான் காரியம் இந்த ஜோர்ல நடக்குது.'

**முகாமை** - *பெ.* **முக்கியம்; முதன்மை.** 'அவுங்கூர்ல அவுனுக்குத்தான் மொகாமை.'

**முகாமைக்காரர்** - **காண்க: முகாமி.**

**முகுளம்** - *வி.அ.* **தீவிரம்; இடைவிடாமல்.** 'பயிர் நடவு முகுளமா நடக்குது.'

**முங்குதல்** - *வி.* **மூழ்குதல்.** 'தண்ணியில முங்கி எந்திரிச்சு வா.'

**முச்சி** - **காண்க: மிச்சி.**

**முச்சூடு** - *வி.அ.* **முழுவதும்.** 'ஊடு மூச்சுடும் குப்பையாக் கெடக்குது.'

**முசுக்கரம்** - *பெ.* **ஒரு வேலையில் தீவிரமாக இருத்தல்.** 'அவன் எப்பவும் வேலையில முசுக்கரமா இருப்பான்.'

**முசுவு** - *பெ.* **தொடர்ந்து வேலைகளில் ஈடுபட்டிருத்தல்:** 'அவனுக்கு நேரமில்ல, வேலையில முசுவா இருக்கறான்.'

**முட்டி** - *பெ.* **1. வெற்றிலை அளவுப் பெயர். 26 கவுளி வெற்றிலை கொண்டது ஒரு முட்டி.** 'ஒரே சமயத்துல அஞ்சர முட்டி வெத்தல கிள்ளீட்டான்.' **2. பனை, தென்னை மரங்களில் கள், பதநீர் சேகரிக்கப் பாளையுடன் சேர்த்துக் கட்டப்படும் மண்பாண்டம்.** 'அந்த

மரத்துல இப்பத்தான் ரண்டு முட்டி கட்டியிருக்கறான்.' 3. **நிலத்தில் அரிவாள் படாமலிருக்க பொருளை வைத்து வெட்டப் பயன்படும் சிறு மரக்கட்டை.** 'முட்டி மேல வெச்சுத் தட்ட வெட்டு.'

முட்டிப்பானை - **காண்க:** முட்டி-2.

முட்டிச்சீலை - பெ. **பெண்கள் மாதவிலக்கின் போது உடுத்தும் சேலை.** 'முட்டிச் சீலய ஓரமா எடுத்துப் போடு.'

முட்டு - பெ. 1. **பெண்களுக்கு உண்டாகும் மாதவிடாய் - காண்க:** முட்டுச் சீலை 2. **கிணற்றின் ஆழம் குறித்த அளவுப் பெயர்.** 'கெணறு எத்தன முட்டு.'

முட்டுக்கல் - பெ. **நில எல்லையைச் சுட்டுவதற்காக நடப்படும் எல்லைக் கல்.** 'பொலீல இருந்த முட்டுக் கல்லயே புடுங்கீட்டாங்க.'

முட்டுச்சீலை - **காண்க: முட்டிச்சீலை.**

முட்டுவழி - பெ. **வேளாண்மைக்குப் போடும் மூலச் செலவு; முதல்.** 'போட்ட முட்டு வழியே வராதாட்டம் இருக்குது.'

முட்டூடு - பெ. **குழந்தை பிறந்து ஒரு சில நாட்களே ஆன வீடு.** 'முட்டூட்டுல நா(ன்) சோறு திங்கமாட்டன்.'

முட்டை அரும்பு - பெ. **கோழியைக் கறிக்காக அறுக்கும் போது, அதன் வயிற்றில் சிறுசிறு உருண்டைகளாக இருக்கும் முட்டைக்கான தொடக்க அரும்பு.** 'இப்பத்தான் மொட்டு அரும்பு வெச்சிருக்குது.'

முண்டா பனியன் - பெ. **ஆண்கள் அணியும் கைப்பகுதி இல்லாத உள்ளாடை.** 'அவன் எப்பவுமே முண்டா பனியன்தான் போடுவான்.'

முண்டு[1](தல்) - வி. **ஒருவரை எதிர்த்துச் செயல்படுதல்.** 'எங்கிட்டயே முண்டறயா நீ.'

முண்டு[2] - பெ. **நாய்கள் உறவு கொள்ளும்போது இனப்பெருக்க உறுப்புகளைப் பிரிக்க இயலாமல் மாட்டிக் கொள்ளுதல்.** 'ஏன்டா முண்டுபோட்டா நாயாட்டம் அங்கே கெடக்கற.'

முண்டேரி - பெ. **சுற்றுச் சுவரில் மழைநீர் இறங்கிக் கரைத்து விடாமலிருக்க இருபுறமும் சரிவாக, நடுவில் உயர்வாய் கூரை போலப் போடுதல்.** 'செவுத்துக்கு முண்டேரி போட்டு வெய்யி.'

முத்திரை - பெ. **தனக்கு விருப்பமான கடவுளின் சின்னத்தைத் தாசர்கள் உடம்பில் பொறித்துக் கொள்ளுதல்.** 'அந்தத் தாசருக்கு முத்தரை குத்தியாச்சா.'

முத்திரைப்படி - பெ. **அரசாங்க முத்திரை உடைய தானியம் அளக்கும் படி.** 'அந்த முத்தரைப்படில அளந்து போடு.'

முத்திரை வள்ளம் - பெ. **அரசாங்க முத்திரை உடைய தானியம் அளக்கும் வள்ளம்.** 'முத்தரை வள்ளம் இருந்தாக் குடு.'

முத்தெடுத்தல் - வி. **விரதமிருந்து கோயில் திருவிழாவின்போது மூன்று அல்லது ஐந்து ஊர்களுக்குச் சென்று பிச்சை பெற்று வந்து, அதனைத் தெய்வத்திற்குக் கொடுக்கும் ஒருவகை வேண்டுதல்.** 'இந்த வருசம் முத்தெடுக்கறம்னு வேண்டி இருக்கறன்.'

முதித்தல் - பெ. **காளை பசுமாட்டோடு உறவு கொள்ளுதல்.** 'காள முதிச்சுதா.'

முதியாப் பயிர் - பெ. **ஒன்றரை வயதான வெற்றிலைக் கொடிக்கால்.** 'முதியாப் பயிர் எத்தன குழி இருக்குது.'

முந்தா நாள் - பெ. **நேற்றைக்கு முன் தினம்.** 'முந்தா நாளு நீ எங்க போயிருந்த.'

முந்தி - பெ. **முந்தானை.** 'முந்தியச்சொருகு காத்துல பறக்குது.'

மும்பாரம் - பெ. **வண்டியில் முன்பக்கம் ஏற்றும் பாரத்தின் அளவு; முன்பாரம்.** 'மும்பாரம் எச்சா இருக்குது. மாடு தெணறுது பாரு.'

**முருக்கந்தடி** - *பெ.* ***பாளை சீவும் அரிவாளைத் தீட்டுவதற்காக மரமேறிகள் வைத்திருக்கும் முருங்க மரக்கட்டை.*** 'முருக்கந்தடிய எடுத்தா, பாளக்கத்தியத் தீட்டலாம்.'

**முருகு** - *பெ.* ***ஆண்கள் காதில் அணியும் நகை.*** 'அந்தப் பாட்டன் காதுல முருகு போட்டுக்கிட்டு இன்னம் எளவயசுப் பையனாட்டம் இருக்கறாரு.'

**முருவாங்கறி** - *பெ.* ***பன்றிக் கறி.*** 'முருவாங்கறி எடுத்தாந்திருக்கறன்.'

**முருவான்** - *பெ.* ***பன்றி.*** 'கறிபோட முருவான் புடிச்சாரப் போயிருக்கறாங்க.'

**முருளி** - *பெ.* ***செடிகளுக்கு வரும் ஒருவகை நோய்.*** 'முருளி பாஞ்சு செடி வளரவே இல்ல.'

**முள்ளங் கத்திரி** - *பெ.* ***கண்டங்கத்திரிச் செடி.*** 'முள்ளங்கத்திரிச் செடி இருந்தாப் புடுங்கியா.'

**முள்ளெடுப்பான்** - *பெ.* ***காலில் ஏறிய முள்ளைப் பிடுங்கும் கருவி.*** 'முள்ளெடுப்பான் இருந்தா சீக்கிரமா எடுத்தரலாம்.'

**முளை** - *பெ.* **1. மாடுகளைக் கட்ட தரையில் ஊன்றும் தடினமான மரக்கோல்.** 'மாட்ட ஒரு மொளை அடிச்சுக்கட்டு.' **2. வண்டிகளில் பாரம் சரியாமல் இருக்க இருபுறமும் ஊன்றும் நீளக்குச்சி.** 'மொள ஆடுது, நல்லாப் போட்டுடு.'

**முளைக்குச்சி** - **காண்க: முளை.**

**முறி** - *வி.* ***ரூபாய் நோட்டைச் சில்லரையாக மாற்றுதல்.*** 'நூறு ரூபாய முறிச்சா சீக்கிரம் செலவாயிரும்.'

**முறிவாடு** - *பெ.* ***விஷத்தை முறிக்கும் மருந்து.*** 'இதுக்கு முறிவாடு தெரிஞ்சவங்களைக் கேக்கோணும்.'

**முறுக்கம்** - *பெ.* ***உடல் தினவு; பலம்.*** 'வயசானாலும் ஆளு நல்ல முறுக்கம்.'

**முறுக்குத்தட்டம்** - *பெ.* ***முறுக்குப் பிழியும் கருவியுள் முறுக்கின் வடிவத்திற்கேற்ப வைக்கப்படும் வட்ட வடிவத் தட்டு.*** 'முறுக்கு முள்ளு முள்ளா வர்ற மாதிரி ஒரு முறுக்குத்தட்டம் இருந்துது. எங்கயோ காணாம்.'

**முறுக்குப்படி** - *பெ.* ***தின்பண்டமாகிய முறுக்குப் பிழிவதற்கு உதவும் கருவி.*** 'தேர்க்கடைல ஒரு முறுக்குப்படி எடுக்கோணும்.'

**முன்பணம்** - *பெ.* ***விலை பேசி முடிந்ததும் தொடக்கத்தில் கொடுக்கும் சிறுதொகை.*** 'முன் பணமா எவ்வளவு குடுத்திருக்கறா.'

**முன்னேர்** - *பெ.* ***நிலத்தில் பல ஏர்கள் உழும்போது எல்லா ஏர்களுக்கும் முன்னாகச் செல்லும் ஏர்.*** 'அந்த முன்னேர்க்காரனப் போயிக் கேளு.'

## மூ

**மூக்கறுந்து போ(தல்)** - *வி.* ***மூக்கணாங்கயிறு பெரிதாகப் போடுவதால் மாடுகளின் மூக்கு உள்சதை அறுந்து போய்விடுதல் (அதன்பின் மூக்கணாங்கயிறால் பயன் இருக்காது).*** 'இவ்வளா பெரிய கவுத்தயா மூக்கணாங்கவுத்துக்குப் போடுவாங்க. மூக்கறுந்து போயிரும்.'

**மூக்கரை** - *பெ.* ***திட்டுச்சொல்: மூக்கில்லாதவள் / ன்; மூக்கு அழுந்திக் கிடப்பவள் / ன்.*** 'அந்த மூக்கர பேச்சக் கேட்டுக்கிட்டு ஆடாத.'

**மூக்கானி** - *பெ.* ***வண்டியின் முன்பகுதியில் ஊன்றும் கோல்.*** 'மூக்கானியப் புடிச்சு வண்டியத் தூக்கு.'

**மூக்குச் செல்** - *பெ.* ***அரிசியில் இருக்கும் நீண்ட மூக்குடைய ஒரு வகைப் பூச்சி.*** 'மூக்குச் செல் ஏறுனா போச்சு. அரிசி பூராத் தீன்னுரும்.

**மூங்கக் கூடை** - *பெ.* ***மூங்கிலால் பின்னப்பட்ட கூடை.*** 'மூங்கக் கூட எடுத்தா கொஞ்ச நாளக்கு வரும்.'

**மூச்சுடு(தல்)** - வி. **தேங்காய், எலும்பு ஆகியவற்றில் லேசான விரிசல் ஏற்படுதல்.** 'இந்தத் தேங்கா மூச்சுட்டுப் போச்சு.'

**மூட்டம்** - **காண்க: அடுவு.**

**மூட்டு**[1] - வி. **கிழிந்த இரண்டு பகுதிகளை இணைத்துத் தைத்தல்.** 'இந்தச் சீலயக் கொஞ்சம் மூட்டிக்குடு.'

**மூட்டு**[2] - பெ. **மரத்தில் பெருங்கிளையும் (அதிலிருந்து பிரியும்) சிறு கிளையும் இணையும் இடம்.** 'அத மூட்டோட வெட்டிப் போடு.'

**மூட்டுக்குட்டி** - பெ. **ஆட்டின் பெண் குட்டி.** 'வெள்ளாடு மூட்டுக்குட்டியா போட்டிருக்குது.'

**மூட்டுப் போடு** - வி. **சோறோ குழம்போ வெந்து கொண்டிருக்கும் போது கொஞ்சம் கரண்டியால் தனியாகப் பிரித்து எடுத்தல்.** 'ரண்டு கறி மூட்டுப் போடு.'

**மூடல்** - பெ. **கேழ்வரகு மணிகளின் மேல் மூடியிருக்கும் தவிட்டுப் பகுதி.** ஆரியம் மூடலாக் கெடக்குது.'

**மூடாக்கு** - பெ. **ஒன்றை மூடியிருக்கும் துணி; முகத்தை மூடும் சேலை.** 'மூடாக்குப் போட்டுக்கிட்டுப் போனா அடையாளந் தெரியாதா.'

**மூடு** - **காண்க: மூட்டுக்குட்டி.**

**மூத்தலிடுதல்** - வி. **கம்பரிசியை இடித்து மாவாக்குவதற்கு முதலில் உரலில் இட்டுக் குத்திப் புடைத்துத் தவிடு நீக்குதல்.** 'கம்ப மூத்தலிட்டு வெச்சுட்டன்.'

**மூய்த்தல்** - வி. **சிறிதும் மிச்சமில்லாமல் ஒரு செயலை முழுவதும் செய்து முடித்தல்; தீர்த்தல்.** 'எல்லாத்தயும் அவனே மூச்சுப்புட்டான்.'

**மூலி** - பெ. **தூங்கி எழுந்ததும் இரு கைகளையும் தலைக்கு மேல் உயர்த்தி உடலை நெட்டி முறித்தல்.** 'எந்திரிச்சு மூலி முறிச்சு எந்நேரம் போறது.'

**மூலைக்கல்** - பெ. **வீட்டுக் கிணறுகளில் நான்கு மூலைகளிலும் வைத்துக் (மேற்சுவர்) கட்டப்படும் கல்.** 'மூலக்கல்லு பலமாப் போட்டிருக்கறாங்க.'

**மூளி** - பெ. **ஆமணக்குக் காயில் விதையின் மேல் இருக்கும் தோல் பகுதி.** 'கொட்டக்கா காஞ்சு போச்சு. மூளிய அடிச்சு எடுக்கோனும்.'

**மூளி மோதிரம்** - பெ. **சிறு குழந்தைகளின் அரைஞாண் கயிற்றில் கோர்க்கும் அலுமினியத் தகடு.** 'கொழந்தக்கி ஒரு மூளி மோதிரம் எடுத்துப் போடு.'

## மெ

**மெட்டு**[1] - வி. **காலைத் தடுக்கி விடுதல்.** 'மெதுவாக் காலக் கொஞ்சம் மெட்டி உட்டன். உழுந்திட்டான்.'

**மெட்டு**[2] - பெ. **கட்டப்பட்ட கயிற்று நீளத்தைக் குறைப்பதற்காக முடிச்சுக்கு மேல் கயிற்றை அவிழாமல் இழுத்துச் செருகுதல்.** 'கவுத்துல இன்னொரு மெட்டுப் போடு.'

**மெப்பு** - வி.அ. **பட்டும் படாமல்; திமிர்.** 'ஆளு என்ன மெப்பாப் பேசறான் பாரு.'

**மெரமிணை** - **காண்க: பிரமிணை.**

**மெரலு** - பெ. **சாமி ஆடி மக்களுக்கு வாக்குச் சொல்பவர் மீது சாமி வந்து வாக்குச் சொல்லத் தயாராகுதல் (மெரலு வந்து வாக்குச் சொல்லாமல் வெறுமனே ஆடும் சாமிகளுமுண்டு).** 'இன்னக்கிச் சாமிக்கு மெரலு வல்ல.'

## மே

**மேக்காய்** - பெ. **நிலக்கடலைச் செடி பிடுங்கும்போது உதிர்ந்து கண்ணுக்குப் படுவது போல மேலேயே கிடக்கும் காய்.**

'மேக்காய் பொறுக்குனாலே ஒருபடி வருமாட்டம் இருக்குது.'

**மேகெணறு** - பெ. ***அதிக ஆழமில்லாத கிணறு***. 'அவுங்களுது மேகெணறா இருந்தாலும் தண்ணி வத்தாது.'

**மேகோடு** - பெ. ***மேற்குத் திசை மூலை***. 'மேகோட்டுல மமுட்டி கெடக்குது எடுத்தா.'

**மேட்டாங்காடு** - பெ. ***புன்செய் நிலம்; மானாவாரி விவசாய நிலம்***. 'மேட்டாங்காட்ட ஒட்டுனவனும் கெட்டான்; மேனாமினுக்கியக் கட்டனவனும் கெட்டான்' (பழமொழி)

**மேட்டுக்காடு** - *காண்க:* மேட்டாங்காடு.

**மேட்டுமை** - பெ. ***கர்வம்; மேல்குடிகளின் மனப்பான்மை***. 'இந்த மேட்டுமையெல்லாம் நம்புளுக்கு ஆவாது.'

**மேம்போக்கு** - பெ. ***எதிலும் அதிகச் சிரமம் எடுத்துக் கொள்ளாமல், அதிகக் கவனமில்லாமல் இருக்கும் தன்மை***. 'அவன் மேம்போக்காப் போறவன்.'

**மேல் சகாயம்** - பெ. ***சாவுக்கு முன் வரும் வாயால் மூச்சு விடும் தன்மை***. 'அவ்வளவுதான். மேல்சகாயம் தூக்க ஆரம்பிச்சிடுச்சு.'

**மேல்பூட்டு** - பெ. ***நுகத்தடிக்கு மேல் கருக்குத்தடியை வைத்துப் பூட்டப்படும் கலப்பை***. 'அந்தக் காட்ட மேல்பூட்டுல போட்டு ஓட்டு.'

**மேலாக்கு** - பெ. ***பெண்கள் மார்பின்மீது போட்டுக் கொள்ளும் துணி***. 'மேலாக்கு ஒன்னு போட்டுக்கிட்டுப் போ.'

**மேலு** - பெ. ***உடம்பு***. 'மேலுக்குத் தண்ணி ஊத்திக்கிட்டு வர்றன்.'

**மேலொலச் சட்டி** - பெ. ***சோறு சமைக்கும்போது, சோற்றுச் சட்டிக்கு மேலே ஒரு சிறு சட்டியை வைத்து அதிலும் நீர் ஊற்றி வைப்பர்; சோற்றுக்கு நீர் தேவைப்படுமானால் மேலிருக்கும் சட்டி நீரை ஊற்றுவர்; அப்படி மேலே வைக்கும் சட்டி; மேல் உலைச் சட்டி***. 'மேலொலச் சட்டியில தண்ணி ஊத்தி வெய்யி.'



மேலொலச் சட்டி

**மேலொழவு** - பெ. ***பயிர் அறுவடை செய்தவுடன் போடும் உழவு***. 'ஒரு மேலொழவு போட்டு வெக்கோனும்.'

**மேலை** - பெ. ***அடுத்த ஆண்டு***. 'மேலைக்கே தாலி கட்டறன் கழுத்தே சோகமா இரு' - பழமொழி.

**மேவு**[1] - வி. ***தண்ணீர் நிறைந்து கரையைக் கடந்து செல்லுதல்***. 'காடெல்லாம் தண்ணி மேவிக்கிட்டுப் போவுது.'

**மேவு**[2] - பெ. ***ஆடு, மாடுகள் மேய்ச்சலுக்கான புல்***. 'அந்தப் பக்கம் மேவு நெறைய இருக்குது.'

**மேவேலை** - பெ. ***முதன்மையான வேலைக்குத் துணையாக இருக்கும் சிறு வேலை***. 'மேவேல மட்டும்தான் அவம் பாப்பான்.'

**மேற்கட்டி** - பெ. ***திருமணப் பந்தலின் உள் மேல் பகுதியில் கட்டும் துணி***. 'மேக்கட்டி நல்ல துணியாக் கட்டு.'

## மை

**மைக்கட்டை** - பெ. ***வண்டியில் சக்கரங்களை இணைக்கும் கட்டை***. 'மைக்கட்டையில லேசா விரிசல் தெரீது.'





**மைகோதி** - காண்க: மயிர் கோதி.

**மைய அரை** - பெ. **மிகவும் மாவாகும் வரை அரைத்தல்.** 'கொஞ்சங்கூட தருசு இல்லாம மைய அரைச்சுடு.'

## மொ

**மொக்கடி** - பெ. **இன்ன இடம் என்று காயத்தைத் தொட்டுக் காட்டுகிற மாதிரி இல்லாத உள் அடி.** 'நல்லா மொக்கடியாப் பட்டிருச்சு.'

**மொக்கப்பட்டம்** - பெ. 1. **விளைச்சல் இல்லாமல் நட்டமாகிவிடும் வேளாண்மையின் விதைப்புப் பருவம்.** 'இந்த வருசம் மொக்கப்பட்டமாப் போச்சு.' 2. **ஏமாற்றி விடுதல்.** 'என்னய மொக்கப்பட்டம் பண்ணிப்புட்டான்.'

**மொக்கையடி** - காண்க: மொக்கடி.

**மொகரை** - பெ. 1. **முகம்.** 'மொகரையப் பாரு கொரங்காட்டம்.' 2. **மாடு, எருமைக் கன்றுகளுக்கு மூக்கணாங்கயிறு போடும் பருவம் வரும்முன் மூக்கைச் சுற்றி மேலாக வந்து, கழுத்தில் பிணைக்கும் வகையில் கட்டப்படும் கயிறு.** 'கன்னுக்குட்டி பெருசாயிருச்சு. மொகரய அவுத்துப்புட்டு மூக்கணாங்கவுறு குத்தீரோனும்.'

**மொகுட்டுச் சரம்** - பெ. **வீட்டுக் கூரை முகட்டில் பொருத்தப்பட்டு இருக்கும் மரச்சட்டம்.** 'மொகுட்டுச் சரத்துக்கு நல்ல மரமாப் பாத்து எடுக்கோனும்.'

**மொகுல்** - பெ. **முகில்; மேகம்.** 'மொகுலு கருக்கிக்கிட்டு வருது.'

**மொச்சை** - பெ. **குழந்தைகளின் மீது வீசும் ஒரு விதப் பால் வாடை.** 'பிள்ளையக் கழுவி உடலாமுல்ல. மொச்சை அடிக்குது.'

**மொச எறும்பு** - பெ. **காலை வைத்தால் மொய்ப்பது போல நிறைந்து ஏறும் ஒருவகை எறும்பு.** 'கால வெச்செடான மொத எறும்பு இப்பிடி ஏறுது.'

**மொசப்புல்** - பெ. **புன்செய் நிலங்களின் வரப்புகளில் வளரும் ஒரு வகைப் புல்.** 'கரையெல்லாம் மொசப்புல்லு வளந்து கெடக்குது.'

**மொசப்புழு** - பெ. **உடல் முழுவதும் மயிர் நிறைந்திருக்கும் ஒரு வகைப் புழு.** 'செடியில மொசப்புழுவு உழுந்திருச்சு.'

**மொட்டக்கட்டை** - பெ. **உடம்பில் சிறு துணியும் இல்லாத நிலை; நிர்வாணம்.** 'மொட்டக் கட்டையா வந்து நின்னான்.'

**மொட்டக்கம்பு** - பெ. **தானிய மணி பெரிதாக இருக்கும் ஒரு வகைக் கம்பு.** 'மொட்டக்கம்பு குத்திப்போட்டன். சோறு ருசியாவே இல்ல.'

**மொட்டப் பாறை** - பெ. **அகலமில்லாமல், உயர்ந்து, குறைந்து சொரசொரப்புடன் இருக்கும் பாறை.** 'மொட்டப் பாறையில போயி ஆராச்சும் காயப் போடுவாங்களா.'

**மொட்டம்** - வி.அ. **தடவை; முறை.** 'உனக்கு எத்தன மொட்டஞ் சொல்றது.'

**மொட்டுளிச் செடி** - பெ. **நெற்றியில் வைத்துத் தட்டினால் 'பொடக்' எனச் சத்தமிட்டு உடையும் (சிறு உருண்டையாக உள்ள) காயை உடைய செடி; முடக்கத்தான் கொடி.** 'மொட்டுளிச் செடி காட்டுல நெறைய இருக்குது.'

**மொட்டுளி** - பெ. **நீர்க்குமிழி.** 'தண்ணியில மொட்டுளி உடுவியா.'

**மொடக்காய்** - பெ. **உரித்துத் தோலும் பருப்புமாய்க் கிடக்கும் நிலக்கடலைக்குள் கலந்துவிட்ட உரிக்காத முழுக்காய்.** 'மொடக்கா உழுவாம பாத்துத் தூரமா வெச்சுத் தொலி.'

**மொடக்கிடி** - பெ. **ஒத்து வராமை; பிடிவாதம்.** 'அவன் மொடக்கிடி பண்றான்.'

**மொடக்கிடிக்காரன்** - பெ. **பிடிவாதக்காரன்; ஒத்துவராதவன்.** 'மொடக்கிடிக்காரங்கிட்ட என்ன பேச முடியும்.'

**மொடக்கு** - பெ. **உழுவதற்குச் சிரமம் தரும் வகையில் வயலின் சம பரப்பிலிருந்து விலகிய சிறு பகுதி.** 'அந்த மொடக்க ஓட்டீட்டா ஒழவு முடிஞ்சது.'

**மொடங்கு** - பெ. **ஒருமுறை விழுங்கும் அளவு நீர்; மிடறு.** 'தண்ணி ஒரு மொடங்கு கூட ஆவாது.'

**மொடவாதம்** - **காண்க:** மொடக்கிடி.

**மொடா** - பெ. 1. **தானியம் போட்டு வைக்கவோ, நீர் ஊற்றி வைக்கவோ உதவும் மண்ணாலான பெரிய பாண்டம்; மிடா.** 'ஒரு மொடாத் தண்ணி காயவெச்சு ஊத்திக்கோனும்.' 2. **பதினைந்து வள்ளம் தானியம் கொண்ட அளவு.** 'கம்பு எத்தன மொடா ஆவும்.'

**மொடாக்குடி** - பெ. **கள், சாராயம் ஆகியவற்றை அளவுக்கு அதிகமாகக் குடித்தல்.** 'அவன் மொடாக்குடி குடிக்கறான்டா.'

**மொடாக்குடியன்** - பெ. **கள், சாராயம் ஆகியவற்றை அதிகமாகக் குடிப்பவன்.** 'அடேங்கப்பா... அவன் மொடாக்குடியனா இருக்கறான்டா.'

**மொடாச்சந்து** - பெ. **வீட்டில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் மிடா வரிசைகளுக்கிடையே உள்ள இடைவெளி.** 'மொடச்சந்துல தக்காளிப் பழத்த எலி கொண்டோயிப் போட்டு வெச்சிருக்குது.'

**மொடாத் தண்டு** - வி.அ. **பெரிதாக; அதிகக் குண்டாக.** 'ஆளு மொடாத்தண்டி இருக்கறான்டா.'

**மொண்டு வாலி** - பெ. **முழுவால் இல்லாத, வெட்டுப்பட்ட, ஊனமுற்ற வாலைக் கொண்ட விலங்கு அல்லது பறவை. மனிதர்களைத் திட்டவும் பயன்படும் சொல்.** 'அந்த மொண்டு வாலி எந்தப் பக்கம் போச்சு.' 'அவ ஒரு மொண்டு வாலி.'

**மொண்டிப் பன்னாட்டு** - பெ. **ஒருவரின் எடுபடாத அதிகாரம்; இல்லாத அதிகாரத்தை இருப்பது போலப் பாவித்துக் கொண்டு பிறரை ஏவுதல்.** 'இந்த மொண்டிப் பன்னாட்டுக்கு ஒன்னும் கொறவில்லை.'

**மொண்டி அதிகாரம்** - **காண்க:** மொண்டிப் பன்னாட்டு.

**மொத்தக்கை** - பெ. **வசதியான ஆள்.** 'அவனுக்கு என்ன மொத்தக் கையி.'

**மொத்தச் சோறு** - பெ. **அதிகச் சோறு.** 'அவனொரு மொத்தச் சோறு தின்னி.'

**மொத்து** - வி. **தடி அல்லது தடி போன்ற கனமான பொருளால் அடித்தல்.** 'சீவக்கட்டையால மொத்தீருவன் பாத்துக்க.'

**மொத்தை** - பெ. **மாடு ஒருமுறை போடும் சாணக் குவியல்.** 'ரண்டு மொத்த சாணி கெடக்குது. அள்ளிப் போடு.'

**மொதமாடு** - பெ. **மேய்ச்சலுக்குப் போகும் மாடுகளை வழி நடத்தி முதலில் செல்லும் தலைமைப் பண்புடைய மாடு.** 'அந்த மந்தைக்கு இதுதான் மொதமாடு.'

**மொதை** - பெ. **பாளை நெல்லும் வைக்கோல் துகளும் கலந்த கலவை.** 'நெல்லு ராசி ஆவுல. மொததான் நெறைய உழுவுது.'

**மொய்ச் சோறு** - பெ. **ஊரில் பலருக்கும் தாங்கள் வைத்த மொய்ப் பணத்தைத் திரும்பப் பெறத் தங்கள் வீட்டில் மங்கலச் செயல் எதுவும் இல்லாத போதும், அவசரமாக வந்து சேர்ந்த பெரிய செலவுக்குப் பணம் இல்லாத போதும் நிகழ்ச்சி எதுவும் இல்லாமலே ஊராரை அழைத்து மொய் வாங்கிக் கொண்டு சோறு போடும் வழக்கம்.** 'மொய்ச் சோறுக்குக் கூப்புட்டிருக்கறாங்க.'

**மொரசன்** - பெ. **முரடன்.** 'மொரசங்கிட்ட பேச்சு வெச்சுக்காத.'

மொல்லை - பெ. **அளவுக்கு அதிகமான, திருப்பித் தர இயலாத அளவு வாங்கி விட்ட கடன்:** 'இத்தன மொல்லைய எதுக்குடா வாங்குன.'

மொவரை - **காண்க:** மொகரை.

மொவுட்டெலி - பெ. **வீட்டுக் கூரை முகட்டில் வசித்துக் கொண்டு, வீட்டுப் பொருட்களைத் தின்று வாழும் எலி. முகட்டு எலி.** 'மொவுட்டெலியத் திங்கக் கூடாது.'

மொவுட்டோடு - பெ. **கூரை முகட்டில் பொருத்தப்படும் கவிழ்த்து வைக்கும் வடிவிலான ஓடு.** 'மொவுட்டோடு ஒடஞ்சு போயிருச்சு.'

மொவுட்டோலை - பெ. **கூரை முகட்டில் பொருத்தி வேயும் பனை ஓலை.** 'மொவுட்டோல காத்துல தூக்கிருச்சு.'

மொவுடு - பெ. **கூரையின் உள்பக்க உச்சிப் பகுதி, முகடு.** 'மொவுட்டப் பாத்துக்கிட்டுப் படுத்திருக்கறான்.'

மொவுலு - **காண்க:** மொகுல்.

மொழங்கு - பெ. **தானியத் தட்டை, கதிர் போன்றவற்றிலிருந்து உதிரும் சிறு துகள் (இது உடம்பில் பட்டால் எரிச்சல் கொடுக்கும்).** 'ஒடம்பு முழுக்க மொழங்கு ஏறி அரிக்குது.'

மொழுக்கு - பெ. **பெண்கள் காதில் அணியும் நகை (பாம்படம் போன்றது).** 'அந்தப் பாட்டி காதுல மொழுக்குப் போட்டிருக்கறா.'

மொளகாப் பூடு - பெ. **மிளகாய்ப் பூடு.** 'மிளகாய்ச் செடி போலவே காணப்படும் ஒரு வகைப் பூண்டு. 'மொளகாப்பூட்ட மொளகாச் செடின்னே நெனச்சிட்டன்.'

மொளசாறு - பெ. **புளி கரைத்து மிளகு, சீரகம், பூண்டு கலந்து தயாரிக்கும் சாறு; ரசம்; மிளகு சாறு.** 'இன்னிக்கி மொளசாறு வெச்சிருக்கறயா.'

மொளகு - பெ. **குழம்புக்காக அரைக்கப்படும் சாந்து.** 'கொஞ்சம் மொளகு அரச்சுச் சாறு காச்சிருக்கறன்.'

மொறக்கட்டு - பெ. **கோயிலில் பூசை செய்வதற்கு உரிமை உள்ள காலம்.** 'இன்னிக்கி அந்தக் கோயில்ல ஆரு மொறக்கட்டு.'

மொன்னப் பாம்பு - பெ. **மழுங்கிய தலைப்பகுதியைக் கொண்ட பாம்பு (இது கடித்தால் விரல்கள் மழுங்கிப் போய்விடும் என்பது நம்பிக்கை).** 'மொன்னப் பாம்பு சுருண்டு கெடக்குது.'

## மோ

மோட்டு - பெ. **வரப்புகளில் இருக்கும் எலி வளை.** 'நெல்லங்காட்டு மோட்ட அடை.'

மோடம் - பெ. **மழை பெய்வதற்கான மேகக் கருக்கல்.** 'வானம் மோடம் போட்டிருக்குது. மழ வரும்.'

மோடா மோடி - பெ. **தொழில் நுட்ப அறிவு இல்லாமல், அத்தகைய வேலையைச் செய்தல்.** 'மோடா மோடியா வேலயச் செஞ்சு முடிச்சிருவான்.'

மோத்தை - பெ. **இளநீருக்கும் முற்றிய தேங்காய்க்கும் இடைப்பட்ட நிலை.** 'மோத்தைய எதுக்கு வெட்டிப் போட்ட.'

மோதரம் - பெ. **பெரிய பாத்திரங்களில் கைப்பிடித்துத் தூக்குவதற்காகப் பொருத்தப்பட்டுள்ள . வளையம்.** 'ஆளுக்கொரு பக்கம் மோதரத்தப் புடிச்சுத் தூக்குங்க.'

மோது - பெ. **1. உடலில் ஒரே இடத்தில் திரும்பத் திரும்பக் காயம் பட்டு ஏற்பட்ட புண் ஆறிய பின்பு அவ்விடத்தில் ஏற்படும் சிறு மேடு.** 'கால் பூரா மோது கட்டிக் கெடக்குது.' **2. வைக்கோல் போரில் நீர் இறங்காமல் இருக்க, மேற்பகுதியில் அமைக்கப்படும் கூரை போன்ற அமைப்பு.** 'மோது போட்டுட்டா போர் வேல முடிஞ்சுது.'

**மோதுகத்தை** - *பெ.* ***போரின் உச்சியான கூம்பு போன்ற பகுதியில் வைக்கப்படும் நீளமான தீவனக்கத்தை.*** 'மோது கத்தையா இழுக்காத. போர் உழுந்துரும்.'

**மோயரம்** - *பெ.* ***மோதிரம்.*** 'ஆட்ட வித்து மோயரம் பண்ணிப் போட்டுக்கிட்டு ஊட்ட படுத்துத்தூங்கு.'

**மோர் சிலுப்புதல்** - *வி.* ***மத்தினால் தயிர் கடைந்து மோராக்குதல்.*** 'கோழி கூப்படவே எந்திரிச்சு மோர் சிலுப்பிட்டேன்.'

**மோரி** - *பெ.* ***பாலத்தின் இருபுறமும் கட்டப்படும் சிறு சுவர்.*** 'மோரி மேல உக்காந்துக்கிட்டு அரட்டை அடிக்கறாங்க.'

**மோழை** - *பெ.* ***சுறுசுறுப்பு; விபரம் அற்றது; விபரம் அற்றவள் / ன்.*** மூத்தது மோழை; எளையது காளை' - பழமொழி.

**மோளக்குச்சி** - *பெ.* ***பறை, உருமி போன்ற மேளக் கருவிகளில் தாளம் எழுப்ப அடிக்கும் சிறு மரக்கோல்.*** 'மோளக்குச்சி எடுத்து ரொம்ப நாளாச்சு. லேசா வீறல் உட்டிருச்சு.'

**மோளி** - *பெ.* 1. ***கலப்பையோடு கையில் பிடித்துக் கொள்ளும் வகையில் பொருத்தப்படும் மரக்கட்டை; ஏரின் பிடி.*** 'மோளியக் கழ்ட்டி மண்ணத் தட்டு.' 2. ***பெரிய அழுக்குத் துணி மூட்டை.*** 'துணி மோளி சேந்து கெடக்குது.'

**மோளை** - *பெ.* ***கொம்பில்லாத ஆடு, மாடு.*** 'இன்னம் கொம்பு வல்ல. மோளையாத்தான் இருக்குது.'

**மோனைக்காரன்** - *பெ.* ***வேலைக்கு ஆட்களை ஏற்பாடு செய்து வேலை வாங்கும் ஆள்.*** 'மோனக்காரங்கிட்டப் பத்தாளு வரச்சொல்லு.'

## ர

**ரக்கிரி** - *பெ.* **காண்க: நக்கிரி.**

**ரச்சை** - *பெ.* ***தொந்தரவு.*** 'இந்தப் பிள்ளைங்களோட ரச்ச தாங்க முடியில.'

**ரட்டக்காலி** - *பெ.* **ஒரே இடத்தில் முளைத்து வளைந்து வளரும் இரு பனைமரங்கள்.** 'அந்த ரட்டக்காலிக்கிட்ட தடி வெச்சிருக்கறன்.'

**ரட்டக்காலி மரம்** - **காண்க: ரட்டக்காலி.**

**ரட்டக்கோப்பு கூரை** - *பெ.* ***இரண்டு கூம்புகள் அடுத்தடுத்து அமைந்தது போன்ற வீட்டுக் கூரை.*** 'ரட்டக்கோப்புக் கூரை போட்டிருக்குதுல்ல. அந்த ஊட்ல போயிக் கேளு.'

**ரட்டு** - *பெ.* 1. ***போர்வை.*** 'அந்த ரட்ட விரிச்சுப் போடு.' 2. ***தவிடு.*** 'எருமத்தாழியில கொஞ்சம் ரட்டு அள்ளிப் போடு.'

**ரவுசு** - *பெ.* ***சண்டை; சண்டையினால் ஏற்படும் கூச்சல்.*** 'அவன் எதுக்கு சும்மா சும்மா ரவுசு பண்றான்.' 'அங்க என்னமோ ரவுசு கேக்குது.'

## ரா

**ராக்காசி** - *பெ.* ***பிறர் எதிர்க்க இயலாத தன்மை கொண்டவள்; முரட்டுக் குணம் கொண்ட பெண்.*** 'வேலையில அவ ராக்காசி.' 'சண்டைக்குனா அவ ராக்காசியாட்டம் நிக்கறா.'

**ராகிக்கல்** - **காண்க: ஆரியக்கல்.**

**ராங்கி** - *பெ.* ***திமிர்; திமிர் கொண்ட பெண்.*** 'இந்த ராங்கி எல்லாம் எங்கட்டச் செல்லாது.' 'அவ சுத்த ராங்கி.'

**ராசி** - *பெ.* ***கதிரடிக்கும் போது பதர்கள் குறைந்தும் தானியம் மிகுந்தும் காணப்படுதல்.*** 'பரவால்ல, இந்தப் போகம் கம்பு நல்லா ராசி ஆச்சு.'

**ராவு** - *பெ.* ***இரவு நேரம்.*** 'ராவுக்கு இங்க தங்கீட்டுக் காத்தாலக்கிப் போங்க.'

**ராஜாப்பிணி** - பெ. **கட்டலின் நடுவில் செல்லும் கயிறு**. 'ராஜாப்பிணியை நல்லாவரி.'



ராஜாப்பிணி

## ரெ

**ரெக்கட்டை** - பெ. **இரு பருப்புகள் கொண்ட நிலக்கடலைக்காய்.** 'எல்லாம் ரெக்கட்டையாத்தான் இருக்குது. முக்கட்டையவே காணாம்.'



ரெக்கட்டை

**ரெக்கட்டக்காய்** - **காண்க:** ரெக்கட்டை.

## ரோ

**ரோகம்** - பெ. **யோகம்.** 'எனக்குத்தான் ரோகமில்ல. அவுங்களுக்குக் கெடைக்குது.'

**ரோசன்** - பெ. **ரோசம் உள்ளவன்; சுயமரியாதையை விட்டுக் கொடுக்காதவன்.** 'ரோசங் கெட்டான், மழுங்கன் பொழச்சான்' - பழமொழி.

## வ

**வக்கத்தவள் / ன்** - பெ. **திட்டுச் சொல். ஒரு செயலைச் செய்வதற்கான வசதி வாய்ப்பு இல்லாதவள் / ன்.** 'வக்கத்தவளுக்கு பேச்சப் பாரு.'

**வக்கிணி** - பெ. **பழிக்கும் விதத்தில் முகத்தைக் கோணிக் கொள்ளுதல்.** 'அதெதுக்கு என்னயப் பாத்து வக்கிணி காட்டறான்.'

**வக்கிப்பில் போர்** - பெ. **வைக்கோல் போர்.** 'வக்கிப்பில்லுப் போருப் போட்டாச்சா.'

**வக்கு** - பெ. **வசதி; வாய்ப்பு.** 'அவனுக்கு என்ன வக்கு இருக்குது.'

**வக்கு பருத்து** - பெ. **கட்டாயப்படுத்து; வற்புறுத்து:** 'என்னயச் சும்மா வக்கு பருத்தாத.'

**வங்கா நரி** - **காண்க:** பொந்துவால் நரி.

**வங்கி** - பெ. **பெண்கள் முழங்கைக்கு மேல் போடும் அணிகலன்.** 'அந்தப் பொம்பள வங்கி போட்டிருக்கறா.'

**வங்கு** - பெ. **எலி, பெருச்சாளி போன்ற உயிரினங்கள் வாழ நிலத்தில் ஏற்படுத்தும் பொந்து; வளை.** 'எலி வங்குக்குள்ள கைய உடாத.'

**வசி** - பெ. **மரங்களில் திருட்டைத் தடுக்க முன்னால் கட்டப்படும் அமைப்பு.** 'தென்னமரத்துக்கு ஒரு வசிகட்டி வெக்கோனும்.'

**வஞ்சி** - பெ. **தண்ணீர் செல்வதற்காக வயலுக்குள் கட்டும் சிறுவாய்க்காலின் கரை.**

'வஞ்சி பெரிசாப் போடறதுதான. அங்கங்க ஒடஞ்சுக்கிட்டுத் தண்ணி போவுது.'

வட்டக்கூடை - **காண்க. ஒட்டுக்கூடை.**

வட்டக்கொடி - *பெ.* **கயிற்றால் ஆன பிரம்பிணை.** 'வட்டக்கொடி ரண்டு பின்னோனும்.'

வட்டச்சேரை - *பெ.* **இரு கை அளவு (தானியம்).** 'கம்பு ஒரு வட்டச் சேர அள்ளிக் கோழிக்குப் போடு.'

வட்டப்பாத்தி - *பெ.* **விதைத்த பின் நீர் பாய்ச்சுவதற்கு வசதியாக வயலில் செவ்வக வடிவில் மண்ணால் கட்டப்படும் சிறு பிரிவு.** 'சோளப்பயிருக்கு வட்டப் பாத்திதான் செரி.'

வட்டப்போர் - *பெ.* **தானியத் தட்டைகளை மழையிலிருந்து பாதுகாக்க வட்ட வடிவில் அமைக்கும் போர்.** 'வட்டப் போரா வச்சா தட்டு உருவறது கஷ்டம்.'

வட்டல் - *பெ.* **உணவு உண்ணும் தட்டு:** 'வட்டல எடுத்தாந்து வெய்யி சோறு போடறன்.'

வட்டு - *பெ.* **1. பாகை ஊற்றிக் குறிப்பிட்ட வடிவில் காய வைத்து வெல்லத்தை எடுப்பதற்காக நிலத்திலோ, மரக்கட்டையிலோ இருக்கும் அச்சுக்குழி.** 'கருப்பட்டி ஒரு நாளைக்கி எத்தனை வட்டு ஆவுது.' **2. பிசுக்குப் போல தரையில் ஒட்டிக் கொள்ளும் கறை.** 'காலே வெக்க முடியல அழுக்கு வட்டு வட்டாக் கெடக்குது.'

வட்டுக்கருப்பட்டி - *பெ.* **அச்சில் வார்த்து எடுக்கப்பட்ட பனை / தென்னை வெல்லம்.** 'வட்டுக் கருப்பட்டி ஒடம்புக்கு நல்லது.'

வட்டுக்கெராப்பு - *பெ.* **தலை மயிரை நடுவில் மட்டும் சிறிதாக இருக்கும்படி விட்டு, சுற்றிலும் ஒட்ட வெட்டி விடுதல்.** 'வெயில் காலத்துக்கு வட்டுக்கெராப்பு வெட்டிக்கறதுதான் பரவால்ல.'

வட்டை - *பெ.* **வண்டி சக்கரம் உருவாக்க இணைக்கப்படும் மரக்கட்டை.** 'அந்த வட்டை விரிசல் உட்டிருக்குது.'

வடக்கவுறு - *பெ.* **ஏற்றம் இறைக்கும் போது ஏற்ற உருளையில் சென்று வரும் கனமான கயிறு; தேர் வடம் இழுக்க உதவும் கயிறு.** 'வடக்கவுத்துல பிரி உட்டுப் போயிருக்குது.'

வடகோடி - *பெ.* **வடதிசை மூலை:** 'வட கோடில இருந்து பாத்தாத் தெரியும்.'

வடச்சட்டி - *பெ.* **எண்ணெய் ஊற்றிப் பொருள்களை வறுக்க, எண்ணெய்ப் பலகாரம் செய்ய உதவும் வாயகன்ற பாத்திரம்; வாணலி.** 'வடச்சட்டியில எண்ணெய் ஊத்தி அடுப்புல வெய்யி.'

வடம் பின்னுதல் - *வி.* **கரும்பு காயாமல் இருக்க எல்லாக் கரும்புகளையும் இணைத்துத் தோகைகளால் தேர்வடம் போல் பின்னி விடுதல்.** 'கரும்புக்கு வடம் பின்னி உடு. அப்பத்தான் சாயாத இருக்கும்.'

வண்டித்தடம் - *பெ.* **வண்டிகள் செல்லும் பாதை.** 'வண்டித் தடத்துல நடந்து போ.'

வண்டி அரிவாள் - *பெ.* **தானியத் தட்டைகளை வெட்டப் பயன்படம் அரிவாள்.** 'வண்டி அருவா உங்கூட்ல இருந்தாக் குடு.'

வண்டிக் கருது - *பெ.* **ஏற்றக்காலில் கயிறு போய்வர உதவும் உருளை (ஏத்த வண்டி)யின் மையத்தில் இருக்கும் துளையில் பொருத்தப்பட்டிருக்கும் நீண்ட அச்சு.** 'வண்டிக் கருது ஒடிஞ்சு போச்சு.'

வண்டிக்காரன் சோறு - *பெ.* **அரிசியும் பருப்பும் கலந்து செய்யும் கூட்டாஞ் சோறு.** 'வண்டிக்காரஞ் சோறாக்கிக்கிட்டு கொழந்தைங்க வெளயாடுது.'

வண்டிக்கூடு - *பெ.* **சவாரி வண்டிகளில் நிழலுக்காக அமைக்கப்பட்டிருக்கும் மேற்பகுதி.** 'வண்டிக்கூடு இருந்தா வெய்யத் தெரியாது.'

வண்டித்தடம் - *பெ.* **வண்டிகள் போய் வரும் அளவு அகன்ற சாலை வழி.** 'வண்டித் தடத்துல புழுதி பறக்குது.'

**வண்டிப்பட்டறை** - *பெ.* **மாட்டு வண்டிகளை உருவாக்கும், பழுது பார்க்கும் இடம்.** 'வண்டிப் பட்டறைக்குக் கொண்டோவோனும்.'

**வண்டுகடி** - *பெ.* **சில வகை வண்டுகளிலிருந்து வடியும் நீர் உடம்பில்பட்டால் வட்டமாக ஏற்படும் புண்.** 'பையனுக்கு கால்ல வண்டுகடி வந்திருச்சு.'

**வண்டிச்சாளை** - *பெ.* **மாட்டு வண்டி நிறுத்துவதற்காக போடப்பட்டிருக்கும் கொட்டகை.** 'வண்டிச் சாளையில அருவா கெடக்கும் எடுத்தா.'

**வண்ணான் மாத்து** - **காண்க: மாத்து.**

**வணங்குதல்** - *வி.* **ஒரு செயலுக்கு உடல் உறுப்புகள் பழக்கப்படுதல்; படிதல்.** 'கால் வணங்குனாத்தானே வேல ஆவும்.'

**வத்தக்கறவை** - *பெ.* **கன்று ஈன்று ஆறு மாதங்களுக்கு மேல் ஆகி மீண்டும் சினையாகி விட்டபின் குறைவான அளவு பால் தந்து கொண்டிருக்கும் மாடு.** 'வத்தக்கறவையாப் போச்சு. வித்துப்புடோனும்.'

**வத்தப்பருப்பு** - *பெ.* **நிலக்கடலைப் பருப்பில் விதைக்கெனச் சலித்துப் பிரித்தெடுத்த நல்ல விதைகள் போக எஞ்சியிருக்கும் வற்றிய சிறு பருப்பு (இதையே வீட்டுக்கு எண்ணெய் ஆட்டப் பயன்படுத்துவர்).** 'வத்தப்பருப்புத்தான் நெறைய இருக்குது. வெதைக்குப் பருப்புப் பத்தாது.'

**வதி** - *பெ.* **சகதி; சேறு.** 'அந்தப் பக்கம் ஒரே வதியா இருக்குது.'

**வதிக்கால்** - *பெ.* **எப்போதும் நீர் உள்ள, ஈரமாக இருக்கும் நிலம்.** 'வதிக்கால்ல என்னடா விளையாட்டு.'

**வம்புப்பாளை** - *பெ.* **பருவமற்ற காலத்தில் பனைமரம் புதிதாக விடும் பாளை.** 'வம்புப்பாளை வந்துச்சுனா கள்ளு வருசத்திக்கும் குடிக்கலாம்.

**வம்பேரி** - *பெ.* **வலிந்து தானாகவே சண்டையை உருவாக்கும் பெண்.** 'அவ பெரிய வம்பேரியா இருக்கறா.'

**வயலறுப்பு** - *பெ.* **நெல் அறுவடை.** 'உங்கள து வயலறுப்பு எப்பொ?'

**வயிறெடுப்பு** - *பெ.* **அடிக்கடி மலம் கழிக்க வேண்டியிருத்தல்; பேதி.** 'அவனுக்கு வயிறெடுப்புப் புடிச்சுக்கிச்சு.'

**வரக்காப்பி** - *பெ.* **பால் கலக்காத காப்பி.** 'ஒரு கௌாசு வரக்காப்பியாச்சும் வெச்சுக்குடு.'

**வரக்காய்** - *பெ.* **முற்றிக் காய்ந்த தேங்காய்.** 'நல்ல வரக்காய வெட்டு.'

**வரச்சாயா** - *பெ.* **பால் கலக்காத தேநீர்.** 'வரச்சாயா வெச்சுக் குடு. தலவலிக்கு நல்லது.'

**வரிக்குரமத்தஞ் செடி** - *பெ.* **பந்து போன்ற வடிவிலான, மேற்பகுதியில் வரிவரியாகக் காணப்படும் காயை உடைய செடி.** 'வரிக்குரமத்தஞ் செடி எங்காச்சும் இருந்தாச் சொல்லு, கால் வீக்கத்துக்குக் காய் வெச்சுக் கட்டோனும்.'

**வரிசைக்குச்சி** - *பெ.* **கொட்டகை மேயும்போது இரண்டு வாரைகளுக்கிடையே (ஓலையைக் கட்டுவதற்காக) வைத்துக் கட்டும் சிறு குச்சி.** 'வரிசக்குச்சி வெச்சு வரிஞ்சாச்சு.'

**வரிதல்** - *வி.* **ஒன்றன் மேல் ஒன்றாக நெருக்கி வைத்துக் கட்டுதல்.** 'குடிசுக்கு கோல் வெச்சு வரிஞ்சு கட்டு.'

**வரையாடு** - *பெ.* **செங்குத்தான பாறைகளிலும் ஏறக்கூடிய ஒரு வகை மலை ஆடு.** 'வரையாடாட்டம் திரியறான் பாரு.'

**வல்லல்** - *பெ.* **ஒரு செயலைச் செய்யும் திற மை.** 'அவனுக்கு என்ன வல்லல் இருக்குது. பொண் ணுக் குடுக்கறதுக்கு.'

**வல்லவட்டம்** - *பெ.* **உருமாலைக்கட்டு; பெரிய துண்டு, வேட்டி தலையில் சுற்றிக் கட்டும் கட்டு:** 'வல்லவட்டம் கட்டிக்கிட்டு எங்க பொறப்பட்டாச்சு.'

**வல்லவாய்** - *பெ.* ***வண்டிச் சக்கரக் கும்பத்தின் மரப்பகுதி அச்சில் உராயாமல் தடுக்கப் பொருத்தும் இரும்பு.*** 'வல்லவாயச் செரி பண்ணோனும்.'

**வல்லாள துக்கம்** - *பெ.* ***வலிந்து தாமாக வரவழைத்துக் கொள்ளும் துன்பம்.*** 'இப்பிடி ஒரு வல்லாள துக்கம் வந்து சேந்துதே.'

**வல்லையம்** - *பெ.* ***வேகமாக ஓடிச் சென்று குத்த உதவும் கத்தி.*** 'அவங்கிட்ட ஒரு வல்லயம் இருக்குது. அடேங்கப்பா... பாத்தாலே பயமா இருக்கும்.'

**வலத்தான்** - *பெ.* ***வண்டி, ஏற்றம், ஏர் ஆகியவற்றில் வலப்புறத்தில் கட்டப் பழக்கப்பட்ட மாடு.*** 'வலத்தானப் புடிச்சுக் கட்டு.'

**வலத்து மாடு** - **காண்க: வலத்தான்.**

**வலிச்சி** - *பெ.* ***ஓலைக் கொட்டகைகளின் கூரை அமைக்கும்போது பனைமரக் கட்டைகளுக்கு (தப்பை) இடையே வைத்துக் கட்டப்படும் மூங்கில் போன்ற திடமான குச்சி.*** 'வலிச்சி நெறைய வேணும்.'

**வலைப்பை** - *பெ.* ***துணியால் ஆன பை.*** 'வலப்பைய எடுத்தோயி உப்பு வாங்கியா.'

**வவுசி** - *பெ.* ***வெற்றுக் கௌரவம்; தேவையற்ற ஆடம்பரம்.*** 'பொழப்புப் போயி பொடக்காலியிலே நின்னுக்கிட்டு போவுட்டோ வருட்டோங்குது. வவுசி வந்து வாசல்ல நின்னுகிட்டு வருட்டோ போவுட்டோங்குது.' - பழமொழி.

**வழமொற** - *பெ.* ***வழக்கம்.*** 'இதுதான் எங்க வழமொற.'

**வழுக்குப் பூடு** - *பெ.* ***ஒரு வகைப் பூடு (இதைத் தின்றால் சினை மாடுகளுக்குக் குறைப் பிரசவம் நேர்ந்துவிடும்).*** 'செனமாட்டப் பாத்து மேயி, வழுக்குப்பூட்ட மேஞ்சறப் போவுது.'

**வள்ளம்** - *பெ.* 1. ***நான்கு படி தானிய அளவு; தானியம் அளக்கும் கருவி.*** 'நாலு வள்ளம் கம்பு அளந்து போடு.' 2. ***வாளி.*** 'வுள்ளத்தக் கட்டித் தண்ணி சேந்து.' 3. ***ஒரு ஏக்கரில் ஆறில் ஒரு பகுதி.*** 'அவுங்களுக்கு எட்டு வள்ள வயலிருக்குது.'

**வள** - *பெ.* ***பந்தலின் இடையே போடப்படும் பெரிய தடி.*** 'பந்தலுக்கு ஒரு வள போடறதுதான.'

**வளம்** - *பெ.* ***குப்பை மண்.*** 'காட்டுக்கு வளமள்ளியாந்து போட்டாப் பரவால்ல.'

**வளவு** - *பெ.* ***பத்துப் பதினைந்து வீடுகளைக் கொண்டு இருக்கும் குடியிருப்புப் பகுதி.*** 'வளவுல என்ன ரவுசு கேக்குது.'

**வளுசல்** - *பெ.* ***சிறுவன், சிறுமி.*** 'வளுசலுக்கு என்ன வெவரந் தெரீயும்.'

**வளையம்** - *பெ.* ***நீர் இறைக்கும் சாலின் மேல் பகுதியில் இரும்பால் கூண்டு போல அமைக்கப்பட்டு இருக்கும் பகுதி.*** 'பறிய வளயத்தப் புடுச்சுத் தூக்கு.'

**வறுகறி** - *பெ.* ***குழம்பு வைக்காமல் வறுத்த கறி.*** 'வறுகறி கொஞ்சம் போடு.'

## வா

**வாக்கணம்** - *பெ.* ***குழம்பு முதலியவை தாழிப்பதற்குப் பயன்படும் வாயகன்ற கைப்பிடியுடன் கூடிய சிறு பாத்திரம்.*** 'வாக்கணத்த எடுத்து அடுப்புல வெய்யி, தாழிக்கலாம்.'

**வாக்கு** - *பெ.* 1. ***தலைமுடியைச் சீவும்போது பிரித்து எடுக்கும் வகிடு.*** 'வாக்கு எடுத்துத் தலசீவு.' 2. ***சாமி ஆடுபவர் சொல்லும் குறிப்பு.*** 'சாமி இன்னிக்கி வாக்குச் சொல்லுமா?'

**வாக்கூடை** - *பெ.* ***வேலையின் போது மாடு, கன்றுகள் பயிர்களை மேய்ந்து விடாமல் இருக்க வாய்க்குப் போடப்படும் சிறு கூடை.*** 'மாட்டுக்கு வாக்கூடையப் போட்டு ஏருல கட்டு.'

**வாங்கல்** - *பெ.* ***சிறு சண்டையினால் இருவர் பேசாமல் இருத்தல்.*** 'அவுங்க ரண்டு பேருத்துக்கும் வாங்கலு.'

**வாங்கு** - *பெ.* ***ஒரு வகைக் கத்தி.*** 'வாங்கு வெச்சு பொளந்திருவன் பாத்துக்க.'

**வாச்சி** - *பெ.* ***மரம் செதுக்குவதற்கு பயன்படுத்தப்படும் வாய் கூர்மையான கருவி.*** 'முள்ளு வாச்சியாட்டம் இருக்குது.'

**வாசக்கால்** - *பெ.* ***வாயிலில் உள்ள பந்தலைத் தாங்கி நிற்கும் கல்தூண் அல்லது மரத்தூண்.*** 'வாசக்கால்ல இடிச்சுக்காத.'

**வாசப்படல்** - *பெ.* ***ஓலைக் கொட்டகைகளிலும் வேலி வாயில்களிலும் கதவுக்குப் பதிலாக மூடித் திறக்கப் பயன்படுத்தும் தடுப்பு.*** 'வாசப்படல நல்லாச் சாத்து.'

**வாசி** - *பெ.* ***எளிது.*** 'இந்த வேலக்கி அந்த வேலயே வாசி போ.'

**வாட்டி** - *பெ.* ***தடவை; முறை.*** 'இந்த வாட்டியாச்சும் பாஸாயிருவியா.'

**வாணி** - *பெ.* ***மானாவாரி விவசாய நிலங்களில் மழைநீர் மண்ணை அரித்துச் செல்லாமல் இருக்க நிலத்தின் ஒரு பகுதியில் அமைக்கப்படும் வாய்க்காலின் கரை.*** 'வெள்ளம் வந்து வாணி ஒடஞ்சு போச்சு.'

**வாது** - *பெ.* ***மரக்கிளை.*** 'அந்த வாதுல தேன்கூடு வெச்சிருக்குது.'

**வாப்பாடு** - *பெ.* ***பண்டம் பாத்திரங்களின் வாய்ப்பகுதி.*** 'வாப்பாட்டப் புடிச்சுத் தூக்காத ஒடஞ்சிரும்.'

**வாய்க்கா மேடு** - *பெ.* ***ஆற்றிலிருந்து பிரியும் மிகப் பெரிய வாய்க்காலின் கரை.*** 'வாய்க்கா மேட்டுல ஆடு மேஞ்சது.'

**வாய்ச்சப்பை** - *பெ.* ***மாடுகளுக்கு வாய்ப்பகுதியில் வரும் புண்.*** 'மாட்டுக்கு வாய்ச்சப்ப வந்துட்டுது. பாக்கவே முடியல.'

**வாய்நீளம்** - *பெ.* ***அதிகம் பேசுதல்; இடம் பொருள் தெரியாமல் பேசுதல்.*** 'அவன் என்ன வேணுன்னாலும் பேசுவான். கொஞ்சம் வாய்நீளந்தான்.'

**வாயில்லாப் பண்டம்** - *பெ.* ***ஆடு, மாடு முதலிய கால்நடைகள்.*** 'அத ஏன் அடிக்கற; வாயில்லாப் பண்டம்டா.'

**வாரம்** - *பெ.* ***விளைச்சலில் நிலச் சொந்தக்காரருக்குப் பாதி; வேளாண்மை செய்பவருக்குப் பாதி என்ற ஒப்பந்தம்.*** 'வாரத்துக்கு வெவசாயம் பண்ணி காலுக் கைவி ஒஞ்சதுதான் மிச்சம்.'

**வாரி** - *பெ.* ***மாடுகள் இழுத்துச் சென்று தண்ணீர் இறைக்கும் ஏற்றத்தில், அவை இழுத்துச் செல்வதற்காக ஏற்றக்காலின் அருகிலிருந்து சரிவாகச் செல்லும் மண்தடம்.*** 'வாரியில் புழுதி எழும்புது தண்ணி தொளி.'

**வாரை** - *பெ.* ***கூரைவேய உதவும் ஓரளவு கடினமான நீண்ட மூங்கில் குச்சி.*** 'அந்த வாரைய வெச்சுக்கட்டு. சாள மேயலாம்.'

**வால்** - *பெ.* ***ஏற்றத்தில் நீர் இறைக்கும் சாலில்,மேலே வந்ததும் மதகில் நீரை வெளியேற்றுவதற்காக நீளமாக இருக்கும் பகுதி.*** 'வால்ல ரண்டு மூனு ஒட்ட உழுந்திரிச்சு. தைக்கோனும்.'

**வால்கயிறு** - *பெ.* ***ஏற்றத்தில் நீர் அள்ளி வரும் சாலின் வால் பகுதியை இழுத்துச் செல்லும் மாடுகளோடு இணைக்கும் கயிறு.*** 'வால் கவுத்த இன்னஞ் கொஞ்சம் இழுத்துக் கட்டு.'

**வாலாங்கொட்டை** - *பெ.* ***மாட்டின் வால் உடம்போடு இணைந்து இருக்கும் பகுதி.*** 'வாலாங்கொட்டையில அடிக்காத.'

**வானக்கால்** - *பெ.* ***மிக உயரமாக வளர்ந்த தானியத் தட்டைகள் காற்றில் தாங்காமல் கீழே சாய்ந்து விடுதல்.*** 'ஒரு காத்து வந்தொடன எல்லாம் வானக்கால் உழுந்திடுச்சு.'

**விகத்தம்** - *பெ.* ***பல்லால் கடிக்க முடியாத அளவு கெட்டி; கடினம்.*** 'வடை இப்பிடி விகத்தமாயிருக்குது.'

**விங்கனம்** - *பெ.* ***1. பேச்சுக்குத் திரித்துப் பொருள் கொள்ளல்.*** 'நிய்யெதுக்கு விங்கனமா எடுத்துக்கற.' ***2. பிளவு.*** 'எப்படியோ விங்கனம் பட்டுப் போச்சு.'

**விசுக்கா** - *வி.அ.* ***தடவை.*** 'அவங்கிட்ட எத்தன விசுக்கா நடக்கறது.'

**விசுவு** - *பெ.* ***ஆட்டுப்பட்டியின் தடுப்புப்படல்கள் காற்றில் விழுந்து விடாமல் இருக்க வெளிப்புறத்தில் கயிற்றால் இழுத்துக் கட்டுதல்.*** 'விசுவு இல்லீனா படலு இந்தக் காத்துக்குத் தாங்காது.'

**விசுவு கயிறு** - *பெ.* ***ஆட்டுப் பட்டியின் படல்கள் காற்றில் விழுந்து விடாமல் இருக்க வெளிப்புறத்தில் இழுத்துக் கட்டப்பட்டுள்ள கயிறு.*** 'விசுவு கவுறு ஒரு காத்துக்குத் தாங்காது நல்லதாப் போடு.'

**விசை** - *வி.அ.* ***தடவை.*** 'காட்டுக்கு எத்தனவெச நடப்ப.'

**விட்டை** - *பெ.* ***1. காய்ந்த மலம்.*** 'காலப் பாத்து வெச்சு வா. விட்ட விட்டையாக் கிடக்குது.' ***2. நாய், பன்றி ஆகியவற்றின் மலம்.*** 'பன்னிவிட்ட பொறுக்கிக் குமிச்சிருக்காங்க.'

**விடியாமுண்டை** - *பெ.* ***திட்டுச்சொல். எவ்வளவு வசதி, பணம் இருந்தாலும் போதவில்லை என்று சொல்பவள்.*** 'எத்தன கொண்டாந்து குடுத்தாலும் அந்த விடியாமுண்டைக்குப் பத்தமாட்டீங்குது.'

**விடியாமொவரை** - *பெ.* ***திட்டுச் சொல். தரித்திரம் பிடித்தவன்.*** 'அந்த விடியாமொவரையப் பார்த்தாலே நம்புளுக்கும் தரித்தனம் புடிச்சுக்கும்.'

**விடுசூளை** - *பெ.* ***திட்டுச் சொல். பொறுப்பற்றுத் திரிபவன், போக்கற்றவன்.*** 'விடுசூளையோட வெல்லாம் ஒறவு வெச்சுக்காத.'

**விடுமட்டம்** - *பெ.* ***உழவு வேலைகளுக்கும் கறவைக்கும் தற்பொழுது பயன்படாத மாடு.*** 'அது விடுமட்டமாப் போச்சு.'

**விதாயம்** - *பெ.* ***ஆலோசனை; யோசனை.*** 'நீங்களே ஒரு விதாயம் சொல்லிக் குடுங்கோ.'

**விதைப்பருப்பு** - *பெ.* ***நிலக்கடலையில் விதைக்கெனப் பிரித்துத் தனியாக எடுத்த பருப்பு.*** 'வெதப்பருப்புல எறும்பு ஏறிரப் போவுது.'

**விரதல்** - *பெ.* ***தற்பொழுது கன்று ஈன்றிராத, உடனடிப் பயனில்லாத மாடு.*** 'அந்த வெரதலுக்கும் ரண்டு தீனி போடு.'

**விரிவாங்கு** - *பெ.* ***கெட்டியாகப் பிணைந்து இறுகியுள்ள சங்கிலி, கயிறு போன்றவற்றை இழுத்து நெகிழ்வாக்குதல்.*** 'கவுறு இப்படி இறுக்கமாயிருக்குது. கொஞ்சம் விரிவாங்கு.'

**விருத்தி** - *பெ.* ***பெருக்கம்.*** 'ஒரு ஆடு வெச்சிருந்தான். இன்னிக்கி விருத்தியாயி ஒரு பட்டி ஆடு வந்திருச்சு.'

**விருப்பு** - *பெ.* ***மாடுகளுக்கு வரும் ஒரு நோய்.*** 'மாட்டுக்கெல்லாம் விருப்பு வருதாமா.'

**விருமித்தி** - *பெ.* ***எதுவும் செய்யாமல் அசைவற்று இருப்பவரைக் குறித்துக் கூறும் சொல்.*** 'விருமித்தி புடிச்சவனாட்டம் இருக்கறானே.'

**வில்த்தப்பை** - *பெ.* ***சவாரி வண்டியில் சக்கரத்தையும் வண்டியின் மேல் பகுதியையும் இணைக்கும் வில் வடிவிலான பகுதி.*** 'வில்த்தப்ப நல்லா இருக்குதான்னு பாரு.'

**வில்லச்சாளை** - *பெ.* ***கடைகளில் விற்கப்படும் (சீமை) ஓடு கொண்டு கூரைவேயப்பட்ட சிறு வீடு; கொட்டகை.*** 'வில்லச் சாளையில என்ன அடுக்கி வெச்சிருக்குது.'

**வில்லை ஓடு** - *பெ.* ***தொழிற்சாலையில் தயாரிக்கப்பட்டு கடைகளில் விற்கும் கூரை வேய உதவும் தட்டை வடிவான ஓடு.*** 'வில்லை ஓடு போட்டரலாம்னு பார்க்கறன். காசு கெடைக்கல.'

**வில் வண்டி** - *பெ.* **பயணம் செயற்வதகான வண்டி; சவாரி வண்டி.** 'அவுங்க வில்வண்டி கூட வெச்சிருக்கறாங்க.'

**விலக்குமாறு** - *பெ.* **மண்வாசலைக் கூட்டும் தென்னை ஓலை; ஈர்க்குச்சிகளால் ஆன துடைப்பம்.** 'வெலக்கமாத்த எடுத்து வாசலக்கூட்டு மொதல்ல.'

**விழுது** - *பெ.* **நிலக்கடலைச் செடியில் காய் இருக்கும் வேர்.** 'கடலச்செடி விழுது எறங்கீருச்சு.'

**விளக்குக் கூடு** - *பெ.* **கோயில்களில் ஏற்றும் சிறு அகல் விளக்குகள் அணைந்து விடாமலிருக்க சுடுமண்ணால் செய்து வைக்கப்படும் கூண்டு.** வெளக்குக் கூடு ஒண்ணு இல்லாத இந்தக் கோயில்ல கஷ்டம்.'

**விளாவு** - *வி.* **குளிக்கப் போதுமான சூட்டில் இருக்க வெந்நீரில் தண்ணீர் கலத்தல்.** 'சுடுதண்ணி வெளாவி வெச்சிட்டியா.'

**வினையம்** - *பெ.* **தந்திரமாகப் பிறருக்குக் கேடு விளைவிக்கும் எண்ணம்; செயல்; சூது.** 'அவுனுக்கு நெறைய வெனயம் இருக்குது.'

## வீ

**வீச்சம்** - *பெ.* **குளிக்காமல் இருப்பதால் உடலில் இருந்து வரும் நாற்றம்.** 'என்னடா இப்பிடி வீச்சமடிக்குது.'

**வீசுகன்னு** - *பெ.* **மாடுகளுக்கு நேரும் குறைப்பிரசவத்தால் வெளியே வந்துவிடும் வளர்ச்சியற்ற கன்று.** 'வீசுகன்னப் பாக்கவே முடியில பாவம்.'

**வீசுகுட்டி** - *பெ.* **ஆடுகள் குறை மாதத்தில் ஈனும் வளர்ச்சியற்ற குட்டி.** 'அந்த ஆடு வீசுகுட்டி போட்டிருச்சுது.'

## வெ

**வெக்கை** - *பெ.* **1. அதிக வெயிலால் ஏற்படும் வெப்பம்.** 'ஒரே வெக்கை அடிக்குது.' **2. வேர்க்குரு.** 'வெக்கைக்கு நொங்குத் தண்ணி தடவு.'

**வெங்கச்சங்கல்** - *பெ.* **உடைத்தால் வெண்மை நிறமுள்ள துகள்களாய்ச் சிதறும் ஒரு வகைக் கல்.** 'வெங்கச்சங்கல்லாப் பாத்து பொறுக்கியா.'

**வெசக்கா** - *வி.அ.* **தடவை; முறை.** 'எத்தன வெசக்கா நடக்கறது.'

**வெசனம்** - *பெ.* **கவலை.** 'எதுக்கு வெசனம் புடிச்சுக் கெடக்கற.'

**வெட்டாட்டம்** - *பெ.* **தாய விளையாட்டில் எதிராளியின் காயை வெட்டிய பின் கூடுதலாக எடுத்தாட வாய்ப்புக் கிடைக்கும் ஆட்டம்.** 'வெட்டாட்டத்துல ரண்டு பனன்டு உழுந்திருக்குது.'

**வெட்டாப்பு** - *பெ.* **தொடர்ந்து மழை பெய்து கொண்டு இருக்கும் போது இடையே சிறிது நேரம் மழை நிற்கும் இடைவெளி.** 'இப்பத்தான் கொஞ்சம் வெட்டாப்பு உட்டிருக்குது.'

**வெட்டு** - *பெ.* **தாய விளையாட்டில் எதிராளியின் காயால் ஒருவரின் காய் வெட்டுப்படுதல்.** 'ரண்டு வெட்டு வெட்டீருக்கறன்.'

**வெட்டுக்கால்** - *பெ.* **வெற்றிலைக் கொடிக்கால் போட வெட்டி உருவாக்கப்படும் பாத்தி.** 'வெட்டுக்கால் வேல முடிஞ்சுதா.'

**வெட்டுக்கை** - *பெ.* **கூரை முகட்டில் இணையும் கவிழ்த்த V போன்ற அமைப்பில் பொருத்தப்படும் மரக்கட்டை.** 'வெட்டுக்கையில கரையான் புடிச்சிருச்சு.'

**வெட்டை** - *வி.அ.* **உறுதியற்று.** 'பென்சில் வெட்டையாப் போச்சு.'

**வெடிகொட்டை** - *பெ.* ***ஆமணக்குச் செடியில் காய்ந்த காயிலிருந்து வெடித்து மண்ணில் விழும் விதை.*** 'வெடிகொட்ட பொறுக்கப்போலாமா.'

**வெடை** - *பெ.* ***முட்டையிடும் பருவம் எய்தாத பெட்டைக் கோழி; பெட்டைக் கோழிக்குஞ்சு.*** 'இந்தக் கூம்பு எத்தன வெடை பொறிச்சிருக்குது.'

**வெண்டு** - *பெ.* 1. ***கனமற்ற மரத்துண்டு; தானியத் தட்டைகளின் உள்ளிருக்கும் தக்கை.*** 'வெண்டு மொதக்குது குண்டு முழுவுது' - பழமொழி 2. ***தண்ணீர் பற்றாக்குறையில் பஞ்சு போலான கரும்பின் நடுப் பகுதி.*** 'வெண்டோடுனதனால கரும்பு எடையேஇல்ல.'

**வெண்ணம்புல்** - *பெ.* ***ஒரு வகைப் புல்.*** 'வெண்ணம்புல் நெறய இருக்குது. ஆனா மாடு மேயில.'

**வெதப்பொழவு** - *பெ.* ***விதைப்பின்போது போடப்படும் உழவு.*** 'வெதப்பொழவுக்கப்பறம் ஒழவு போடல.'

**வெதப்பொட்டி** - *பெ.* ***விதைப்பெட்டி. தானியத்தை நிலத்தில் விதைப்பதற்குப் பயன்படும் பிரம்புப் பெட்டி.*** 'வெதப்பொட்டியக் கும்புட்டு எடுடா.'

**வெது(த)ரு** - *பெ.* ***ஆணின் விரை.*** 'பேசாதிடா வெதுரெடுத்துப் புடுவன் டேய்.'

**வெதை ஒழவு** - ***காண்க: வெதப்பொழவு.***

**வெந்தண்டன்** - *பெ.* ***திருமணமான பருவம் வந்தும் திருமணம் ஆகாமல் இருக்கும் ஆண்; பிரமச்சாரி.*** 'வெந்தண்டனுங்களோடு சேந்துக்கிட்டு எங்கடா சுத்துன.'

**வெந்நீர்ப்பால்** - *பெ.* ***குறைந்த பாலில் அதிக நீர் ஊற்றிக் கடைகளில் விற்கும் பால்.*** 'ஒரு வெந்நீர்ப்பால் குடுப்பா.'

**வெரசல்** - *பெ.* ***சுறுசுறுப்பு.*** 'பையன் நல்ல வெரசலுத்தான்.'

**வெலா** - *பெ.* ***நிலத்தை உழும்போது சுற்றி வர வசதியாகப் பிரித்துக் கொள்ளும் உழவுப் பகுதி.*** 'வெலா அறுத்து ஓட்டு.'

**வெலா அறு(த்தல்)** - *வி.* ***உழவின் போது சுற்றிவர வசதியாகப் பிரித்துக் கொள்ளப்பட்ட உழவுப் பகுதி முடிந்ததும் புதிய பகுதியை உழத் தொடங்குதல்*** ***காண்க:*** வெலா.

**வெலாசமை(தல்)** - *வி.* ***உழவின்போது சுற்றிவர வசதியாகப் பிரித்துக் கொள்ளப்பட்ட உழவுப் பகுதி முடிந்துவிடுதல்.*** 'வெலா சமஞ்சிருச்சு அடுத்த வெலா அறு.'

**வெவ்வாலம்** - *பெ.* ***ஒன்றன் மீது கொள்ளும் பேராசை; வெறி.*** 'வெவ்வாலம் புடிச்சவனாட்டம் திரியற.'

**வெவுரி** - *பெ.* ***விடியலில் இருள் பிரிந்து லேசாக வெளிச்சம் வரத் தொடங்குதல்.*** 'வெவுரி ஓடிருச்சி. எந்திரிடா.'

**வெள்ளதாரை** - *பெ.* ***காய்ந்த பின் தெரியும் வெள்ளம் ஓடிய சுவடு; தடம்.*** 'வெள்ளதாரையில மணல் கெடக்கும் அள்ளியா.'

**வெள்ளவேலா மரம்** - *பெ.* ***வெண்மை நிறக் கிளைகளைக் கொண்ட முட்கள் நிறைந்த ஒருவகை மரம் (கருவேலமரத்திற்கும் இதற்கும் நிற வேறுபாடு தவிர பிற அனைத்தும் ஒற்றுமையாகவே இருக்கும். சாராயம் காய்ச்சுவதற்கு பயன்படுத்துவர்).*** 'வெள்ளவேலா மரந்தான் ஏரியில நெறைய இருக்குது.'

**வெள்ளாமக்காடு** - *பெ.* ***பயிர் செய்யப்பட்டுள்ள, பயிர்கள் உள்ள நிலம்.*** 'வெள்ளாமக் காட்டுல ஆட்ட உட்றாத.'

**வெள்ளெலி** - *பெ.* ***வயல் வரப்புகளில் வளை வைத்துக் கொண்டு தானியத்தை உண்டு வாழும், அடிப்பகுதி வெண்மை நிறமான எலி.*** 'வெள்ளெலி புடிச்சாலாச்சும் வறுக்கலாம்.'

**வெளக்குமாடம்** - ***காண்க: மாடக்குழி.***

**வெளாரு** - *பெ.* ***மரக்கிளைகளிலிருந்து பக்கவாட்டில் வளரும் சிறு குச்சி.*** 'வெளாரு ஒன்னு கையிலு வெச்சுக்க, ஆடு முடுக்கோனுமில்ல.'

**வெளிக்கொடை சாய்(தல்)** - *வி.* ***வண்டிச் சக்கரத்தில் கும்பம் வெளிப்பக்கமாகத் தள்ளி இருத்தல்.*** 'சக்கரம் வெளிக்கொட சாஞ்சிருக்குது. பாக்காம ஓட்டற.'

**வெளிரோடுதல்** - *வி.* ***தலைமுடி லேசாக நரைக்கத் தொடங்குதல்.*** 'அதுக்குள்ள வெளிரோடிச் போச்சு உனக்கு.'

**வெளிவிடு** - *வி.* ***ஆடுகளைப் பட்டியிலிருந்து மேய்ச்சலுக்காகத் திறந்துவிடுதல்*** 'ஆடு வெளி உடற நேரமாச்சு.'

**வெறுமானம்** - *பெ.* ***அமாவாசைக்கு அடுத்த நாள் (இந்நாளில் நல்ல செயல் எதுவும் தொடங்கமாட்டார்கள்.*** 'வெறுமானத்தன்னிக்கி ஒன்னும் வேண்டாம்.'

**வெறுவயிறு** - *பெ.* ***திட உணவு இல்லாமல் காலியாக வைத்துள்ள வயிறு.*** 'ராத்திரியில் வெறுவயிறோட இருக்கக்கூடாது.'

## வே

**வேக்காடு** - *பெ.* *1.* ***அதிக வெப்பத்தின் காரணமாக உண்டாகும் புழுக்கம்.*** 'ஒரே வேக்காடா இருக்குது. வெளிய படுத்துக்கலாம்.' *2.* ***பொறாமை.*** 'வேக்காடு புடிச்சவன்.'

**வேச்சியம்** - *பெ.* ***பங்காளிகளுக்குள் ஏற்படும் சொத்துத் தகராறு.*** 'பிரிச்சுக் குடுத்தே ஆவோனுமின்னு வேச்சியம் கட்டறான்.'

**வேசகாலம்** - *பெ.* ***கோடைக்காலம்.*** 'வேசகாலத்துல தண்ணி நெறையக் குடிக்கோனும்.'

**வேட்டை** - *பெ.* ***வீட்டில் வளர்க்கும் நாய் நன்றாக இருக்க வேண்டும் என்ற வேண்டுதலுக்காகச் சிறு தெய்வக் கோயிலுக்குச் செய்து வைக்கும் நாய் உருவச் சுடுமண் சிற்பம்.*** 'போன வருசம் செஞ்சு வெச்ச வேட்ட ஒடஞ்சு கெடக்குது.'

**வேடகாலம்** - *காண்க:* **வேசகாலம்.**

**வேடு** - *பெ.* ***சட்டி, குடம் போன்றவற்றில் எண்ணெய், நெய் போன்றவற்றை வைத்து வாய்ப் பகுதியை மூடிக் கட்டும் துணி.*** 'எண்ணெக் கொடத்த வேடு கட்டி வெக்கறதுதான.'

**வேடை** - *காண்க:* **வேசகாலம்.**

**வேண்டுதலை** - *பெ.* ***ஏதாவது ஒரு காரியம் குறித்துக் கடவுளுக்குச் செய்து கொள்ளும் நேர்ச்சி:*** 'கோயிலுக்கு ஒரு வேண்டுதல இருக்குது.'

**வேது** - *பெ.* ***துணி, வறுத்த தவிடு, சூடு செய்த மண்பானை ஓடு முதலியவற்றை உடம்பில் வீக்கம் வலி உள்ள இடங்களில் வைத்து ஒற்றி எடுத்தல். ஒத்தடம்.*** 'வீக்கத்துக்கு கொஞ்சம் வேது குடு.'

**வேய்க்கானம்** - *பெ.* ***புத்தி கூர்மை; மிகுந்த அறிவு; விபரம்.*** 'வேய்க்கானமில்லாட்டி இந்தக் காலத்துல பொழைக்க முடியாது.'

**வேலப்பூடு** - *பெ.* ***கீரையாகப் பயன்படும் ஒருவகைப் பூண்டு.*** 'வேலப்பூடு எப்பிடி வளந்து கெடக்குது பாரு.'

**வேலிக்கால்** - *பெ.* ***வேலி ஓரம்.*** 'வெள்ளாட்ட வேலிக்கால்ல உடு, மேயட்டும்.'

**வேலிப்பருத்தி** - *பெ.* ***வேலிகளில் காணப்படும் ஒருவகைச் செடி.*** 'வேலிப்பருத்தி இப்ப இல்லாதயே போயிடுச்சு.'

**வேறவெப்பு** - *பெ.* ***திருமணமான பின் குடும்பத்திற்கு வேண்டிய பொருட்களை பெண்வீட்டார் வாங்கிக் கொடுத்து தம்பதியரைத் தனி வீட்டில் வசிக்கச் செய்தல்; தனிக்குடித்தனம்.*** 'வேற வெப்புக்கு வாங்கிக் குடுத்த சாமானே எங்களுக்குப் போதும். புதுசா என்னத்துக்கு.'

**வைமுலை** - *பெ.* ***எளிதில் பால் கறக்க இயலாத, அதிக பலத்தோடு இழுத்துக் கறக்க வேண்டிய நிலையிலிக்கும் மாட்டு முலை.*** 'வைமொலையாப் போச்சு. இழுத்துப் பீச்சறதுக்குள்ள கைவலி எடுத்துருது.'

## வை

**வைரி** - *பெ.* ***எதிரி.*** 'அவன் எனக்கு வைரி.'

# பழமொழிகள்

அங்காச்சு இங்காச்சு
அங்கராக்குல பிய்யாச்சு

அடைஞ்சு அடைஞ்சு சாமி கேட்டா
அரண்மனைக்குத்தான் கேடு.

அடைமழை நின்னாலும் செடிமழை நிக்காது.

அண்டையில காவேரி
ஆனாலும் முழுக மாட்டாளாம் மூதேவி.

அத்தைக்குப் புத்திசொல்லி அண்ணன் மகள்
அவுசேரி போனாளாம்.

அந்தந்தச் சாமிக்கு அந்தந்தப் படியாம்
கடகெட்ட சாமிக்கு லொடலொடப் படியாம்.

அந்திச் சோறு திங்கலீன்னா அரைப்பலன்தான்.

அப்பங்கிட்டப் போனவள் அழுதாத் தீருமா?

அப்பனுக்கே ஒட்டுக்கோமணமாம்
அதுல பையனுக்கு எங்க இழுத்துப் போத்தறது?

அம்மாயி நூக்கற நூலுக்கும்
பேராண்டி அறுக்கர அண்ணாக் கவுத்துக்கும்
சரியாப் போச்சாம்.

அய்யன் தின்னு கெட்டான்
துலுக்கன் துணியில கெட்டான்.

அர்த்தங் கெட்டது சந்தைக்குப் போய்
அதுவாங்கிக் குடு இது வாங்கிக் குடுன்னுதாம்.

அரண்மனைக்கு ஒரு ஆணும்
ஒரம்பரைக்கு ஒரு பொண்ணும் வேணும்.

அரசனுக்கு அவன்பாடு
ஆண்டிக்குத் தம்பாடு.

அரிசி தின்ன வாயும்
அவுசேரி போன பொச்சும் சும்மாயிருக்காது.

அழகுக்குத்தான் ஆலாம்படி
ஒழவுக்கு ஒன்னையுங் காணோம்.

அழுவுற ஊட்டுல இருந்தாலும்
ஒழுவுற ஊட்டுல இருக்கக் கூடாது.

அழையாத ஊட்டுக்குச்
செரையாத நாசுவன்.

அறுதிக்கு அரைப்படி
ஊதாரிக்கு ஒருபடி.

அன்னம் போர்க்களமாம் அன்னாடும் சண்டையாம்
நித்தம் போர்க்களமாம் நெடுநாளும் சண்டையாம்.

ஆகாத பிள்ளை ஆபத்துக்குதவுமாம்.
வேப்பெண்ணெய்க் கலயம் ஒரு வேலைக்குதவுமாம்.

ஆட்ட அடிச்சா அங்க இருப்பானாம்
கோழிய அடிச்சா குறுக்க இருப்பானாம்.

ஆட்ட அறுபதையும் தின்னு
மூட்ட முப்பதையும் தின்னு
வெள்ளாட்டக் கண்டா
வெறுக்குனு துள்ளி உழுவாளாம்.

ஆட்டக் கண்டு மொளகரச்சு
அம்மியக் கண்டா சாறுவெக்கறது.

ஆடடிக்கறன் கோழியடிக்கறன் அங்கமா முனியப்பா
அன்னவெறியத் தீத்துக்கடா நோனி முத்தப்பா.

ஆடு அக்கர. புழுக்க இக்கர.

ஆடு மாடு இல்லாதவன் அடமழைக்கு ராசா
பொண்டாட்டி பிள்ள இல்லாதவன் பெருமழைக்கு ராசா.

ஆடும் புடுக்கும் அடியோட போச்சாம்.

ஆண்டி சொல் அம்பலமேறுமா?

ஆத்தக் கண்டுதான் சூத்தக் கழுவோனுமா?
அம்மியக் கண்டுதான் மிளகாய் அரைக்கோனுமா?

ஆத்துல அக்கப்பட்டு
சேத்துல சிக்கப்பட்டு
வெளியவர வெக்கப்பட்டுக் கெடக்கறான்.

ஆத்துலபோவுது கும்பம்
பசவ இருக்குது தெண்டம்.

ஆதியில வந்தவன் வீதியில நிக்கறான்
நேத்து வந்தவன் நெய்யுஞ்சோறு திங்கறான்.

ஆய் ஆய்ன்னு பாடுபட்டாலும்
அள்ளி உடறவன் ஒருத்தன்.

ஆய்ந்து பாரு அமர்ந்து பாரு
அஞ்சு மாசங் கண்டு பாரு.

ஆயிப் பளத்தாமூட்டுக்குப் போயிப் பாத்தாத் தெரியும்
அங்கொரு நாளைக்கு இருந்து பாத்தாத் தெரியும்.

ஆயிரம் ரூவாக் கடன் அடக்கத்துல கெடக்கும்
ஆறுகாசுக் கடன் அம்பலத்துல நிக்கும்.

ஆராரு தலையில அரப்பாட்டி
அம்மாயி தலையில குளிப்பாட்டி.

ஆள் உள்ளபோது அடிச்சுக்கோனும்
காத்துள்ளபோது தூத்திக்கோனும்

ஆள் சிறிசானாலும் அருமை பெரிசு.

ஆளாளுக்குப் பள்ளாட்டு
அய்யரூட்டுல கலியாணம்.

ஆளில்லாத பண்ணையம் அரைப் பண்ணயம்தான்.

ஆளில்லாப் பாவி அழுதா வெடியுமா
சீரில்லாப் பாவி சிரிச்சா வெடியுமா.

ஆளுக்காரன் குசுவுட்டா அடிடா புடிடா
பண்ணயக்காரன் குசுவுட்டா கோவிந்தா கோவிந்தா.

ஆளுக்காரனுக்குப் பொன்னுக் கொடுத்தாலும், ஆக்கித்
திங்கறவனுக்குப் பொன்னு கொடுக்கக் கூடாது.

ஆளு பெருத்தா அங்க
அரசு பெருத்தா இங்க

ஆறு நிறைய தண்ணி ஓடினாலும்
நாய் நக்கி நக்கித்தான் குடிக்கவேணும்.

ஆனமேல போறவனுக்கு அவமானமாம்
அதஉட்டுக் கீழ எறங்குனவனுக்கு வெகுமானமாம்.

ஆன வந்தாலும் ஆப்பச்சாறு தான்
குதிர வந்தாலும்கூட்டுச்சாறு தான்.

ஆனவனுக்கு ஆவாதவ கெடைப்பாள்
ஆவாதவனுக்கு ஆனவ கெடைப்பாள்.

இட்டேரியில போவுதாம் சண்டை
இழுத்து புடிக்குதாங் கொண்டை.

இருட்டூட்டுக்குள்ள போனாலும்
திருட்டுக்கை சும்மாயிருக்காது.

ஈனனுக்கு இரு செலவு
தாராளனுக்கு ஒரு செலவு.

உக்காந்தவன் எந்திரிக்கிறதுக்குள்ள
நடந்தவன் காதவழி.

உக்கார்றவள் ஒழுங்கா உக்காந்தாத்தானே
செரைக்கரவன் செம்மையாச் செரப்பாள்.

உங்கிறவனப் பாத்துக்கிட்டு இருந்தாலும்
உமுறவனப் பாத்துக்கிட்டு இருக்க முடியுமா.

உபகாரக் கோழி தோல் மொட்டு வெச்சுதாம்.

உள்ளூர்ல ஓடக்கான் புடிக்கிறதே போதும்
வெளியூர்ல போயி உடும்பு புடிக்காட்டிப் போவுது.

உன்ற நெனவா
ஊரான் நெனவா?

ஊசிபோலத் தொண்டையில
தாழிபோல வவுத்துக்குத்
திங்க வேணும்னா எப்படி?

ஊட்டுல இருக்கிறவ ஊதாரி
ஊருக்கு வந்தவ நாதாரி.

ஊமையன் ஊமையன்னு ஊரையெல்லா மேய்ப்பான்
மசயன் மசயன்னு மாட்டையெல்லா மேய்ப்பான்.

ஊர் மொதலுக்கு ஆசப்பட்டா
உள்ள மொதலும் போயிடும்.

ஊர்ல கல்யாணமாம்
மார்ல சந்தனமாம்.

ஊரார் சிரிப்பார்னு ஒப்புக்கு அழுவுறது
நாட்டார் சிரிப்பார்னு மப்புக்கு அழுவுறது.

ஊருக்கு நல்ல மொறம்
ஊட்டுக்குப் பீத்த பொறம்.

ஊரைச் சுத்திக் கீர கெடக்குது உப்பில்லாத
எங்கூட்டச் சுத்தி ஒருத்தி கெடக்கறா கொப்பில்லாத.

ஊரெல்லாம் சுத்தி
பொத்செல்லாம் வத்தி
இன்னும் வல்ல புத்தி

எங்கப்பங் குதிரை ஏறி
எம்பொச்சு காப்புக்காய்ச்சிப் போச்சு.

எட்டற ஊட்டுக்கு நெருப்பு வைப்பான்
எட்டாத ஊட்டுக்கு ஏணி வைப்பான்.

எட்டாளு வேலையை ஒரு சிட்டாளு செய்யுமாம்.

எட்டி எட்டிப் பாத்தவளுக்கு ஏழு கொழக்கட்டை
முக்கி முக்கி இடிச்சவளுக்கு மூனு கொழக்கட்டை.

என்னெப் பிள்ளையோ? வண்ணப் பிள்ளையோ?

எத்துல புள்ளப் பெத்து
எரவானத்துல தொட்டில்கட்டி
தூரி தூரிங்க வேண்டியதுதான்.

எருக்கலையா மனம் ஒறுக்கலியாம்
வாழஎலையா மனம் தாழலியாம்.

எருத்து வாலப் புடுச்சா மேல வர்லாம்
எருமை வாலப் புடுச்சா?

எருமை எருமையின்னு எருத்தையெல்லாம் தோத்தாளாம்
மருமவன் மருமவன்னு மகனையெல்லாம் தோத்தாளாம்.

எருமை கறக்கரதுக்குள்ள
ஏழு தடவை வந்து போகுதாங் கோடை மழை.

எல்லாக் கொக்கும் கொளைக்குதுன்னு
குருட்டுக் கொக்கும் கொளைக்குதாம்.

எள்ளு வெளஞ்சாலும் எடங்காடு
கொள்ளு வெளஞ்சாலும் கொறங்காடு.

எல்லோருஞ் சிரிக்கிறாங்கனு
பூனை பொடக்காலியில போய்ச் சிரிக்குதாம்.

என்னடா பெருமை ஏவாரின்னானாம்
தவிட்டுப் பெருமையடா தாயோலின்னானாம்.

என்னை உமின்னு ஊதுவாருமில்ல
அரிசின்னு அள்ளுவாருமில்ல.

ஏமனுக்கு ஏழுபிள்ளயக் குடுத்தாலும்
உத்தாருக்கு ஒன்னக் குடுக்கமாட்டாம் உசுரோட.

ஏலேலோ மாவிடிச்சி எம்பொழப்பும் கெட்டுது
ஏனோ தெரியலியே எம்மக பொழப்பும் கெட்டுது.

ஒட்டன் கண்டானாம் லட்டுருண்டைய
போயன் கண்டானாம் பொறியுருண்டைய.

ஒன்னான தெய்வமே ஒதுங்கி நிக்குதாம்
பொடக்காலி தெய்வம் பொங்கலோ பொங்கலோங்குதாம்.

ஒறவுக்கு ஊம்புனா பல்லுப் போயிரும்.

ஒன்னான கொறையாம்
ஒரு காது மூளியாம்.

ஒன்னுக்கு ரெண்டாம் ஒவுத்திரியத்துக்கு மூனாம்.

ஒன்னையும் காணோம் ரெண்டையும் காணோம்
கன்னுந் தாயும் மூனுன்னாளாம்.

ஓட்டைப்பாழாம் தாப்பாளாம்
நோனிக் கிழவிக்கு நோக்காடாம்.

ஓடி ஓடிச் செய்தாலும்
ஊரான் பிள்ளை தன் பிள்ளையாகுமா?

கச்ச கட்டி மாவிடிப்பா கவண்டம் பொண்டாட்டி
பொச்சநோண்டி வெளக்கெடுப்பாளாம்
பெருந்தலக்குப்பாயி

கச்சாயம் சுடுபவள் கருத்தாளி
பனியாரம் சுடுபவள் பாங்காளி
சந்தவை நெரிப்பவள் சமுத்தாளி.

கஞ்சி ஊத்த ஆள் இல்லைனாலும் கச்சை கட்ட ஆளிருக்குது.
கூழு ஊத்த ஆள் இல்லைனாலும் கூத்துக் கட்ட ஆளிருக்குது.

கடும் உறவு பகையாகும்
கடுங் காத்து மழையாகும்.

கடும்பிரியம் கண்ணக் கெடுக்கும்
கடுங்காத்து மழையக் கெடுக்கும்.

கத்த வித்த காலத்துக்கும் உதவும்.

கத்தரிக்கா வித்தாலும் கைராசி வேணும்
கண்டவனோட போனாலும் பேர்ராசி வேணும்.

கம்மங் கருதக் கண்டா கை சும்மாயிருக்காது
மாமன் மகளைக் கண்டா வாய் சும்மாயிருக்காது.

கரிச்ச ஊடு பொரிச்ச ஊடும்பான்
கன்னால ஊட்ட வெறும் ஊடும்பான்.

கரும்பு தின்னவனுக்குக் கரும்பு ருசிக்கும்
வேம்பு தின்னவனுக்கு வேம்பு ருசிக்கும்.

கல்யாணம் பண்ணினவன் காரியக்காரன்
பிள்ளைப் பெத்தவன் பெரிய தனக்காரன்.

கல்ல வெட்டினாலும் சொல்லி வெட்ட வேணும்.

கவுண்டனுக்கு தேங்கா வாங்கக் காசிருக்காதாம்
தண்டம் கட்டக் காசிருக்குமாம்.

கள்ளப்பால் கறந்தால்
கன்னுவெல பெறுமா.

கறந்து குடிச்சா காலமெல்லாங் குடிக்கலாம்
அறுத்துக் குடிச்சா அன்னோட சரி.

காசக்குடுத்தா வேசி வாறா
கம்பக்குடுத்தா தொண்டி வாறா.

காசிக்குப் போனாலுந் தீராது பூனைப்பாவம்

காடித் தண்ணீன்னாலும் மூடிக் குடி.

காடு வா வாங்கிது, ஊடு போ போங்கிது.

காடைக்கு களத்து நெல்லுப் போட்டாலும்
காட்டுவாக்கிலதான் திரியும்.

காணதவன் கண்டுபிடிச்சானாம்
காடுமேடெல்லாம் இழுத்தடிச்சானாம்.

காலகாலத்துத் தாசனாயிருந்தா களம் போயிக்களம் வருவான்
அன்னுபுதுசுத் தாசனாயிருந்தா அடிபட்டுத்தான் சாவான்.

காளி உறவு கருது பகையா?

குட்டிநாய் வந்தா பட்டிநாய் போயிரும்.

குந்த நிழலும் கூத்தியா வீடும் இருந்துட்டா
மயிரான சம்பளம் வந்தா என்ன? போனா என்ன?

குருடி தண்ணிக்குப் போய் எட்டாள்
வேலை கெட்டுதாம்.

கூச் கூச்னா நாய் கடவாய நக்கும்.

கூப்புட்டுச் சண்டைக்கி வருவா கோவிந்தம்பளத்தா
அழச்சிச் சண்டைக்கி வருவா ஆலாம்பளத்தா.

கூமட்டப் பொண்டாட்டியப் பிள்ளை மறைக்குமாம்
மொட்டக் கம்பஞ்சோத்த மோரு மறைக்குமாம்.

கூழுக் குடிச்சாலும் கொடுமை ஆவாது.

கேக்கிறவன் கேளையன்னா
கேழ்வரகில நெய்வடியுதும்பானாம்.

கேழ்வரகில நெய்வடியுதுன்னா
கேப்பாருக்குப் புத்தி எங்கபோச்சு.

கொங்கணாபுரம் கோழிக்கட்டு
கோமணத்த இறுக்கிக்கட்டு.

கொட்ட போட்டுக் கொட்ட மொளச்சு
கொட்டத்து ராசா பட்டத்து ராசா ஆகறது என்னிக்கி

கொடுமை கொடுமைன்னு கோயிலுக்குப் போனா அங்க
ரெண்டு கொடுமை தலைவிரிச்சுப்போட்டுக்கிட்டு ஆடுச்சாமா.

கொமரிப் பொண்ணு தனியாப் போனாலும் போவா
கொட்டாவி தனியாப் போவாது.

கொமுறி ஒரு நெறம்
கோடிஒரு நெறம்.

கொழந்த வேணுமின்னு கொடுமுடிக்குப் போனாலும்
சனியன் வந்து சாமத்துல நிக்குது.

கொழுத்துக் கொசவன்கிட்ட போனாளாம்
இழுத்துச் சூளைமேல போட்டானாம்.

கொளுத்தவன் கொள்ளுப் போடுவான்
எளச்சவன் எள்ளுப் போடுவான்.

கொளைக்குதாம்கொளைக்குதாம் கோழிக்குஞ்சு
அதுக்குமேல கொளைக்குதாம் கோழிக்குஞ்சு.

கோயில் சின்னதா இருந்தாலும்
கொட்டு மொழக்குச் சத்தம் பெரிசுதான்.

கோழி குருடானாலென்ன
கொழம்பு ருசியாயிருந்தாப் போதும்

சக்கிலிப்பயா சாமா உங்க வளவுல என்னடா சண்டை
கண்டமுண்டயக் கையில தொட்டு அதாஞ்சாமி தெனம் சண்டை

சக்கிலியனூட்ட ரக்கிரி மணக்குது
நேத்துப் பொறந்த புள்ள மாப்பிள்ளக்கு அழுவுது.

சகல ஒறவு சாவல வரைக்கும்

சலிச்சுப் புளிச்சு சக்கிலி ஊட்டுக்குப் போனா
சக்கிலி உளிய எடுத்துக் குத்துனானாம்.

சனிக்கிழம வெச்சா சாவலாப் பொறிக்கும்.
வெசாழக் கெழம வெச்சா வெடையாப் பொறிக்கும்.

சாகாத சோறும்
நோகாத வேலையும் செரியாயிருக்குமா.

சாத்துல பீ இறுத்தாப்ல.

சாமப் பயிரை முதிச்சாத் தெரியும்.
சக்கிலிப் புள்ள சமஞ்சாத் தெரியும்.

சாமியே சோத்துக்குத் தாளம் போடுதாம்
ஆண்டி பருப்புக்கு நெய் கேக்கறானாம்.

சாறுவடிஞ்ச கண்டாரோலி சாறேண்டி காச்சல
ஈருவடிஞ்ச இருண்டவாயா இருந்தாத்தான்டா காச்சுவன்.

சிக்கின முயல் சிறுசு
ஓடுன முயல் பெரிசு

சிக்குப்புக்கு வானமாம்
எம்புருசனத்தான் காணமாம்.

சுப்பனாத்தி சுட்ட பணியாரம் சுடுமா? சுடாதா?
சுப்பனுக்கு ஆளுட்டா வருவானா? மாட்டானா?

சும்மா இருக்க முடியாம
சின்னத்தம்பி பளையத்து வரைக்கும் போனாளாம்.

சும்மா கெடக்கறது போக்கடா
சுடுகாட்டு வரைக்கும் தூக்கடா.

செக்காங்கிட்டச் சிக்குன மாடும்
செட்டிக்கிட்டச் சிக்குன ஆளும் உருப்பிடியாவாதாம்.

செஞ்சாக் கூலி
செரச்சா மொட்டை.

செட்டிக்கு ஒரு சந்தை
திருடனுக்கு ஒரு அம்மாவாசை.

செட்டி புள்ளையிலே எது சின்னப்புள்ளே.

செத்தாத் தீட்டு செரச்சாத் தீட்டு.

செய்யற உடல் சேவேறும்
செய்யாத உடல் நோவேறும்.

செய்யற கட்ட சேவேறும்
செய்யாத கட்ட நோவேறும்.

செய்யற வேலைய உட்டுட்டு
செனையாட்டுக்கு மயிரு புடுங்கினானாம்.

சேலையில்லையினு சின்னாயா ஊட்டுக்குப் போனா
அவ கோரப்பாயக் கட்டிட்டு எதுக்க வந்தாளாம்.

சொல்லி குடுத்த பேச்சும்
கட்டிக்கொடுத்த சோறும்
எத்தன நாளக்கி இருக்கும்.

சோப்பலாங்கி புள்ள பெக்க சோத்து நேரமாச்சுதாம்
அதையெடுத்துக் குழிலபோட அடிசாஞ்சி போச்சுதாம்.

சோளச் சோறுன்னாக் கரைப்பானாம்
சிக்காட்டீன்னாப் பறப்பானாம்.

தடியெடுத்தவன் தண்டல்காரன்
கோலெடுத்தவன் கொண்டல்காரன்.

தண்ணிக்குள்ள உட்ட குசுவு
மேல வராத போயிடுமா?

தலவலியும் வவுத்துவலியும் தனக்கு
வந்தாத்தான் தெரியும்.

தழுங்கின பிள்ளைக்கு மனை பெரிசு
தாயில்லாப் பிள்ளைக்கு வவுறு பெரிசு.

தனக்குத் தனக்குனா
தம்புடுக்கும் களவெட்டும்.

தாக்கோழி போனா
பீக்கோழியும் போயிடும்.

தாதி இருக்கிற வீடும்
தாதரா இருக்கிற காடும் உருப்படாது.

தாய் வெச்ச பேரு தடத்துல நிக்குது
நாய் வெச்ச பேரு நடுவுல வெளங்குது.

தாயில்லாப் பிள்ளைக்கு
தலையெல்லாம் அறிவு.

தாராளம் தண்ணிபட்ட பாடு
நீச்சத் தண்ணி நெய்பட்டபாடு.

தாவித்தாவி வளர்த்தாலும் தம்புள்ள தம்புள்ளதான மோதிமோதி வளர்த்தாலும் மூத்தபுடிபுள்ள - மூத்தபுடிபுள்ளதான்.

திங்கில திங்கிலயின்னு தேருக்குப் போனானாம்
உங்குல உங்குலயின்னு ஊருக்குப் போனானாம்.

திட்டத் திட்டத் திண்டுக்கல்லு
வாத்த வாத்த வயிரக்கல்லு.

திருடம் பூந்த மூனாம் நாளு
கதவு முக்கரணம் போடுதாம்.

திருவாதரைக்கு ஒருவாக் களி
திருப்பிக் கேட்டா திருப்பியடி.

தில்லாமல்லிக்குக் கல்யாணம்
திப்பிலியோடு பனியாரம்.

தின்னு கொழுத்தவன் தேர் மேல திரியறான்
உண்டு கொழுத்தவன் ஊர் மேல திரியறான்.

துச்சனக்காரனுக்குப் பொச்சுல காயம்.

துப்பத்தவளை உப்பிலபாரு
சீரத்தவளை நீருலபாரு.

தூங்கிற மணியாரனை எழுப்பினா
பழைய கந்தாயங் கேட்பான்.

தேருந் திருநாளும் தேவிடியோட்ட குன்னாளு
மறுக்காத் திருநாளு மாமியோட்ட குன்னாளு.

தொட்ட பண்டம் தொலங்கும்
வெச்ச பண்டம் வெளங்கும்.

தொட்டவன் மேலே எட்டுப்பழி.

தொட்டுட்டுப் போயி முட்டினா விடாது.

தொழில் கெட்ட பார்ப்பான்
தொரவுபதியக் காவக் காத்தானாம்.

நக்கரத்துக்குக் கெடக்கீல்லனா
நாய் சிவலிங்கத்த நக்குமாம்.

நண்டுக்கு ரத்தம் இருக்காது
பள்ளிக்குப் பத்தம் இருக்காது.

நத்தக்காட்டுக் கம்பு வந்து எத்திப் போச்சாம் ஓடிப்போன பொண்டாட்டி வந்து கூடிப் போனானாம்.

நந்தவனம் சுத்திவர நாளாறு போவோனும்
பூங்காவனம் சுத்திவரப் பொழுதாறு போவோனும்.

நந்தவனமறியுமா தொண்டி மாடு
நாயறியுமா ஒரு சந்திச் சோறு.

நம்ம பொச்சிருக்கற லட்சணத்துக்கு
மத்தியானத்துல பீ கேக்குதாம்.

நரிச் சத்தம் கடல் எத்தும்.

நரியக் கொண்டாந்து நடூட்ல வெச்சாலும்
ஊளையுடற புத்தி போகாது.

நல்ல மழ பெய்யில நாடுசெழிக்கல
கொள்ள மழ பெய்யில கோடுபாடு வெளையில.

நல்ல ஒடம்புக்கு நாலு சொப்பு தண்ணி.

நல்ல வாயன் சம்பாரிக்க
நாரவாயன் தின்னுபாக்க.

நாய்க்கொரு புண்வந்தா நக்கி நக்கிப் பார்க்குமாம்
கோழிக்கொரு புண்வந்தா கொத்திக் கொத்திப் பார்க்குமாம்.

நாயைக் கூப்பிடுற நேரம்
நரகலை அள்ளி எறிஞ்சிரலாம்.

நாயைக் கொண்டாந்து நடூட்ல வெச்சாலும்
வால ஆட்டிக்கிட்டுப் பீ திங்கதான் போகும்.

நாயோட ஆசை பீயோட.

நாயோடு படுத்தா உண்ணியோடதான்
எழுந்திருக்க வேணும்.

நீட்டு வெத்தல காவியேறுமா?
வெளக்காணிச் சோறு வீக்கம் தெரியுமா.

நீரைக் கடைந்தால் மோராகுமா?
நீலி சொல்லு நிசமாகுமா?

நீலிக்குக் கண்ணீர் நெத்தியிலே.

நேத்து வந்தவ நெய்யூத்தித் திங்கறா
ஆதீல வந்தவ வீதில நிக்கறா.

நோம்பி நோம்பினு நோங்கினாராம் பல்லியாரு
காலப் பரப்பிக்கிட்டு காட்டுனாராம் பல்லியாரு.

பங்கக்கெடக்குது பாளையிலே
படுத்துக் கெடக்குது மூளையிலே.

பங்காளி பழியெடுப்பான்.

பச்சக் கொத்து மல்லிய நெம்பு கடிச்சுதாமா
கூட இருந்தவன் குழியில விழுந்தானாமா.

பசி ருசியறியாது
நித்திரை சுகமறியாது.

பட்டாத்தான் தெரியுமாம் பறையனுக்கு
இட்டாத்தான் தெரியுமாம் எடையனுக்கு.

பட்டிக்குப் போடா சுப்பான்னா
பயமாயிருக்குதுடா அப்பாம்பான்
சோறு இருக்குதுடா சுப்பான்னா
உனக்கு முந்திடா அப்பாம்பான்.

பட்டுமேல பட்டுடுத்தி பட்டணம் போற பெண்ணே
பட்டுவெல என்னவெல
செட்டியாரு சொன்ன வெல.

பண்டாரம் பருப்புச்சட்டிகூட
லொட லொடங்குதாம்.

பண்ணெயக்காரனுக்கும் பண்ணையக்காரிச்சிக்கும்
பருப்பு மத்தாளம்.
பட்டியில கெடக்குற நாய்க்குத் திடுப்பு மத்தாளம்.

பணக்காரன் பீத்தின்னா வவுத்து வலிக்கும்பாங்க
இல்லாதவன் பீத்தின்னா சோத்துக்கில்லீம்பாங்க.

பணியாரத்தைத் திங்கச் சொன்னா இவன்
குழிய எண்றானாம்.

பத்துத்தாய் இருந்தாலும்
பெத்ததாய் ஆகுமா?

பந்தக்காலுக்கெல்லாம் சாமி வந்தா
எந்தக் காலப் பேய்க் கட்டறது.

பல்லப் பல்ல இளிச்சா
பறையனும் மதிக்க மாட்டான்.

பறச்சிகிட்ட தாலி வாங்கிப் போட்டுகிட்டுப் போனாளாம்
சுடுசோறு திங்கயில
அட்டா தங்கம் உருகிப் போச்சுனாளாம்.

பனமரத்து நிழலுஞ்சரி பாப்பாத்தி உறவுஞ்சரி.

பனைவெச்சவன் பாத்திட்டுச் செத்தான்.
தென்னை வெச்சவன் தின்னுட்டுச் செத்தான்.

பாப்பான் சம்பாதிப்பது பிண்டத்துக்கு
துலுக்கன் சம்பாதிப்பது துண்டத்துக்கு
கவுண்டன் சம்பாதிப்பது தண்டத்துக்கு.

பாம்புக்கு விசம் பல்லுலே
பாப்பானுக்கு விசம் நாக்குலே.

பாம்பு திங்கற ஊருக்குப் போனா
நடுக் கண்டம்தான் நமக்குங்கோனும்.

பாம்பை நம்பினாலும் பார்ப்பான நம்பாதே.

பாவம் புண்ணியத்துக்குப் பழைய சீலயக் குடுக்க
பொடக்காலியில போயி இழுத்து இழுத்து மொழம் போட்டாளாம்.

பிலுக்கு வருது பிலுக்கு வருது பிள்ளயப் புடி
எனக்குநான் பிலுக்கு வருது கீழ போடு.

பிள்ள சிறுசுன்னா பூசையுமா சிறுசு.

பிள்ள நல்லது பீ கெட்டதாம்.

பிள்ளப் பெத்த ஊடும்
பிச்ச இட்ட ஊடும்
என்னைக்கும் கெடாது.

பீக் கெடக்கத் தின்னாலும்
பொணம் கெடக்கத் தின்னுவாங்களா?

புருசனக் கட்டிப் பேயானேன்
பிள்ளயப் பெத்து நாயானேன்

பூன எளச்சுதுனா எலி வா
கிச்சுக் கிச்சுத் தாம்பளம்
வெளையாடலாமாங்குமாம்

பூன மயிருனாலும் புடுங்கினது மிச்சம்.

பூனை கண்ட பாலும்
பொம்பளை கண்ட காசும் தங்காது.

பெருங்காய மிட்ட பாளையிலும்
பொழச்சுக் கெட்ட வீட்டிலும் வாசம் போகுமா?

பெருந்தலைக் காக்கா பீதின்னப்.போச்சாம்
பொங்கெல்லாம் பீயாச்சாம்.

பெருமைக்குச் சொன்னா
எருமைக்கு பில் ஆகுமா.

பேஞ்சாப் பீயி
காஞ்சாப் பாறை

பேயானாலுந் தாய்னு ஒன்னு வேணும்.

பொண்ணப் போர்த்தி வளர்த்தோனும்
ஆண அடிச்சி வளர்த்தோனும்.

பொம்பள கையில ஆட்சியக் கொடுத்தா
அம்பலத்துல தான் நிக்கோனும்.

பொம்மி குத்துனா என்ன திம்மி குத்துனா என்ன
நம்மளுக்கு அரிசி வந்தாச் சரி.

பொழக்கறாப்பல பொழச்சு
பொறி ஒட்டுக்காவாம போயிடுவாங்க
வாழறாப்பல வாழ்ந்து
வாய்க்கரிசிக்காம போயிடுவாங்க.

பொழச்ச ஊடு கெட்டா பொறியோட்டுக்குக் கூட
ஆவாது
வாழ்ந்த ஊடு கெட்டா வாயோட்டுக்குக் கூட
ஆவாது.

மடலோலையப் பாத்துக்
குருத்தோலை சிரிச்சுதாம்
குருத்தோலை மடலோலையாவரதுக்கு
எத்தனை நாளாகும்.

மயிரப் புடுங்கித் தயிரக் கடை.

மலையளவு தரித்திரம் இருந்தாலும்
கடுகளவு யோகம் வேணும்.

மழைப்பேறும், பிள்ளைப்பேறும்
மகாதேவனுக்குக்கூடத் தெரியாதாம்.

மனஞ்சலிச்சா மண்டையெல்லாம் புழுக்கும்.

மனுசன் பகைச்சா இருக்கலாம்
மாரி பகைச்சா இருக்கமுடியுமா?

மாசம் வரவர மனமடச்சுப் போயிரும்
நாளு வரவர நாவடச்சுப் போயிரும்.

மாடு கண்டா ஒதுங்காம
மனசங் கண்டாப் பேசாம.

மாடு மிதிச்ச பொணம்
மந்தையில செத்த பொணம்
கோழி மிதிச்ச பொணம்
குப்பையில செத்தபொணம்

மாத்துல வளையாதது மரமாகியா வளையப்
போவுது.

மாப்ள செத்தா என்ன
பொண்ணு செத்தா என்ன
மாலைப் பணம் வந்தாச் சரி.

மாமியாளுக்குச் சோறுபோட்டா வெட்டி
திண்ணைக்கு மண்ணிட்டாக் கெட்டி.

மாலை சுத்திப் பொறந்தா மாமனுக்கு ஆகாது.
கொடி சுத்திப் பொறந்தாக் குடும்பத்துக்கு ஆகாது.

மாவிடிச்சவ மங்காணி
கப்பியிடிச்சவ புண்ணியவதி

முட்டையிடுற கோழிக்குத்தானே சூத்தருமை
தெரியும்.

மூப்பனுக்கு ஏறும்போது ஒருபுத்தி
இறங்கும்போது ஒரு புத்தி.

மேட்டாங்காட்டை உழுதவனும் கெட்டான்
மேனா மினுக்கியக் கட்டினவனுங் கெட்டான்.

மொந்த ஊதத் தெரியாதவன்
மொடாவுக்கு அச்சக்கெரயம் வாங்கலாமா.

யோக்கிதமான சரக்கு
ஒண்டிக்கடை பாத்து எறக்கு.

ரட்டும் பொட்டும் விட்டைக்கு ஆதரவு.

ரோசங் கெட்டான்
மழுங்கன் பொழச்சான்.

வட்டிக்குக் கொடுத்த காசு
வாய்க்கரிசிக்குக் கூட ஆகாது.

வத்துச்சாங் கள்ளு வறண்டாளம் சானாத்தி
ஊறுச்சாங் கள்ளு உதுச்சாளாம் சானாத்தி

வந்தது சண்டை இழுத்தது கொண்டை.

வரப்புளுகன் காட்டிலே
கடுகு மொடாச்சோடு.

வலுத்தவனுக்குத்தான் வாழை.

வவுத்துல மாத்தான் வாயில புள்ள.

வழவழத்தான் கம்மஞ்சோறு வட்டலுக்குக் கேடு
வாழாவெட்டிப் புருசன் கட்டலுக்கு கேடு.

வழிதெரியாத வண்ணாங்கிட்டப் போயிட்டா
விடிய விடிய வெள்ளாவி வைக்கோணுமாம்.

வாங்கித் தின்னமோ
வீங்கிச் செத்தமோ.

வாயக்கட்டினா புள்ள
வவுத்தக் கட்டினா புருசன்

வாழப் பழத்தோட போனவ வாசல்ல நிக்கறா
வெறுங்கையோட போனவ நடுவூட்ல இருக்கறா.

வான்னு கேட்க வாயில தாம்பளம்
இருன்னு சொல்லவும் ஊட்டுல ஈரம்.

விசயம் இல்லாம நாய்
நசியம் எடுக்காது.

வீடுவெந்து ஓவுத்திரியப்பட்டுக் கெடக்கிறேனாம்
ஓலவாயன் வந்து பொண்ணுக் கேட்கறானாம்.

வீடே பத்தீட்டு எரியுது
இவன் பீடிக்கு நெருப்பு கேக்கறான்.

வீம்புக்குச் சூரிய முழுங்குனா
பொச்ச கிழிச்சிட்டுத்தான் வரும்.

வெந்த கொள்ளுப் பொளந்தாப்பல
வேவிச்ச கொள்ளு இளிச்சாப்பல.

வெள்ளாக்குட்டிக்குப் பாலு குடுக்கக் கூடாது
வேட்டுவனுக்குச் சோறு போடக்கூடாது.

வெள்ளாளன் சம்பாதிச்சது வேலியில
செட்டி சம்பாதிச்சது பொட்டியில.

வெளிய போனா வெக்கமாக் கெடக்குது
தூரப் போனா துக்கமாகக் கெடக்குது.

வெளிய மினுக்கு உள்ள நொடக்கு.

வெளுத்தது பாலு
கருத்தது தண்ணீரு.

வெறும் பொச்சு அம்மணம்
போட்டுக்க சம்மணம்.

வேம்பு வெட்டிக் கெட்டுதாம்
வேலான் வெட்டாத கெட்டுதாம்.

வேலச் சமயம் வந்து வெளிய போவ நேரமில்ல
அக்கா பிள்ள சமஞ்சிருக்கறா அங்க போவ நேரமில்ல.

வேல சொன்னாத்தான் பேழ வருமாம்.

ஜாடாப் புருசன் சந்தையிலே
எம்புருசன் மந்தையிலே.

*நீண்ட*
காலத்தையும் பலரின்
கூட்டுழைப்பையும்
வேண்டி நிற்கும்
இத்தகைய
வேலைகளைப்
பல்கலைக்கழகம்
போன்ற அரசு
நிறுவனங்களோ
பணவசதிகொண்ட
தன்னார்வக்
குழுக்களோ
செய்வதுதான்
இயல்கிற செயலாக
இருக்கும். ஆனால்
பல்கலைக்கழக
வளாகம் அதிகார
அரசியலாலும்
பொறாமைகளாலும்
அறிவுச் சுரண்டாலும்
பணம் வரும்
வழிகளைக்
கண்டுபிடிக்கும்
ஆய்வுகளாலும்
நிரம்பிக் கிடக்கிறது.
எட்டு ஆண்டுகள்
பல்கலைக் கழக
வள்ாகத்தில்
இருந்தவன் நான்.
ஆனால் கல்விப்
புலங்கள் குறித்த
பெருமை எதுவும்
எனக்கில்லை.
பல்கலைக்கழகம்
பற்றி என்னுள்
அருவெறுப்பே
மண்டிக்கிடக்கிறது.
தமிழின் வளத்திற்குத்
தனிமனித
முயற்சிகளே
காரணமாக
அமைந்திருக்கின்றன.

**கக்கல்** - *பெ.* ***நாள்பட்ட எண்ணெயிலிருந்து எழும் (கெட்ட) வாசம்.*** 'எண்ணெயக் கக்கலடிக்கிற வெரைக்குமா வெச்சிருப்பாங்கொ.'

**கங்கிடி(த்தல்)** - *வி.* ***காண்க: அல்ல வெட்டுதல்.***

**கங்கு** - *வி.* **விளிம்பு.** 'கெணத்து கங்குல நிக்கிறான் எனக்கே பகீர்னுடிச்சி'.

**கச்சல்** - *பெ.* ***குழப்பம்; தாறுமாறு.*** 'அந்தக் குடும்பம் ரொம்பக் கச்சலாக் கெடக்குது.'

**கச்சாயம்** - *பெ.* ***அரிசி மாவும் வெல்லமும் கலந்து எண்ணெயில் வேக வைக்கும் இனிப்புப் பண்டம்.*** 'கச்சாயம் சுடறவ கருத்தாளி' (பழமொழி)

**கட்டக்கவுறு** - *பெ.* ***கட்டில் கயிறு. கட்டில் கட்டுவதற்காக நூல், கற்றாழை நார் போன்றவற்றைக் கொண்டு திரிக்கும் கயிறு.*** 'கட்டக்கவுறு ஒரு சுருண இருந்தாக் குடு.'

**கட்டக்கொடி** - *பெ.* ***திண்மையான தண்டுடைய ஒருவகைக் கொடி (இதனைக் கொண்டு மாடுகளுக்கு வாய்க் கூடை பின்னலாம்) கட்டுவதற்கும் கயிறு போலப் பயன்படும்.*** 'கட்டக்கொடியில பின்னுன வாக்கூடைடா இது.'

**கட்டச்சட்டம்** - *பெ.* ***1. கட்டில் சட்டம்; கட்டில் குத்துக்கால்களை இணைக்கும் மரச் சட்டம்.*** 'கட்டச் சட்டம் ஒடஞ்சிரப் போவுதுடா, அதுமேல உக்காராத.'

**கட்டவெட்டி** - *பெ.* ***கட்டை வெட்டி, நிலத்தில் தங்கிவிட்ட மரம் செடி ஆகியவற்றின் அடிக்கட்டைகளை வெட்டி எடுக்கப் பயன்படும் கருவி.*** 'கட்ட வெட்டி இருந்தாக் கொஞ்ச நேரத்துல பேத்து எடுத்தரலாம்.

**கட்டாப்பு** - *பெ.* ***1. தடவை.*** 'இந்தக் கட்டாப்பு அவ பொழச்சதே பெரிசு.' ***2. சுற்றிலும் ஆள் சேர்த்துக் கொண்டு சண்டைக்கு வருதல்.*** 'கட்டாப்புக் கட்டிக்கிட்டுச் சண்டைக்கு வர்ராங்க.'